கழக வெளியீடு: அஎசு

# நீதி நூல் விளக்கக் கொத்து

## இரண்டாம் புத்தகம்





ஆசிரியர் :
கழகப் புலமையாளர், வித்துவான்,
திரு. பெ. பழனிவேல பிள்ளை




திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி. :: சென்னை-1.

First Edition: Feb., 1957.

NEETHINOOL VILAKKAK KOTHTHU—II



*Published by*

THE SOUTH INDIA SAIVA SIDDHANTA WORKS PUBLISHING SOCIETY, TINNEVELLY, LTD., 1/140, BROADWAY, MADRAS-1.

*Head Office*:

98, EAST CAR STREET, TIRUNELVELI.

Appar Achakam, 2/140, Broadway, Madras-1.—C. 500.

# பதிப்புரை

தமிழ்மொழியில் நீதி நூல்கள் தகுதியாக அமைந்திருக்கின்றன. தமிழ்நாடு தொன்மையான நாகரிக வாழ்க்கையுடையதாகலின் தக்க நீதிநூல்கள் தமிழ்மொழியில் தோன்றியுள்ளன.

ஆத்திசூடி முதலாகத் தொல்காப்பியம் ஈருக உள்ள நீதிநூல்கள் யாவற்றிற்கும் ஆய்வு நூல்கள் வெளியிடின் மக்களின் பண்பாடும், நாகரிகமும் உயரும் என்ற கருத்துடன் கழகவழி ஒரு சில ஆய்வு நூல்கள் முன்னரே வெளியிட்டோம். இவ்வகையில் வெளிவந்தனவே நாலடி இன்பம், குமரகுருபரர் காட்டியவழி ஆகிய இரு நூல்களும்.

தற்போது இவ்விரு நூல்களையும் ஒன்ருகத் தொகுத்து நீதிநூல் விளக்கக் கொத்து - இரண்டாம் புத்தகம் என்ற பெயரமைத்து நூல் நிலையங்கட் கேற்றவாறு அழகிய கட்டடம் செய்து வெளியிடுகின்ருேம். தமிழகப் பெருமக்களும், நூல்நிலையக் காப்பாளரும், பிறரும் இத்தகு நூல்களை வாங்கியும், வாங்குவித்தும் நுண்பொருள் நுகர்ந்து இன்புற்றுப் பயன்பெறுவார்களாக.

**சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.**

# உள்ளுறை

கழக வெளியீடு, ௪௯௫

# நாலடி இன்பம்



வித்துவான்

பெ பழனிவேல பிள்ளை அவர்கள்

எழுதியது



திருநெல்வேலித் தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,

திருநெல்வேலி-6. சென்னை-1.

1960

# பதிப்புரை

நந் தமிழ் மொழியில் அமைந்துள்ள பழந்தமிழ் நூல்கள் பலவற்றையும், கற்றறிந்த ஒரு சிலரே பயன்கொள்ளும் இக்கால வியல்பொழித்துத், தமிழ்மக்கள் எல்லாரும் உணருமாறு, அந் நூற்பொருளை எளிய முறையில் எடுத்துக்காட்ட வேண்டுவது இக்காலத் தமிழ் வல்லார் கடமையாக இருக்கின்றது. இம்முறையால் நாட்டுமக்கள் எல்லாரும் பழந்தமிழ் நூற் பொருளைப் பயன்கொண்டா லல்லாமல், அப்பழந் தமிழ் நூல்கள் நாட்டில் நிலவுவதால் சிறந்த பயனில்லை. உலகெங்கும் கட்டாயக் கல்விமுறை மேற்கொள்ளப்படு மிக்காலத்து, இத்தகைச் செயல்களே நாட்டு மக்கட்குக் கல்வியில் மேன்மேலும் அவாவைத் தூண்டி, அவர்களைக் கல்வியில் சிறந்தோராக்கிப், பல நாட்டு மக்களுள்ளும் மேம்பட்டோராகத் திகழச் செய்யும் பழந் தமிழ் நூல்களால் பழந்தமிழ்ப் பண்பாட்டை உணர்வதிலும், புதுவதாகப் பல நாட்டின் கண்ணும் தோன்றியிருக்கின்ற அறிவு நூல்களை அறிவதிலும் கருத்துச் செலுத்தினல் அல்லாமல், தமிழர் பண்டுபோல் சீரும் சிறப்பும் பெற்று வாழ்தல் இயலாது.

இனிப் பழந்தமிழ் நூலுள், மக்கட்கு உயிரெனத் திகழும் ஒழுக்கத்தினைக் கற்பிக்கும் பலவான தமிழ் நூல்களில், "நாலும் இரண்டும் சொல்லுக் குறுதி" எனத் தமிழரால் போற்றப்படுவன நாலடியார் திருக்குறள் என்னும் இரண்டுமேயாம். இவ்விரண்டினுள் முதற்கண்ணதான நாலடியின் நயஞ் சிறந்த பாடல்கள் கூறும் பொருளையும், அவை கூறிச்செல்லும் எளிய முறையினையும், அவை பயில்வோர்க்கு இன்பஞ்செய்து நிற்குமாற்றையும் புலப்படுத்திக்காட்டுவதாய் "**நாலடி இன்பம்**" என்னும் இந்நூல், **கழகப்புலமையாளர், வித்துவான், பெ. பழனிவேலபிள்ளை** என்பாரால் இயற்றப்பெற்று வெளிவருகின்றது. இது தமிழ் மாணவர்க் கொரு விருந்தாகும். இதைப் பயில்வார் நாலடியில் நயஞ்சிறந்த பாடல்கள் பொருள்களை உணர்த்திச் செல்லற்கண் காணப்படும் இனிமையை உணர்ந்து மகிழ்வதுடன், அந்நூலை எளிதில் முற்றவும் கற்கவும் இது துணை செய்யும். தமிழார்வம் மிக்கார் ஒவ்வொருவர் கையிலும் இருக்கத் தக்கதான இந்நூலைத் தமிழர் ஏற்று, இத்தகைப் பணிகளில் எம்மை ஊக்கி, மேம்படுவாராக.

**சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.**

# உள்ளுறை



---

# நாலடி இன்பம்



## க. தோற்றுவாய்

அறிவு மேம்பட்ட மக்கட்கூட்டத்தார் தம் வாழ்க்கையை மேன்மேலும் உயரியதாகச் செய்துகொள்ள விழையும்போது, தம் முன்னோரின் அடிப்பட்ட பண்பாடுகளை உணர்தல் இன்றியமையாத தாகும். அங்ஙனம் தம் பண்டைப் பண்பாட்டை மறந்து புதியனவற்றிலேயே கருத்தைச் செலுத்தும் மக்கட் கூட்டம் அடிப்படையும் உரமும் இழந்து வலிமை குன்றியே விடும். அக் கூட்டம் உலகில் சிறந்து தோன்றுதலில்லை. ஒரு மக்கட் கூட்டத்தின் பண்பாடாவது, அம் மக்கள் அறிவு விளக்கம் பெற்ற தொடக்க நிலையிலிருந்து படிப்படியே வளர்ந்து, அவர்தம் வாழ்க்கையின் உயிர் போன்று அமைந்த நல் இயல்புகளாகும். இப்பண்பாட்டின் உயர்வே ஒரு மக்கட் கூட்டத்தின் உயர்வாகும் என்க.

ஒரு சிலர் தம் நிலை மறந்து வேற்று நாட்டாரின் பண்பாடுகளே சிறந்தனவென்று கொண்டு அவர் போல் நடிக்க முற்படுகின்றனர். இதனால், அவர் தம் நிலை இழப்பதுடன் பிறர் நிலையும் எய்த இயலாது வீணே உரமின்றி ஒழிகின்றனர்.

இனி முன்னேற்றங் கருதுவோர் பழமையைப் பார்த்தல் எதற்கென்று கூறுவர். பழமையின் அடிப் படையில்லாமல் புதுமை உண்டாதல் இயலாது. பழ மையுடன் சேர்ந்த புதுமையே அவைகளின் உள்ளீடா கிய உயிர்த் தன்மையால் தொடர்புற்று நெடிது நிற் கும். அங்ஙனம் சேராத புதுமை அடிப்படையற்ற கட்டிடமேபோல் வீழ்ந்தொழியும்; உயிரற்றதாகும்.

இனிப் பழங்காலம் எல்லாம் அறிவொடுபடாத காலமென்றும், வருங்கால மெல்லாம் அறிவு நிறைந்த காலமென்றும் நினைப்போரும் உளர். இவ்வுலகில் அறி வின் வளர்ச்சியால் மேலான வாழ்க்கைமுறை உயர்ந் தும் விழுந்தும் காலச் சுழலால் மறைக்கப்பட்டிருக்கி றது. அறிவின் மேம்பாட்டால் ஐம்பூதங்களையும் இயக் கிய அறிவோரும் முன் காலத்தில் இருந்தனர். மொகஞ் சதரோ, அரப்பா முதலிய இடங்களில் நடைபெறும் ஆராய்ச்சிகள் முற்கால மக்கள் வாழ்க்கையின் ஏற்றத் தையும், அழிவையும் உணர்த்துவனவாம்.

இனி இப் பண்டைத் தமிழரின் பண்பாட்டை உணர்தற்குப் பெரும் புலவோர்கள் இயற்றிய செந் தமிழ் நூல்களே உறு கருவியாம் என்பது கூற வேண்டு வதன்று. 'உலகம் என்பது உயர்ந்தோர்மாட்டே' என் பதற்கியைய அன்னோரே மக்கள் வாழ்க்கைக்கு வழி காட்டியவரும் வழி காட்டுபவரும் ஆவர்.

பண்டைப் பெரும் புலவர்கள் இயற்றிய நூல்கள் பலவும், ஆராயின், மக்கள் நல் வாழ்க்கையே நோக்க மாகக்கொண்டு கூறப்பட்டிருப்பினும், வாழ்க்கை முறைக் கேற்ற அறவுரைகளையே சிறப்பாக எடுத்துக் கூறும் நூல்களும் பல உள.

தமிழரின் தொடக்க கால முதற்கொண்டு நிலவிய பல நூல்களில் முதற் சங்க கால நூல்களும் இடைச் சங்ககால நூல்களும் இந்நாள் இறந்தனவாகக், கடைச் சங்ககாலத்து வழங்கிய சில நூல்களும் பிற்கால நூல்களும் இக் காலத்து நம் கைக்குக் கிடைத்திருக் கின்றன.

இந்நூல்களுள் மக்கள் வாழ்க்கைமுறையை வகுத்துக் காட்டுவதாய், ஒரு மணி விளக்கைப் போன்று ஒளிர்வது "திருக்குறள்" என்னும் ஒப்புயர்வற்ற செந் தமிழ் நூலாகும். இந்நூலைத் திருவள்ளுவர் என்ற ஒப்பில் புலவோர் தம் அஃகி அகன்ற அறிவின் திறத் தால் செய்தனராயினும், தாம் தோன்றிய தமிழ்க் குடியின் விழுமிய பண்பாடும், தம் காலத்து மிகப் பல வாய் நிலவிய ஒழுக்க நூல்களும் அவர்க்குப் பெரிதும் துணையாய மைந்தன என்பதை மறுத்த லியலாது. இங்ஙனம் திருக்குறளுக்கு முன்னும் பின்னும் பரந்து பட்ட பல ஒழுக்கநூல்கள் தமிழில் தோன்றி விளங்கிய வற்றுள் நாலடியாரும்ஒன்று. இந்நூல் தமிழ் நாட்டில் சமண் சமயம் உயர்நிலை எய்திய காலத்துத் தோன்றிய தாகும்.

"நாலும் இரண்டும் சொல்லுக்குறுதி" என்று வழங்கப்படும் முதுமொழியிலிருந்து இது திருக்குற ளோடொத்த உயர் சிறப்புடையது என்பது நன்கு விளங்கும். திருக்குறளும் நாலடியாரும் ஒவ்வொரு வகையில் தனிச்சிறப்புடையன என்பதை, ஆராயின் உணரலாம். திருக்குறள் சுருங்கிய மொழியில் பரந்த ஒழுக்க முறைகளைத் தெள்ளிதின் விளக்கிக் காட்டுவது. நுட்ப திட்பங்களையே குறிப்பாகக் கொள்ளாமல்,

நாலடி, குறித்த சில சிறந்த பொருள்களை, மக்கள் மனங் கொள்ளுமாற்றால், பல உவமைமூலம், எளிய முறையில் விளக்கிச் செல்கிறது.

இந் நாலடியின்கட் காணப்படும் சிறந்த மக்கள் ஒழுகலாறுகளையும், பழங்காலத்தில் இயற்கைப் பொருள்களைக் கண்டு நுகர்ந்து அவைகளை இனிய உவமைகளாக வைத்து அமைத்துக் காட்டிய திறத்தினையும், அக்கால நிலையினையும், சமண் சமயத்தவர்தம் சிறந்த போக்குகளையும் ஓராற்றால் நோக்கியுணர்வாம்.

---

## உ. நாலடி ஆசிரியர்

நாலடிச் செய்யுட்கள் ஒரே புலவராற் செய்யப்பட்டன அல்ல என்பதும், அவை பல புலவராற் செய்யப் பட்டன என்பதும் வரலாற்றுவழி வரும் உண்மை யாகும்.

(1) "நல்லோர் அருள்செய்த நாலடி நானூற்றின்
சொல்லோர் பொருளனைத்தும் தோன்றியதே
சான்றோர்கள்

(2) எல்லாரும் கூடி எடுத்துரைத்த—சொல்லார்ந்த
நாலடி நானூறும்."

என்னும் பழம் பாடலின் அடிகள், நாலடிச் செய்யுட்கள், பல சான்றோராற் செய்யப்பட்டன என்பதைக் குறிப்பித்துச் செல்லுமாறு காண்க.

இனி, இந்நாலடிச் செய்யுட்களைச் செய்த பல புலவர்களும் சமண் சமயச் சார்பின ரென்பதும் வர லாற்றுவழிவரும் மற்றோ ருண்மையாகும்.

"எண்பெருங் குன்றத்(து) எண்ணாயிரம்இருடி
பண்பொருந்தப் பாடியபா நானூறும்."

என்னும் பாடலும் நாலடியாரைக் குறித்து வரும் ஒரு பழம் பாடலாகும். நீலகிரி, கிரவுஞ்சம், கோவர்த்தனம், திரிகூடம், காஞ்சி, யானைமலை, ஏமகூடம், விந்தம் என்ற எட்டு மலைச் சாரலில் சமண முனிவர் எண்ணாயிரவர் வாழ்ந்து வந்ததாகக் கூறப்பெறுகின்றது. ஆதலின் மேற்குறித்த பழம் பாடலுள் கூறப்பட்ட "இருடிகள்" சமண் முனிவரைக் குறிப்பதாக உணரப் படுகிறது.

இனி, நாலடிச் செய்யுட்களை நோக்குமிடத்தும், அவை சமண் சமயச் சார்பினரால் செய்யப்பட்டன வென்பது நன்கு விளங்கிக் கிடக்கின்றது. சமண் சமயத்தோர் இல்லறத்தினும் துறவறத்தையே சிறந்ததாகக் கொண்டவர். இக் கருத்தைச், சமண் சமயம் புக்கிருந்து பின் சைவ சமயப் பெருநெறி நின்று சிறந்த நாவுக்கரசப் பெருந்தகையாரின் திருவாக்கு உணர்த்துவதும் பெரிதும் நோக்கத் தக்கது.

"மற்றிடம் இன்றி மனைதுறந்(து) அல்உணா வல்அமணர்
சொற்றிடம் என்று துரிசுபட் டேனுக்கும் உண்டுகொலோ
விற்றிடம் வாங்கி விசயனொ டன்றொரு வேடுவனாய்ப்
புற்றிடங் கொண்டான்றன் தொண்டர்க்குத் தொண்டராம்
புண்ணியமே."

இதற்கேற்பவே, நாலடி பலவிடத்தும் துறவறத்தையே சிறந்தெடுத்துக் கூறிச் செல்கிறது.

"நரைவரும் என்றெண்ணி நல்லறி வாளர்
குழவி யிடத்தே துறந்தார்."

என்று கூறிச் செல்லுமாற்றைக் காண்க. துறத்தற்கு உற்ற பருவமாகக் "குழவிப்" பருவத்தைக் குறிப்பிட்

டுத், துறவை விரைந்து கைக்கொள்ளுமாறு வலியுறுத்திய நயத்தைக் காண்க. துறவையே பெருநெறியாகக் கொண்டதாலேயே, துறவறத்துய்க்கும் முறையில், நிலையாமையும் பலவிடத்தும் பலபடக் கூறி உணர்த்தப்படுகிறது. இல்லறம் ஓரிடத்துத்தானும் சிறந்தெடுத்துக் கூறப்படவில்லை. அதற்கு மாறாக மணத்தைக் கடிந்தும் கூறுகிறது ஒரு நாலடி.

"மாண்ட குணத்தொடு மக்கட்பே றில்லெனினும்
பூண்டான் கழித்தற் கருமையால்—பூண்ட
மிடியென்னும் காரணத்தின் மேன்முறைக் கண்ணே
கடிஎன்றார் கற்றறிந் தார்."

"மணத்திற்குக் 'கடி' என்னும் பெயர் அமைந்ததுதானும், அது அறிவோரால் கடியத்தக்க தாதலின், அதுகுறித்தேயாம்" என்று குறிப்பிட்டவாறு காண்க.

இனி, நாலடியில் ஒரு செய்யுள் வடநாட்டை உயர்த்தியும், தென்னாட்டைத் தாழ்த்தியும் கூறிச் செல்கிறது. இது, தஞ்சமயம் தோன்றிய நாடான வடநாட்டைச் சிறந்ததாக எண்ணிய சமண் சமயத்தவர்தம் மனப் பாங்கினையே காட்டுவதாகும். அந் நாலடி வருமாறு:—

"எங்கிலத்து வித்திடினும் காஞ்சிரங்காய் தெங்காகா
தென்னாட் டவரும் சுவர்க்கம் புகுதலால்
தன்னாற்றான் ஆகும் மறுமை வடதிசையும்
கொன்னளர் சாலப் பலர்."

"தென்னாட்டவரும் சுவர்க்கம் புகுதலால்" என்றமையால், 'வடநாட்டவர் சுவர்க்கம் புகுதலே இயல்பு' என்பது அக்காலத்துச் சமணரிடையே பரவியிருந்த ஒரு கொள்கை என்பது தெளியக் கிடக்கிறதன்றோ?

இனி, மற்ருெரு நாலடி, கொள்வாங்குவோனை உவமையாக அமைத்துக் கூறிச் செல்கிறது. கொள்ளுக் கஞ்சி அக் காலத்துச்சமண் சமயத் துறவிகளுக்குச் சிறந்த உணவாயிருந்த தென்று கூறப்படுகிறது. கொள் வாங்குவோனை உவமையா யமைத்துக் கூறிய தன்மையை நோக்க, அது சமண்சமயச் சார்பினரால் செய்யப்பட்ட தென்பது துணியப்படு மன்ருே?

"கருங்கொள்ளும் செங்கொள்ளும் தூணிப்பதக் கென்(று)
ஒருங்கொப்பக் கொண்டானும் ஊரன்—ஒருங்கொவ்வா
நன் னுதலார்த் தோய்ந்த வரைமார்பன் நீராடாது
என்னையும் தோய வரும்.''

பொது மகளிரைக் கூடிக்களித்த தலைவன் நீராடாது தன்னையும் கூட வருகின்ருன் என்றுரைக்கும் தலைவி, ''உயர்ந்த செங்கொள்ளையும் இழிந்த கருங்கொள்ளையும் ஒப்பக்கருதி ஆறு மரக்கால் என்ற ஒரே விலைக்குக் கொண்டானும் ஒரு நாட்டுப்புறத்தான்'' என்று கூறி, நாட்டுப்புறத்தானைத் தலைவனுக்கு ஒப்புமை கூறினுளாகக் கூறப்பட்டவாறு காண்க.

சமண் சமயச் சார்புற்ற பெருந் தமிழ்ப் புலவோர்களால் இயற்றப் பெற்ற இந்நாலடிச் செய்யுட்கள், சமண் சமயச் சார்புண்மை தோன்றுமாறு, துறவறத்தையே மேம்படுத்திக் கூறுவதோடு, அங்ஙனமாய துறவை மேற்கொள்ளாதோர் வாழ்க்கைப் பயனாக அடைய வேண்டுவது அறஞ்செயலே என்று வலியுறுத்தியும் கூறிச் செல்கின்றன. அங்ஙனம் கூறிச் சென்ருலும், அவை பல சமயத்தவரும் ஒப்பக்கொள்ளுமாறு அமைந்தனவேயன்ருே? இதை ஒரு பழம்பாடல் தெரிவித்துச் செல்வதைக் காண்க.

"ஆலின் அரசின் அசோகின் அணிஇருளின்
மேலே மறையின் விரிந்தபொருள்—நாலடியாம்
வெள்ளா அண் வேதத்தின் இன்னுரையைக் கண்டக்கால்
கொள்ளாரோ நல்லோர் குறித்து."

ஆல், அரசு, அசோகு என்னும் மூன்றின் நிழலி லும் வீற்றிருப்போர் சிவன், புத்தன், அருகன் என்னும் மூவருமாவர். அம்மூவரும் மொழிந்த மறைப் பொருளாயுள்ளது நாலடி என்று குறித்துச், சைவரும், புத்தரும், சமணரும் ஒப்பக்கொள்ளுமாறு அமைந் துள்ளது நாலடி என்று புலப்படுத்தியமை காண்க. அக் காலத்துத் தமிழ் நாட்டில் சிறந்திருந்தன இம் மூன்று சமயங்களே யாதலின் இங்ஙனம் கூறப்பட்ட தென்க. பசு வேட்டுத் தீயோம்பும் வேள்வியைச் சிறந்தெடுத்துக் கூறும் ஆரிய மறைக்கு மாறுபட்டுக், கொல்லாமையே பேரறமாகக் கொண்டொழுகும் சமண் சமயத்தவரால் செய்யப்பட்டதாகலின், நாலடி வெள்ளாண் வேதம் என்று சொல்லப்பட்ட தென்க.

இனி, நாலடிச் செய்யுட்கள் ஒரே ஆசிரியராற் செய்யப்படாமல் பல ஆசிரியர்களாற் செய்யப்பட்டன என்பதை, நாலடியுள் ஒரே கருத்தமைந்த இரண்டோ இரண்டுக்கு மேற்பட்டோ அமைந்திருக்கும் செய்யுட் களும் தெளிய உணர்த்திநிற்கின்றன.

"எற்றொன்றும் இல்லா விடத்தும் குடிப்பிறந்தார்
அற்றுத்தற் சேர்ந்தார்க்(கு) அசைவிடத்(து) ஊற்றாவர்
அற்றக் கடைத்தும் அகல்யா(று) அகழ்ந்தக்கால்
தெற்றெனத் தண்ணீர் படும்."

என்னும் நாலடியும்,

" உறுபுனல் தந்(து) உலகூட்டி அறுமிடத்தும்
கல்லூற் றுழிஊறும் ஆறேபோல்—செல்வம்
பலர்க்காற்றிக் கெட்டுலந்தக் கண்ணும் சிலர்க்காற்றிச்
செய்வர் செயற்பா லவை."

என்னும் நாலடியும் உவமையும் பொருளும் ஒத்தன வன்றோ?

" துன்பம் பலநாள் உழந்தும் ஒருநாளை
இன்பமே காமுறுவர் ஏழையார்—இன்பம்
இடைதெரிந்(து) இன்னாமை நோக்கி மனையா(று)
அடைவொழிந்தார் ஆன்றமைந் தார்."

என்னும் நாலடியும்,

" துன்பமே மீதூரக் கண்டும் துறவுள்ளார்
இன்பமே காமுறுவர் ஏழையார்—இன்பம்
இசைதோறும் மற்றதன் இன்னாமை நோக்கிப்
பசைதல் பரியாதாம் மேல்."

என்னும் நாலடியும் சொல்லும் பொருளும் ஒத்தன வன்றோ?

" மல்கு திரைய கடற்கோட் டிருப்பினும்
வல்லூற் றுவரில் கிணற்றின்கண் சென்றுண்பர்
செல்வம் பெரிதுடைய ராயினும் சேட்சென்றும்
நல்குவார் கட்டே நசை."

என்னும் நாலடியும்,

" எறிநீர்ப் பெருங்கடல் எய்தி யிருந்தும்
அறுநீர்ச் சிறுகிணற்(று) ஊறல் பார்த்(து) உண்பர்
மறுமை அறியாதார் ஆக்கத்தில் சான்றோர்
கழிநல் குரவே தலை."

என்னும் நாலடியும் உவமையும் பொருளும் ஒத்து நிற்பன காண்க.

---

## ௩. பதுமனார் பகுப்பு

சமண் சமயத்தைச் சார்ந்த பல புலவர்களால் பாடப் பெற்ற இந்நாலடிச் செய்யுட்கள் பிற்காலத்துச் சமண் சமயச் சார்புற்று விளங்கிய பதுமனார் என்பாரால் தொகுக்கப் பெற்றுப், பால் இயல் அதிகாரப் பாற்படுத்து ஒரு நூல் வடிவில் ஆக்கப்பெற்றன. நாலடி வெண்பாவானமை நோக்கி இந் நூற்கு "நாலடி" யென்றே பெயர் கொடுத்தனர் பதுமனார்.

> "ஞாலத்து உழிதரு நற்பாட்டே கொண்டடக்கி
> நாலடி நானூ றெனப்பெயரால்—வாலிதின்
> ஈட்டித் தொகுத்தான் இசைசால் பதுமனே
> கூட்டமைந்த மூன்றுபால் கொண்டு."

எனும் பழம் பாடலும் இக்கருத்தை யுணர்த்துவதைக் காண்க. இச்செய்யுளுள் "ஞாலத்துழிதரு நற்பாட்டே கொண்டடக்கி" என்னும் தொடர் கருதத்தக்கது. அக்காலத்துத் தமிழ் நாட்டில் நிலைபெற்றிருந்த சமண் சமயச் சார்புடைய பழம் புலவர்கள் மக்கட்கு நன்னெறி கற்பிக்குமாறு பல வெண்பாத் தனிச் செய்யுட்களைச் செய்திருந்தனர் என்பதும், பதுமனார் காலத்து அவை நாட்டில் தனித் தனிச் செய்யுட்களாய்ப் பெருவழக்காய் வழங்கிக்கொண்டிருந்தன வென்பதும், அப்பாடல்களின் சிறப்பும் மேன்மையுங் கண்ட சமண் சமயப் புலவராகிய பதுமனார் அவற்றைத் தொகுத்தனர் என்பதும் இத் தொடரால் தெளிய உணரப்படுமன்றோ?

பதுமனார் சமண் சமயச் சார்பினர் என்பதை, அவர் இந் நாலடி நூலுக்கு முதற்கண் இயற்றிய காப்புச் செய்யுளே தெளிய உணர்த்துகின்றது. மேலும்

நூல் பகுப்பை நோக்கினும், துறவறத்தையேமேன்மை யான அறமாகக் கொண்ட சமண் சமயச் சார்புண்மை தோன்றுமாறு, தாம் தொகுத்த நூலுள், முதற்கண் துறவறத்தைப் பற்றிய செய்யுட்களையே அமைத்தனர். அதனுள்ளும் முதற்கண் நிலையாமையைப் பற்றிய செய்யுட்களே அமைக்கப்பட்டிருக்கின்றன.

இனிப், பதுமனார் தாம் தொகுத்த நாலடிச் செய்யுட்களை, அக்காலத்துப் பெரு நூலாய் நாட்டில் வழங்கிய திருக்குறளைப் போலவே, அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால் என்றே முப்பாலாகப் பகுத்தனர். ஆயினும், வள்ளுவர் அறம் பொருள் காமம் பற்றிப் பல்வகைப் பொருளையும் விரித்து வகைப்படுத்தி உரைக்கப், பதுமனார் சைன சமயச் சார்பு பற்றிய சிறந்த கொள்கைகளை, எச்சமயத்தவரும் விரும்பி ஏற்கும் பொதுக் கொள்கைகளை, இம் முப்பாலுள் ஏற்றபெற்றி வகைப்படுத் தடக்கினர்.

அறத்துப்பாலைத், துறவறவியல், இல்லறவியல் என்றிரண்டியலாகப் பகுத்தனர்.

பொருட்பாலை, அரசியல், நட்பியல், இன்ப இயல், துன்ப இயல், பொது இயல், பகை இயல், பன்னெறி இயல் என் றேழியலாகப் பகுத்தனர்.

காமத்துப்பாலை, இன்ப துன்ப இயல், இன்ப இயல் என் றிரண்டியலாகப் பகுத்தனர்.

துறவற இயலுள் நிலையாமை பற்றிய செய்யுட்கள் அடக்கப்பட்டன. அறம் வலியுறுத்தப்படுகிறது. உடலிழிவு காட்டப்படுகிறது. துறவும், துறவோர்க்கு இன்றியமையாத குணமாகச் சினமின்மையும் கூறப் படுகின்றன.

இல்லற இயலுள் இல்லறத்தானுக் கின்றியமை யாத குணமாகப் பொறையுடைமையும், பிறன்மனை நயவாமையும் கூறப்படுகின்றன. ஈகையறம் சிறந் தெடுத்துக் கூறப்படுகிறது; பழவினையுண்மை காட்டப் படுகிறது; உலகியல் சொல்லப்படுகிறது; தீவினை அஞ்சி ஒழுகுமாறு கூறப்படுகிறது.

அரசியலுள், கல்வி முதலாவதாகக் கூறப்படு கிறது. பெரியோரியல்பும், நல்லாரிணக்கமுமே குறித்து மற்றைய ஆறு அதிகாரங்கள் வருகின்றன.

நட்பியலுள், சுற்றந்தழுவுதல் முதலாவதாகக் கூறப்படுகிறது. மற்ற மூன்றியல்களால் நட்புச் சொல்லப்படுகிறது.

இன்ப இயலுள் (பொருட்பால்) அறிவு, செல்வம் என்ற இரண்டன் இன்ப இயல்பு மூன்றதிகாரத்தால் கூறப்படுகிறது.

துன்ப இயலுள், ஈயாமை, வறுமை, மானக்கேடு, இரத்தல் என்பவற்றின் துன்பக் கூறுபாடுகள் கூறப் படுகின்றன.

பொது இயலுள் அவையறிதல் கூறப்படுகிறது.

பகை இயலுள் பேதைமையும், கீழ்மையுமாம் சிறு மைக் குணங்கள் நான்கதிகாரத்தால் கூறப்படு கின்றன.

பன்னெறியியலில் மற்றைய இயல்களில் கூறப் படாது எஞ்சிய செய்யுட்கள் அடக்கப்பட்டன.

இன்ப துன்ப இயலுள் பொதுமகளிர் இயல்பு கூறப்படுகிறது.

இன்ப இயலுள் (காமத்துப்பால்) கற்புடை மகளிரின் மேன்மையும் காதலியல்பும் கூறப்படு கின்றன.

இனி ஒவ்வோரியலுள்ளும் அமைந்த பல அதி காரங்களுள்ளும், 'ஒவ்வோரதிகாரத்தும் திருக்குறள் போலப் பப்பத்துச் செய்யுட்களே அமைத்தனர் பதுமனார். இங்ஙனம் தாங்கண்ட சிறந்த செய்யுட்களை அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால் என்னும் முப்பாலுள் அடக்கியும், அவைகட்கு இயலும் அதிகாரமும் வகுத்தும் ஒவ்வோரதிகாரத்துக்கும் திருக்குறளே போலப் பப்பத்துச் செய்யுட்களே என்ற நியதியுட்படுத்து இந் நூலையாத்தமையின் பல செய்யுட்கள் அவ்வவ்வதிகாரத்தோடு வலிந்து தொடர்பு கொள்ளப்படுமாறு அமைந்துள்ளன. அவற்றுள் எடுத்துக்காட்டாகச் சில ஈண்டுக் காண்க.

"மான அருங்கலம் நீக்கி இரவென்னும்
ஈன இளிவினால் வாழ்வேன்மன்—ஈனத்தால்
ஊட்டியக் கண்ணும் உறுதிசேர்ந்(து) இவ்வுடம்பு
நீட்டித்து நிற்கு மெனின்."

என்று இரத்தலை விடுமாறு கூறுமிச் செய்யுள், அறன் வலியுறுத்தல் என்னும் அதிகாரத்தில் வைக்கப்பட்டிருக்கிறது.

"இன்பம் பயந்(து) ஆங்(கு) இளிவு தலைவரினும்
இன்பத்தின் பக்கம் இருந்தைக்க—இன்பம்
ஒழியாமை கண்டாலும் ஓங்கருவி நாட
பழியாகா வாறே தலை."

பழிக்கஞ்சி வாழ வேண்டும் என்றுணர்த்துமிது, பொறையுடைமை யதிகாரத்தில் வைக்கப்பட்டிருக்கிறது.

"பெரியவர் கேண்மை பிறைபோல நாளும்
வரிசை வரிசையா நந்தும்—வரிசையால்
வானூர் மதியம்போல் வைகலும் தேயுமே
தானே சிறியார் தொடர்பு."

எனப் பெரியார் நட்பையும் சிறியார் நட்பையும் கூறுமிச் செய்யுள், தீவினையச்சம் என்னும் அதிகாரத்து வைக்கப்பட்டிருக்கிறது.

"பெரியார் பெருமை சிறுதகைமை ஒன்றிற்(கு)
உரியார் உரிமை அடக்கம்—தெரியுங்கால்
செல்வ முடையாரும் செல்வரே தற்சேர்ந்தார்
அல்லல் களைப வெனின்."

எனப் பெரியோர் செல்வர் கடமைகளைக் கூறுமிச் செய்யுள் பெரியாரைப் பிழையாமை என்னுமதிகாரத்தில் வைக்கப்பட்டிருக்கிறது.

---

## ௩. நாலடியார் காலம்

நாலடிச் செய்யுட்கள் சமண் சமயத்தைச் சேர்ந்த நம் பழந் தமிழ்ப் புலவர்களால் செய்யப்பட்டவாகலின், தமிழ்நாட்டில் சமண் சமயம் சிறப்புற்றிருந்த காலப் பகுதியில் நாலடிச் செய்யுட்கள் எழுந்தன வென்பது தெளிவாம். இக்காலத்தில் நமக்குக் கிடைத்திருக்கும் பழந்தமிழ் நூல்களிற் பல, சமண் புத்த சமயத்தைச் சார்ந்திருந்த நம் பழந் தமிழ்ப் புலவர்களால் இயற்றப்பெற்றன என்பதைத் தமிழ் வல்லார் அறிவர். தமிழ்ப்பெருங் காப்பியங்களுள் காலத்தால் முந்தியதான சிலப்பதிகாரத்தைச் செய்த இளங்கோ வடிகள் சமண் சமயச் சார்புடையாராகவே காணப்படுகின்றனர். சிலப்பதிகாரத்துச் சில இடங்

களில் சமண் சமயக் கருத்துக்கள் சிறப்புறச் சொல்லப் படுகின்றன. மற்றொரு சிறந்த காப்பியமான சிந்தா மணியை இயற்றிய திருத்தக்கதேவர் சமண் சமயத் தமிழ்ப்பெரும் புலவர் என்பது தெளிந்த உண்மையாம். சிந்தாமணியுள் சமண் சமயக் கருத்துக்கள் பலபடச் சிறக்கக் கூறப்படுகின்றன. மற்றொரு காப்பியமான வளையாபதியும் சமண்சமயச் சார்பினரான தமிழ்ப் புலவரால் செய்யப் பெற்றதாகவே காணப்படுகிறது.

இனி, இலக்கண வகையுள் யாப்பருங்கலக் காரிகை, யாப்பருங்கல விருத்தி, நன்னூல் முதலாகப் பல இலக்கண நூல்கள் சமண்சமயச் சார்பினரான பெருந்தமிழ்ப் புலவர்களாலேயே செய்யப்பட்டன வாகும்.

நிகண்டு வகையுள் சூடாமணி நிகண்டு சமண் சமயப் புலவரால் செய்யப் பெற்ற தென்பது தெளிவாம்.

பதினெண் கீழ்க் கணக்குள் ஒன்றான பழமொழி நானூறும் சமண் சமயத் தமிழ்ப் புலவராலேயே இயற்றப் பெற்றதாகும்.

இவற்றுள் சிலப்பதிகாரக் காலத்தை நோக்கு மிடத்துக், கதை நிகழ்ந்த காலமும் அந்நூலை இயற்றிய இளங்கோவடிகள் காலமும் ஒன்றும். சிலப்பதிகாரக் கதை நிகழ்ந்த காலத்துச் செங்குட்டுவன் அமைத்த கண்ணகி கோட்டத்துக்கு இலங்கைக் கயவாகு மன்னன் வந்திருந்தானாதலால், கயவாகுவின் கால மான 2ஆம் நூற்றாண்டே சிலப்பதிகாரக் காலம் என்பது தெளியப்பட்ட உண்மையாகும். சிந்தாமணி யின் காலம் 9ஆம் நூற்றாண்டென்பது பல அறிஞரின்

துணிபாகும். ஆதலின் கி. பி. 2 முதல் 9 வரைத் தமிழ்நாட்டில் சமண்சமயம் சிறப்புற்றிருந்ததென்பது ஐயமின்றித் துணியப்படும்.

இங்ஙனம் கி. பி. 2 முதல் 9 வரைச் சிறப்புற்றிருந்த சமண்சமயச் சார்புற்ற தமிழ்ப் புலவர் பலர் தம் சமயச் சார்புக்கேற்ப மக்கட்காம் ஒழுக்கநெறி கற்பிக்கும் செய்யுட்கள் பல செய்திருத்தல் இயல்பே. இங்ஙனம் பல புலவர்களும் அவ்வக் காலத்துச் செய்த நாலடித் தனிச் செய்யுட்களே பதுமனாரால் நூல் வடிவாக்கப்பட்டன வென்பது முன் கூறப்பட்டது.

இனி, நாலடிச் செய்யுட்களுள் [1]இரண்டு செய்யுளில் 'முத்தரையர்' என்றொரு வகையினர் குறிக்கப்படுகின்றனர். முத்தரையர் என்போர் குறுநில மன்னராக 9 ஆம் நூற்றாண்டளவில் தமிழ்நாட்டில் விளங்கியிருந்தனர் என்பது பழைய கல்வெட்டுக்களில் காணப்படுகின்றது. ஆதலின் 9 ஆம் நூற்றாண்டிற்குப் பின்னரே நாலடிச் செய்யுட்கள் நூல் வடிவில் தொகுக்கப் பெற்றன என்பது தெளிவு படுவதாம் என்க.

---

1. செய்யுள் 200, 296.

## ரு. நாலடி நுதல்பொருள்

நாலடி சமண்சமயத்தைச் சார்ந்த நம் பண்டைத் தமிழ்ப் பெரும் புலவர்களால் செய்யப்பட்டதாகலின், சமண் சமயத்தோர் சிறப்பாகக் கொண்ட துறவறமே மேன்மைபெறக் கூறப்படுகிறதென்றும், அத்துறவறச் சார்பு பற்றியே பலவிடத்தும் நிலையாமை எடுத்துக் காட்டப்படுகிறதென்றும் கூறப்பட்டது. நிலையாமையை மூன்று வகைப்படுத்துக் கூறுகின்றது; உடல் நிலையாமை, இளமை நிலையாமை, செல்வ நிலையாமை என. உடல் நிலையாமை யொன்றுமே கூறவமையுமாயினும், அவ்வுடல் பல செயல்களையும் செய்தற்கேற்ற நல்வலியுடன் பொருந்திப் பயனுடையதாவது இளமையுளதாம் வரையே யாதலின், அச்சிறப்பு நோக்கி அவ்விளமைதானும் நிலையாவியற்கை எடுத்துக் காட்ட வேண்டுவதாயிற்று. உடல் நல்வலியுடன் இருந்த பொழுதும், உலகில் பல அரிய செயல்களையும் செய்து மேம்படற்குச் செல்வமே உறுதுணையாய்நிற்றலின், அச்சிறப்பு நோக்கி அச்செல்வந்தானும் நிலையாவியற்கையும் எடுத்துக்காட்டவேண்டுவதாயிற்று. இம்மூன்றையும் பெற்றோர் அவற்றின் பயனைத் தாழாது அடைக என்று அறிவுறுத்த வேண்டியே அவற்றின் நிலையா இயற்கை எடுத்துக்காட்டப்படுகின்றன. உடல், இளமை, செல்வம் என்னும் மூன்றன் நிலையாமையுணர்ந்தோர் துறவு பூணவேண்டுமென்றும், அங்ஙனம் துறத்தல் இயலாவிடத்து வாழ்க்கையைப் பல அறங்களையும் செய்தற்கே கழித்து, வாழ்க்கைப்பயன் கொள்ள வேண்டுமென்றும் கூறலையே பெருநோக்கமாகக் கொண்டு செல்கிறது நாலடி. ஆதலின் " துற

வறச் சிறப்பும்'' "அறம்புரி மேன்மையும்" என்னும் இரு வகையே குறிக்கொண்டு சொல்லப்படுகின்றன எனத் தெளிக.

இனித் துறவறத்தை ஆண்டாண்டு வற்புறுத்துக் கூறி, அறம்புரிமேன்மையையே பலவிடத்தும் விரித்துரைத்துச் செல்கிறது ; உலகில் துறவறம் பூணுதோரே பலராதலின். அறப் புரிந்து சிறக்குமாறு கூறுமிடத்து "ஈதலறமே'' சிறந்தெடுத்துக் கூறப்படுகின்றது ; ஈதலறமே அருளாண்மை பூணுவோரிடத்து முற்பட்டு விளங்கித்தோன்றலின்.

நாலடி, துறவோர்க்கும் துறவாது மனையறம் பூண்போர்க்கும் சிறந்த குணமாக இரண்டை வற்புறுத்துக் கூறுகின்றது. துறவோர்க்குச் "சினமின்மையும்'' மனையறம் பூண்பார்க்குப் "பொறையுடைமையும்.'' துறந்தார் வெகுண்டுரைக்கும் உரையே பிறரைக் கெடுப்பதோடு தந்தவத்துக்கும் குறை வுண்டாக்கலின், சினமின்மை அவர்க்குச் சிறந்ததாயிற்று. பிறர் செய்தது போன்ற தீமையைத் தாமும் எதிர் செய்யின் தாமும் கீழோராய் விடுதலின், பொறை பூணுதலே அறிவுடைமைக்கும் குணநிறைவுக்கும் மேம்பாட்டிற்கும் அழகாதலின், இது துறவாது மனையறம் பூண்டு நிற்போருக்குச் சிறந்ததாயிற்று.

இனி, மக்கள் உலகில் வாழவேண்டும் முறையைக் காட்டவேண்டிப் "பெரியோர் இயற்கை'' இவை இவை என்று பலவிடத்தும் சொல்லிச் செல்கிறது. உலகில் காணப்படும் "கல்லாக்கயவர் இயல்பு" இவை இவை என்று பல விடத்தும் எடுத்துக்காட்டி அவர்கள் கீழ்மையும் அறிவோர் உணர்ந்து வெறுக்கு

மாறுள்ள தன்மையைப் புலப்படுத்துகிறது. மேலோர் குணங்களையும் கீழோர் குணங்களையும் பலபட எடுத்துக்காட்டுவதோடு அம்மேலோர்க்கும் கீழோர்க்கும் ஏற்ற பலப்பல உவமைகளை யமைத்து அவர் செயல்களின் மேம்பாட்டையும் இழிதகைமையையும் சிறக்க விளக்கிச் செல்கிறது. இவை பெரிதும் உணர்ந்தின்புறத்தக்கன. மேலும் "நல்லாரிணக்கமும்" "நட்பின் மேம்பாடும்" சிறக்கச் சொல்லப்படுகின்றன. உலக நிலையாமை உணர்ந்து துறவு பூண்டு உண்மை யுணர்ச்சி தலைப்படற்கண் முயலாது மனையற வாழ்க்கை மேற்கொண்டோர், அத்துறவோரையும் அத்துறவோரரோடொத்த சான்றோரையும் சேர்ந்தொழுகினாலேயே வாழ்க்கைப் பயனடையலா மென்றுணர்த்தவேண்டியே நல்லாரிணக்கம் வலியுறுத்தப் படுகின்றது. மனையறத்தில் மேம்பட்டாரோடு கூடி வாழவேண்டு மென்றுணர்த்தவே நட்பின் மேம்பாடு விரித்துச் சொல்லப்படுகிறது. கணவன் மனைவியராய்க் கலந்து வாழும் இல்லற நெறியினும் துறவறமே மேன்மையதாக்கொண்ட நஞ்சமண் தமிழ்ப் புலவர்கள், கலந்து வாழ்வதற்காக நல்லாரிணக்கத்தையும் நட்பின் மேம்பாட்டையும் சிறந்தெடுத்துக் கூறல் இயற்கை யன்றோ?

இனி அறத்தை மேம்படச் செய்தற்கான "செல்வத்தின் சிறப்பும்" பலபடியாகக் கூறப்படுகிறது. இச்செல்வச் சிறப்பு வறுமையின் கொடுமையைப் பலபடியாக எடுத்துக் கூறியும் காட்டப்படுகிறது. செல்வப் பயன் சிறந்த அறம் புரிந்து மேம்படலே என்பதைக் காட்டுவதோடு, பலர் அத்தகைச் சிறந்த செல்வத்தைப் பெற்றுவைத்திருந்தும் அச்

செல்வப் பயன் கொள்ளாது உலோபியராய்க் கழிந்து பேதையராய் நிற்பதையும் பலபடியாகக் காட்டுகின்றது. அச்செல்வங்கொண்டு சிறந்த பயனுய அறவழியில் நில்லாமல், தாமே நுகர்ந்து தருக்கித் திரியும் கொடுமையும் பலபடியாக எடுத்துக் காட்டப்படுகிறது. குறைசெல்வமாயினும் பெரியோரிடத்து நின்றதாயின் பெரும்பயன் கொடுத்துச் சிறத்தலும், நிறைசெல்வமாயினும் கீழோரிடம் நின்றதாயின் பயன்படாது போதலோடு தீமையை மிகுத்தற்கும் காரணமாய் நிற்றலும் குறிப்பிட்டெடுத்துச் சிறக்கச் சொல்லப்படுகின்றன. இங்ஙனம் அறத்தையும் பொருளையும் கூறியதோடு, இன்பவகையுள் "கற்பின் மேம்பாடும்" பொதுமகளிர் மாட்டாம் "கழி காமப் புன்மையும்" நன்மனைவியர் மாட்டாம் "காதலன்பும்" சிறப்புறக் கூறப்படுகின்றன.

ஆதலின், துறவு, அறம்புரிவாழ்க்கை, மேலோர் மாட்சி, கீழோர் இழிதகைமை, நல்லாரிணக்கம், நட்பு நலம், செல்வச் சிறப்பு என்பன பற்றி விரித்துரைத்துச் சினமின்மை, பொறையுடைமை, பிறர்மனை நயவாமை, கற்பு என்ற குணங்களைச் சிறந்தெடுத்துக் கூறி, பிற ஒழுக்கமுறைகளையும் ஒத்த முறையில் உரைத்துச் செல்கிறது நாலடி எனத் தெளிக.

## ௯. மக்களியற்கை

நாலடி உலகமக்க ளியற்கையைப் பலவிடத்தும் காட்டிச் செல்வது பெரிதும் உணரத் தக்கது. பல மக்கள், வாழ்க்கைப் பயன் இன்னதென்று உணர்கின்றார்களில்லை. இவ்வுலக வாழ்க்கை யொன்றே நிலைபேறுடையது போலக் கருதுகின்றனர். ஆதலின் தம் வாழ்க்கை வசதிகளைப் பெருக்கற்கு மட்டுமே தம் வாழ்நாளைக் கழிக்கின்றனர். முடிவில் கிழப்பருவம் வர இறப்பும் நெருங்குகின்றது. அக்காலை அவர்கள் தம்முயிர்க்குத் தேடிக்கொண்ட ஆக்கம் ஏதுமிலராக ஒழிகின்றனர். இத்தகைய மக்களியற்கையைக் கூறும் நாலடி,

> "இன்றுதும் இந்நிலையே ஆதும் இனிச்சிறிது
> நின்றுதும் என்று நினைத்திருந்து — ஒன்றி
> உரையின் மகிழ்ந்துதம் உள்ளம்வே றாகி
> மறைநிலையின் மாய்ந்தார் பலர்.''

வாழ்க்கை வசதி குறையப்பெற்றோர் தம் வாழ்க்கை வசதிகளைப் பெருக்கற்கண் முயன்று "இன்று முதல் நன்னிலை யடைவோம்'' என்று நினைக்கின்றனர். தம்முயற்சி சிறத்தல்போல் தோன்றின், "இன்றன்று; இக்கண முதலே நன்னிலை யடைவோ'' மென்று எழுச்சியுற்று நினைக்கின்றனர். நடுவே இடையூறு வரின், "இக்கால நிலை நமக்கேற்ற தன்று; ஆதலின் சிறிது காலம் சென்று நன்னிலை யடைவோம்'' என்கின்றனர். இங்ஙனமே நினைந்து நினைந்து தம் வாழ்நாள் முழுமையும் கழிக்கின்றனர். இங்ஙனம் நினைப்பளவில் மகிழ்ந்து, தாம் கருதியவாறு நிறைவுற வாழ்க்கை வசதிகளெல்லாம் அமையப்பெறாது, முடிவில் மனம் மாறுபட்டு வீணே இறந்தொழிகின்றனர். இத்தகையோர்க்கு

உவமையாகத் தாமரை இலை கூறப்படுமாறு காண்க. வாழ்க்கைப்பயன் உணர்ந்தோராய் அறவழியில் நின்று தமக்கு நிலைத்த ஆக்கத்தைத் தேடிக் கொண்டோரே மணம் நிறைந்த தாமரை மலருக்கு ஒப்பாவராதலின், வாழ்க்கைப் பயனுணராப் பேதையாகிய இவர் தாமரை இலைக்கே ஒப்பாதல் பொருந்தியதன்றே?

இனி, வாழ்க்கை வசதிகளைப் பெருக்கற்கண் முயல்பவர் அறத்தை மறக்கும் இயற்கையைத் தெளிய எடுத்துக் காட்டிக் கூறிச் செல்கின்றது மற்றொரு நாலடி.

> "ஆவாநாம் ஆக்கம் நசைஇ அறம்மறந்து
> போவாம்நாம் என்னும் புலைநெஞ்சே—ஓவாது
> நின்றுஞற்றி வாழ்தி யெனினும்நின் வாழ்நாட்கள்
> சென்றன செய்வ துரை."

அறத்தை மறந்து செல்வம் ஈட்டுதற்கண்ணேயே முனைந்து நிற்கும் தன் மனத்தைப் பார்த்து அறிவுடையோன் ஒருவன் கூறுவதாக அமைந்துள்ளது இந்நாலடி. செல்வம் ஈட்டுதலையே விரும்பி 'நாம் அறத்தை மறந்துவிடுவோம்' என்று கொண்டு, ஒழிவில்லாமல் செல்வம் ஈட்டும் முயற்சிக்கண்ணேயே நிலைபெற்று நின்று இயன்ற வழி வகையெலாம் முயன்று வாழ் நாள் முழுதையும் கழித்தாலும், கடைசியில் வாழ் நாள் முடிவிற்கே வருகிறது. அம்முடிவுக் காலத்தில் அறத்தை மறந்து செல்வம் ஈட்டியதால் பெற்ற நிலைத்த பயன் ஏதுமிலதாய்ப் போய்விடுகிறது. செல்வத்தை ஈட்டியதோடு அறத்தை மறவாது, நன்னெறியில் நின்றிருந்தானாயின், இறக்குங் காலத்து அவ்வறப் பயன் வாழ்க்கைப் பயனாய் எண்ணப்படுமன்றோ?

சில மக்கள் தாம் வறுமையுற்ற காலத்தும் நோய் கொண்ட காலத்தும் இம்மை மறுமைப் பயன்களைக் கூறிக் கூறியிருந்து, நிறைசெல்வம் பெற்றகாலை இம்மை மறுமை எண்ணத்தையே விட்டுக், கண்டதே காட்சி, கொண்டதே கோலம் என்று திரிந்து தீவினை யீட்டிக்கொள்ளுகின்றன ரன்றே? இவ்வியற்கையை ஒரு நாலடி கூறிச் செல்லுமாற்றைக் காண்க.

"வெறுமை யிடத்தும் விழுப்பிணிப் போழ்தும்
மறுமை மனத்தரே யாகி—மறுமையை
ஐந்தை யனைத்தானும் ஆற்றிய காலத்துச்
சிந்தியார் சிற்றறி வினர்."

வெறுமையாவது வறுமைக்காலம். மறுமை மனத்தராவது 'முற்பிறப்பில் என்ன தீமை செய் தோமோ? இப்பிறப்பில் வறுமையாலும் நோயாலும் துன்புறுகின்றோமே" என்று நினைத்தல். ஆற்றிய காலமாவது பல தொழில்களையும் குறைவறச் செய்து நிற்கும் செல்வக்காலம். அச்செல்வக் காலத்தில் செல்வக் களிப்பிலேயே மூழ்கி 'இம்மை செய்வது மறுமைக்காம்' என்பதை மறந்து, தீமை புரிதலிலும் மேம்பட்டுச் செல்லுதலின், அவர் மறுமையைக் கடுகளவும் (ஐந்தை) சிந்தியாதவரன்றே?

இனி வினைப்பயன் வந்தக்கால் தானும் அது நோக்கியே மனமழிந்து செயலொழிந்து துன்பத்தையே நினைந்து வருந்திக்கொண்டிராமல், அது பழ வினையால் வந்ததாகலின், அதை உறுதியுடன் மனங் கலங்காமல் ஏற்பதோடு, அப்பழவினை யுண்மையை நன்கு மனத்திற் பதித்து, மறுமைக்காம் நற்செயல்களைப் புரிதற்கண்ணேயே முயலல் வேண்டும். வினைப்பயன்

வந்த விடத்து மனமழிந்து நிற்கும் பேதையின் இயல்பை எடுத்துக்காட்டும் ஒரு நாலடி,

"வினைப்பயன் வந்தக்கால் வெய்ய உயிரா
மனத்தி னழியுமாம் பேதை—நினைத்ததனைத்
தொல்லைய தென்றுணர் வாரே தடுமாற்றத்
தெல்லை இகந்தொருவு வார்."

என்று கூறுகின்றது.

தாம் செய்வினையே தம்மை யடைதலின், அது வந்தபொழுது உண்மையுணராது மனம் மருள்தல் பேதைமையாமென்க. தாம் செய்வினையே தம்மை யடைந்த தென் றுண்மையாக உணர்ந்தனராயின், அவர் அது நோக்கி மனக் கலக்கம் கொள்ளாராதலின், தடுமாற்றத்து எல்லையை அவர் கடந்தவராவார். மேலும் அவர் மறுமை இன்பத்துக்காம் நற்செயல் புரிந்து மேம்படுவர் என்க.

வாழ்க்கை வசதி குறையப்பெற்ற சிலர் தம் வாழ்க்கை வசதிகளைப் பெருக்கற்கே நாட்கழித்து முடிவில் வீணே மடிந்தொழிதல் காட்டப்பட்டது. இனி, நிறைசெல்வம் எய்திய சிலர், தாம் நுகர வேண்டுவன வெல்லாம் குறைவற நுகர்ந்து, "இவையே நாம் வாழ்க்கைப் பயனாய் அடையத்தக்கன; இவையே யன்றி வேறு சிறந்த ஏது நம் வாழ்க்கையில் அடையத் தக்கன இல்லை" யென்று கொண்டு, உண்மை உணர்ச்சி பெறாது மதிமயங்கிச் சோம்பித் திரிகின்றனர். அவர்கள் நிறைசெல்வம் பெற்று வைத்தும், அச் செல்வத்தால் தம்முயிர்க்கு நிலைத்த ஆக்கந்தரும் வழியில் நல்லறக் காரியங்களைப் புரிந்து மேம்படாது, செல்வத்தின் சிறந்த பயனுணராப் பேதையராய் அழிந்

தொழுகின்றனர். இத்தகையோர் இயற்கையையும் ஒரு நாலடி தெளியக் காட்டுகிறது.

"இற்சார்வின் ஏமாந்தேம் ஈங்கமைந்தோம் என்றெண்ணிப்
பொச்சாந் தொழுகுவர் பேதையர்—அச்சார்வு
நின்றன போன்று நிலையா எனஉணர்வார்
என்றும் பரிவ திலர்."

ஏமாத்தல், இன்பத்தால் செருக்கி இருத்தல். பொச்சாந்தொழுகல், உறுதியின்றி மனம் நெகிழ்ந் திருத்தல். எல்லாவகை வாழ்க்கை வசதிகளையும் அடையப் பெற்றிருத்தலொன்றையே கொண்டு, வேறு சிறந்த காரியங்களைச் செய்தலில் நாட்டம் செலுத் தாது மனவமைதி பெற்று நெகிழ்ந்திருக்கின்றனர் அவர். இங்ஙனம் நெகிழ்ந்திருப்போர் தம் வாழ்க்கை யின் சிறந்த பயனை அடையாது ஒழிவதோடு, மகிழ்ச்சி யில் மயங்கியிருத்தலால் "யாம் என்செய்தோம் என் செய்தோம்" என்று இரங்கு நிலைமைக்கு ஆளாமாறு பல துன்பங்கள் சூழ்ந்து வருத்தவும் படுவர். மற்று உலகியல்பை உணர்ந்த அறிவோரோவெனின், உலகத் துப் பொருள்களெல்லாம் நிலையுடையன போன்று காணப்படினும், அவை நிலைத்து நிற்பன அல்ல என் பதை யுணர்ந்து, அறவழியில் நின்று சிறத்தலின், அவர் முன்னையோர் போன்று "என்செய்தோம் என் செய்தோம்" என்றெண்ணும் நிலைமைக்கு ஆளாவோ ரல்லர் என்க.

ஒரு நாலடி, உலகையே நல்வழிப்படுத்தும் பெரியோரைத் தம்மருகே பெற்றுவைத்தும், தமக்கு அறிவின்மையால் அப்பெரியோரை அடுத்துப் பயன் கொள்ளாது, தம் வாழ்நாளைப் பயனில் பொழுதாகக் கழிக்கும் மக்கள் இயல்பைக் குறிப்பிடுகின்றது.

"பொன்னே கொடுத்தும் புணர்தற் கரியாரைக்
கொன்னே தலைக்கூடப் பெற்றிருந்தும்—அன்னோ
பயனில் பொழுதாக் கழிப்பரே நல்ல
நயமில் அறிவி னவர்."

ஒருவர் தாம் ஈட்டும் செல்வத்தால் உலகத்துப் பல பொருள்களையும் தமக்குரியவாகச் செய்துகொள்ளலாமாயினும், அச் செல்வம் ஒன்று காரணமாகவே அறிவுடை மேலோரைத் தமக்குரியோராகச் செய்து கொள்ளல் இயலுமோ? இயலாதன்றே. அறிவுடை மேலோர் பொன்னினும் மணியினும் மேலாராய்த் தம்மைச் சேர்ந்தோர்க்குப் பெரும்பயன் அளிப்பாரன்றே. பொன்னும் வெள்ளியும் உலகப் பொருள்களை அளிக்கும். இம் மேலோர் மக்களாய்ப் பிறந்தோரை உண்மை மக்களாக்கவல்ல பேரறிவுப் பெருஞ் செல்வத்தை அளித்து மேம்படுத்தலின், அப்பெரியோரினும் சிறந்த பொருளும் உலகில் உண்டோ? இத்தகைப் பெரியோரைத் தாம் வாழுமிடத்தே பெற்றுவைத்திருந்தாலும், சிலர் தம் அறிவின்மையால் அவர் பெருமையுணராது, 'விளக்கிருக்க மின்மினித் தீக்காய்வது போல' அவை விட்டுத் தம்மையொத்த அறிவிலாரோடு கூடி யுழன்று வாழ்நாளைப் பயனில் பொழுதாகக் கழிக்கின்றனர். இனி, இல்லறம் பூண்டோராய் மனத்துக்கினிய நன்மனையாளோடு கூடி மகிழ்ந்தும், பலவகைய அறங்களையும் விரும்பிச் செய்தும் வாழ்தலே மக்கள் இயற்கையாம். இங்ஙனமாகாத கீழ்மக்களியற்கையை ஒரு நாலடி கூறுகிறது.

"நல்லவை நாடோறும் எய்தார் அறஞ் செய்யார்
இல்லாதார்க் கியாதொன்றும் ஈகலார்—எல்லாம்
இனியார்தோள் சேரார் இசைபட வாழார்
முனியார்கொல் தாம்வாழு நாள்."

ஒருவன் உலகத்து நல்லன என்று பலரும் கருது வனவற்றை விரும்புவோனுய்ப் பலரும் விரும்புமாறு நல்லொழுக்க நெறியில் ஒழுகவேண்டும். பலர்க்கும் பயன் படுமாறு சிறந்த அறங்களைச் செய்து மேம்பட வேண்டும். வறியோர்க்கீந்து ஆண்மையுடன் திகழ வேண்டும். மனத்துக் கினிய நன்மனையாளை மணந் தின்புறவேண்டும். புகழ்பெருகப் பல அருஞ்செயல் களைச் செய்து சிறக்கவேண்டும். இங்ஙனம் வாழும் வாழ்க்கையே பயனுடைய வாழ்க்கையாம் என்க. இங்ஙனமாகாது, பலரும் வெறுக்கும் தீயொழுக்கமே மேற்கொண்டு, தீத்தொழிலே புரிந்து, வறியோர்க்கீதல் புரியாது, நன்மனையாளோடில்லறம் பூணுது, கண்ட வாறொழுகிப், பலரும் இகழுமாறு வாழ்க்கை நடத்தும் கீழோர்தம் நிலையை எண்ணும்போது அவர் தாமேயும் வெருர்களோ என்று கூறிற்று இந்நாலடி. மற்றொரு நாலடியும்,

"உள்நாள் சிலவால் உயிர்க்கேமம் இன்ருல்
பலர்மன்னும் தூற்றும் பழியால்—பலருள்ளும்
கண்டாரோ டெல்லாம் நகாது எவனொருவன்
தண்டித் தனிப்பகை கோள்."

என்று கூறிச் சில மக்களின் இயற்கையை எடுத்துக் காட்டுகிறது.

மக்கள் வாழ்நாளோ வரையறுக்கப்பட்ட சில காலமே. அந்நாள் முற்றுந்தானும் வாழலாமென்ற துணிவு மில்லை. நிலையற்ற இவ்வாழ்க்கையிலும் ஒருவன் வறிதே யிருப்பினும் பலர் அவனைப்பற்றிச் சொல்லும் பழிச்சொல்லுக்கோ அளவில்லை. உலகியல்பு இங்ஙனமிருக்க, எல்லாரோடும் கலந்து பழகி உறவாடி

நகைத்து இன்புற்றிருக்காமல், ஒரு சிலர், பலர்க்கும் தீமை புரிதலே தொழிலாகக்கொண்டு, பலரும் வெறுத்தொதுக்குமாறு, தனித்துப் பகை பூண்டு நிற்பது எப்பயன் கருதியோ என்று சில மக்களியற்கையை மனமிரங்கிக் கூறிற்று இந்நாலடி.

---

## எ. அறம்புரி நல்வாழ்க்கை

மக்கள் வாழ்க்கைப்பயன் அறம்புரிந்து ஆக்கம் தேடிக்கொள்ளல் என்பதே நாலடியின் சிறந்த உட்கோளாகும்.

> " நன்றி புரிகல்லா நாண்இல் மடமாக்கள்
> பொன்றிலென் பொன்றுக்கா லென்."

என்று நாலடி கூறிச்செல்லுமாற்றைக் காண்க. இவ்வறம்புரி நல்வாழ்க்கையைப் பலவிடத்தும் கூறிச் செல்லும் நாலடி, அதை வலியுறுத்திக் கூறும் முறை பெரிதும் உணர்ந்து கொள்ளத் தக்கது.

உடற் பயன் தெரிதல்

> " யாக்கையை யாப்புடைத்தாப் பெற்றவர் தாம்பெற்ற
> யாக்கையா லாய பயன்கொள்க."

என்று கூறுகிறது நாலடி. உடலை, வலிமைபொருந்திய நன்னிலையில் எய்தப்பெற்றவர், அச்சிறந்த உடலால் அடையத்தக்க பயனைத் தவறாது அடைந்துவிடுக என்று உணர்த்துகிறது. உடல் குழவிப் பருவத்தில் வளர்ச்சி யடையும் நிலையில் இருந்து, காளைப் பருவத்தே நல்வலியுடன் திகழ்ந்து, பின் முதிர்ச்சியுற்ற காலை வலிகுன்றிக் கெட்டொழிகின்றதன்றே? இங்ஙனமாதலின் உடல் நல்வலியுடன் இருக்கும் காலத்தில்

உடற்பயனை அடையாவிடின், பின் உடற்பயனின்றியே கழிதலாகுமென்பதாம்.

அந்நாலடி உடலின் தன்மையை மற்றைய இரண்டடிகளில் மேலும் தெளிய உணர்த்துகின்றது.

"யாக்கை
மலையாடு மஞ்சுபோல் தோன்றிமற் றாங்கே
நிலையாது நீத்து விடும்."

உடல் மலைமே லுலாவும் மேகத்தை ஒப்பது என்று கூறுகிறது. மலைமேலுலாவும் மேகம் பார்ப்போர்க்கு அழகு பொருந்தப் பெருந்தோற்றத்தை யளித்துப் பின் சின்னேரத்தில் நிலைமாறி விடுகிறது. இங்ஙனமே ஒருவன் உலகத்தே ஓடியாடி வேலைசெய்யுங்கால், அவன் பெருமைபெற மதிக்கப்பட்டுத், திடீரென அவன் உடல் காலநியதியின்றிக் கெட்டொழிகின்றது.

இனி உடற்பயன்தான் என்ன? மக்கள் பலர் தம் வாழ்க்கைப்பயன் என்ன என்று ஆராய்வதில் கருத்துச் செலுத்தாமலே வாழ்கின்றனர். வாழ்க்கைப் பயன் உண்டு உடுத்து இன்புறலே என்றும் பலர் கருதுகின்றார்கள். உண்டு இன்புறலே விலங்கினங்கள் முதலிய பல உயிர்கள்மாட்டும் காணப்படுதலின், மகனாய்ப் பிறந்த ஒருவன் அடையத்தக்க பயனும் இவைதானா? அங்ஙனமாயின், விலங்கு முதலிய பிற உயிர்களுக்கும் இவனுக்கும் உள்ள வேறுபாடுதான் என்ன?

"மக்களா லாய பெரும்பயனும் ஆயுங்கால்
எத்துணையும் ஆற்றப் பலவானால்—தொக்க
உடம்பிற்கே ஒப்புரவு செய்தொழுகா(து)......"

என்று நாலடி கூறிச்செல்லுமாற்றைக் காண்க. மக்கள் உடற்பயனைச் செய்யவேண்டுவன பல என்று கூறு

மாற்றை ஓர்க. அவை யாவை என்றுரைக்கப் புகும் நாலடி, உடற்பயனாக ஒருவனைத் தொடர்வது அவன் செயலே என்ற கருத்தை மனத்திற் பதிக்கின்றது.

உடற் பயன் செய்வினையே

*" தாம்செய் வினையல்லால் தம்மொடு செல்வதுமற்(று)*
*யாங்கணும் தேரில் பிறிதில்லை."*

என்று கூறுமாறு காண்க. உடல் அழிய, அவ்வுடல் கொண்டுசெய்யும் செயல்களே ஒருவனைத் தொடர்கின்றன. அவன் போற்றிப் புனையும் உடலும்பிற பொருளும் பல செயல்களையும் செய்தற்குத் துணையாகவே அமைந்து பின் அழிகின்றன. ஆதலின் இவை கருவியாந்தன்மையை ஒருவன் உணரவேண்டுமே யொழிய, இவைகளையே நிலைத்த முதற்பொருளாகக் கொண்டு, இவைகளை ஓம்புதற்கு மட்டும் நாள் கழித்தல் பயனற்ற வீண் செயலா மென்க. இதைக் குறித்தே மேற்குறித்த நாலடி

" ஆங்குத்தாம்
போற்றிப் புனைந்த உடம்பும் பயனின்றே
கூற்றங்கொண் டோடும் போது."

என்று கூறுவதாயிற்று. தானேயாய் நினைக்குமாறு நிற்கின்ற உடலே தன்னைவிட்டுப் பிரிதலின், தன்னின் வேறான மனைவி மக்கள் சுற்றத்தாரைப்பற்றிக் கூறவும் வேண்டுமோ ?

**நல்வினையே செய்க :** இங்ஙனம் செய்வினையே உடற்பயனாய் ஒருவனை அடைதல் உணரப்படலின், ஒருவன் செய்யும் செயல் அனைத்தும் நல்வினையாய் இருத்தல் வேண்டுமன்றே ?

" எனைத்தும்
சிறுவரையே யாயினும் செய்தநன் றல்லால்
உறுபயனே இல்லை உயிர்க்கு "

என்று நாலடி கூறுகிறது. ஒருவன் செய்யும் நல்லறச் செயலே அவனுக்கு ஆக்கமளிக்கும் என்றுணர்த்தப்படு கிறது. மற்று ஒருவன் பிறர் வெறுக்கும் தீச்செயலே விரும்பிச் செய்யின், அஃது அவனுக்குக் கேட்டையே தரும் என்பதும் குறிக்கப்படும்.

i " தீயவை தீய பயத்தலால் தீயவை
தீயினும் அஞ்சப் படும்."

ii " தன்னைத்தான் காதலன் ஆயின் எனைத்தொன்றும்
துன்னற்க தீவினைப் பால்."

iii " தீப்பால தான்பிறர்கண் செய்யற்க நோய்ப்பால
தன்னை அடல்வேண்டா தான்."

என்ற பொய்யாமொழிகளை ஈண்டு நோக்கியுணர்க. இங்ஙனம் தாம் செய்யும் நல்வினையே தமக்கு நன்மை யளிக்கு மன்றித், தம்மைச் சேர்ந்த மனைவி மக்கள் தாமும் இந்நல்வினைபோன்று தம்மைத் தொடர்ந்து வந்து தமக்கு நன்மை யளித்தல் இல்லையாதலின், அம் மனைவி மக்கள் பொருட்டுமட்டில் நாளை வீணே கழித்த லாகாது என்று உடன் உணர்த்தி மேற்குறித்த நாலடி யின் முதலிரண்டடிகள்,

" மனைப்பாசம் கைவிடாய் மக்கட்கென் றேங்கி
எனைத்தூழி வாழ்தியோ நெஞ்சே."

என வந்தன.

**அறநெறி யொழுகலே மக்கட்பண்பு**: இனி அறம் புரிந்தொழுகலே மக்கட் பண்புமாகும். மற்று அறத் தின் மாறுபட்டு மறவழி நிற்றல் விலங்கியற்கையாம்

என்க. அறநெறி யொழுகலே மக்கட் பண்பாய் அமைதலாலேயே உலகம் நிலைபெறுவதாகும் என்க. அறப்பண்பு கெட்டு மறப்பண்பே மக்கள் மாட்டு நிலைபெறுவதாயிருப்பின் இவ்வுலகம் ஒரு கணந்தானும் நிலைத்து நில்லாது அன்பும் அருளுமே உலக மக்களைப் பிணைந்து ஒன்றுபட்டு வாழச்செய் கின்றன என்பதை யாரும் உணர்வர். அன்பும் அருளும் உலகில் அறவே மறைந்தொழிவவாயின், பகையும் போரும் அழிவுமேயன்றோ யாண்டும் காணப்படும். அங்ஙனமாயின் உலகம் நிலைபெறுவ தெப்படி? ஆதலின், உலகநிலைபேற்றுக்கு நிலைக்களமா யிருப்பது அன்பினிற் கிளைத்த அருளேயாமென்பதும், அவ்வருள்வழிப் பிறக்கும் அறமே மக்கட் பண்பா மென்பதும் உணரப்படுகின்றன. அறம் நிலை பெறுவ தாலேயே உலகம் நிலை பெறுகிற தென்னும் இக்கருத் தைச் சிறந்த உவமைகொண்டுணர்த்துகின்றது நாலடி.

> "பெயற்பான் மழைபெய்யாக் கண்ணும் உலகம்
> செயற்பால செய்யா விடினும்— கயப்புலால்
> புன்னை கடியும் பொருகடல் தண்சேர்ப்ப
> என்னை உலகுய்யு மாறு."

பெய்யவேண்டிய மழை பெய்யாவிட்டாலும், உலக மக்கள் அன்பும் அருளும் பூண்டு பலரொடும் கலந்தொழுகி ஒருவர்க்கொருவர் உதவி வாழாவிட்டா லும், உலகம் நிலைத்து நடைபெறுவ தெப்படி என்று கேட்கிறது இந் நாலடி. பெய்யவேண்டிய மழை பொய்ப்பின் உலகில் வாழ்கின்ற உயிர்கள் மடிந் தொழிய வேண்டுவது போலவே, அன்பும் அருளும் நிலைக்களமா யெழுந்த அறப்பண்பு மக்கள் மனத்தி னின்றும் நீங்குமாயின், மக்கள் கிளைத்துப் பல்காமல்

பூசலிட்டு மடிந்தொழிவது இயற்கையென்பது குறிக்கப் பட்டது.

**அறமே மாண்பளிக்கும்:** அறமே மக்கட் பண்பா யினும், அதைப் பலர் நெகிழ்ந்து விடுதலின், அந்நற் பண்பு பொருந்தியவராய் அறம் புரிந்து வாழ்வாரே, உலகில் உண்மை மக்களாய் மாட்சிமையுற்றுத் தோன்றிப் பொலிகின்றனர்.

> "இன்றுகொல் அன்றுகொல் என்றுகொல் என்னாது
> பின்றையே நின்றது கூற்றமென் றெண்ணி
> ஒருவுமின் தீயவை ஒல்லும் வகையால்
> மருவுமின் மாண்டார் அறம்."

என்றவிடத்து மாட்சிமைப் பட்டாராய் அறத்தைப் பொருந்துங்கள் என்றுணர்த்தியவாற்றைக் காண்க. அறம்புரிய முற்படும்பொழுதே அவர் மாட்சியுற்றோ ராய் உலகத்தே விளங்கித் தோன்றலின், இங்ஙனம் கூறப்பட்ட தென்க. உலகில் பிறந்தும் பிறவாதோ ராய்க் கழியாமல் உலகில் விளங்கித் தோன்றற்குக் காரணமானது அறம் என்று உணர்ந்தவன் அதை விரைந்து கைக்கொள்ள வேண்டுமன்றோ? அது குறித்தே இந்நாலடியின் முதலிரண்டடியும் எழுந்தன. "உடல் நிலையற்றதாவது ஒருதலையான உண்மை யாகவும், கூற்றுவன் இன்று வருவனோ, இன்று வரான் பின்னே தான் வருவானோ, என்று வருவானோ என்றையுற்று வீணே நாள் கழிக்காமல், பின்னேயே கூற்றுவன்நிற்கின்றான்; அவன் எக்கணத்தும் வீழ்த்த லாம் என்னும் உண்மையைத் தெளிய உணருங்கள்" என்று கூறுவதாயிற்று இந்நாலடி.

**அறம்பூணார் பழிபூண்பர்:** மக்கட் பண்பாம் அறத் தைப் பொருந்தியோர் மாட்சியுற, அதைப் பொருந்தா

தோர் மக்கட்டன்மை கெட்டுப் பழியே பூண்டு தாழ்மையுற்று அழிந்தோராவ ரென்க.

> " எத்துணை யானும் இயைந்த அளவினால்
> சிற்றறம் செய்தார் தலைப்படுவர்—மற்றைப்
> பெருஞ்செல்வம் எய்தியக்கால் பின்அறிதும் என்பார்
> அழிந்தார் பழிகடலத் துள்."

அறவழி நில்லாரைப் பிறர் கூறுவன வெல்லாம் பழிப்புரையேயாய் அமையுமாதலாலும், அது அவர் ஆக்கத்திற்குக் காரணமாகாது அழிவிற்கே காரண மாதலாலும், அழிந்தார் பழிகடலத்துள் என்று கூறப்பட்டது. "பழிகடல்" என்று அறிய அதனால், அவனைப் பாராட்டுவார் எவரும் இலராவர் என்பது தெளிவாம். அறம் செய்தற்கு நிறை செல்வத்தையே காரணமாகக் கருதல் கூடாதென்பது ஈண்டுக் குறிக்கப் படுகின்றது. நிறை செல்வத்தையே நினைந்திருந்து, அறம்பூண்டு புகழ்கொள்ளாது பழிபூணல் அறிவுடைமை ஆகாதென்பதும், உள்ள செல்வத்திற்கேற்ப அறம்புரிந்து மேம்பட்டுப் புகழ்பெற வாழ்தலே அறிவுடைமை என்பதும் மனங்கொளத் தக்கன.

அறம்புரிதலே பிறவிப்பயன்: இத்தகைச் சிறந்த அறத்தைப் புரிதலையே பிறவிப் பயனாகக் குறித்து,

> " உருவும் இளமையும் ஒண்பொருளும் உட்கும்
> ஒருவழி நில்லாமை கண்டும்—ஒருவழி
> ஒன்றேயும் இல்லாதான் வாழ்க்கை உடம்பிட்டு
> நின்றுவீழ்ந் தக்க துடைத்து."

என்று கூறுகின்றது நாலடி.

ஒன்றேயும் என்பது ஓரறமாயினும் என்றவாறும். சிறந்த அறப்பயனடையத்தக்க கருவியாம் உடலைப்

பெற்று வைத்திருந்தும், அக்கருவிப் பயன் கொள்ளாது வீணே கழிதலின், "உடம்பு இட்டு நின்றுவீழ்ந் தக்க துடைத்து" என்று கூறப்பட்டதென்க. இனி, அறப் பயன் கொண்டோரே உடற்பயன் கொண்டோராத லின், உடல் அழிய வந்த விடத்தும் அவர் வருந்த வேண்டுவ தன்று. இதைச்சிறந்த முறையில் ஒரு நாலடி கூறுமாற்றைக் காண்க :

"அரும்பெறல் யாக்கையைப் பெற்ற பயத்தால்
பெரும்பயனும் ஆற்றவே கொள்க—கரும்பூர்ந்த
சாறுபோல் சாலவும் பின்னுதவி மற்றதன்
கோதுபோல் போகும் உடம்பு."

பெரும்பயனாவது பலரைப்போன்று உண்டுறங்கியே கழிக்காது அறம்புரிந்து பெற்ற பயனும். கரும்பி னின்றும் சாற்றைக்கொண்டபின் அக்கோதின்மாட்டு ஆசை வைப்பாரும் உலகில் உண்டோ? அங்ஙனமே அறப்பயன் கொண்டவன் இறக்குங்காலத்தும் மன நிறைவுடன் இறப்பன் என்க.

ஒருவன் செய்யும் அறமே பிறவிப்பயனாய் அவனைத் தொடர்ந்து, அவனுக்கு மேன்மேலும் ஆக்கத்தையே அளித்துக்கொண்டு செல்லும் என்னும் உண்மையைச் சிறந்த ஒருவமை கொண்டு உணர்த்துகின்றது நாலடி.

"ஆள்பார்த் துழலும் அருள்இல்கூற்று உண்மையால்
தோள்கோப்புக் காலத்தால் கொண்டுய்ம்மின்."

அறம் கட்டுசோறாகக் கூறப்படுகின்றது. வழிப் பயணம் போவானொருவன் உற்றவிடத் துதவ வேண்டிப், புறப்படுவதற்கு முற்கூட்டியே தனக்கு வேண்டிய உணவைப் பதம்பெறப் பிசைந்து உடன் கொண்டு செல்லலை மறந்து, வறிதே செல்வானாயின்,

வழிப்பயணம் போகுங்கால், இடைவழியே அழிபசி வாட்ட, அவன் பசிநோயால் வாடுவதன்றி, வழிப் பயணத்தை முட்டின்றி மகிழ்வுடன் செலுத்தலும் இயலாதன்றே? வழிப்பயணம் போவானுக்குப் பசி நோய் தணிக்க, அவன் பதம் பெறப் பிசைந்துகொண்டு போம் கட்டுசோறு பயன்படுவது போலப், பல பிறவிகளிலும் உழன்றுழன்று செல்லும் ஒருவனுக்கும், அவன் அவ்வப் பிறப்பிலும் ஈட்டிக்கொள்ளும் அறமே பிறப்புக்கள் தோறும் அவன் துன்பந் துடைத்து, அவனை மேன்மேலுயர்த்தி, முடிவில், அழியா இன்பத்தைத் தலைக்கூட்டுமென்பது குறிக்கப்படுகின்றது. கட்டிமுடிந்த சோற்றைத் தோளின்கண் கோத்துக் கட்டிக்கொண்டு வழிநடத்தலே பண்டை மக்கள் வழக்கமாதலின், கட்டுசோறு "தோட் கோப்பு" என்று கூறப்பட்டதென்க. இத்தகைச் சிறந்த அறமாகிய கட்டுசோற்றைக் கட்டுதலில் நெகிழ்ந்திருந்தாலுயின், அக் கட்டுசோறில்லாமலே இறக்கவும் நேரிடுமாதலின், அதை யுணர்த்தவேண்டியே, எக்காலத்தும் உடலுயிர் வேறுசெய்தலே தொழிலாகக்கொண்டிருக்கும் கூற்றுவன் இயல்பினை முதலடி எடுத்துக் காட்டியது. "கொல்லுதற்கு ஆள் பார்த்தே உழன்று கொண்டிருக்கும் அருளற்ற வன்னெஞ்சக் கூற்றுவன்" என்று கூறியவாற்றைக் காண்க. 'காலத்தால்' என்றது இளமைக் காலத்தேயே என்றவாறு. இக் கட்டுசோற்றைக் கட்டிக்கொண்டு செல்வோரே பல பிறவிகளிலும் துன்பத்தினின்று நீங்கி நன்மையை யடைந்து பிழைத்தவராவர் என்பதையும், மற்றையோர் துன்பத்துட்பட்டு வீழ்ந்து வருந்துவோரே என்பதையும் உணர்த்தி 'உய்ம்மின்' (பிழைத்துப்

போங்கள்) என்று கூறுவதாயிற்று இந்நாலடி என்க. இச்சிறந்த கட்டுசோற்றை விரைந்து கட்டிக்கொள்ளா தவர் வறிதே (கட்டிக்கொள்ளாமலே) இறத்தலும் கூடும் என்பதை மற்றொரு நாலடி,

"சிறுகாலை யேதமக்குச் செல்வுழி வல்சி
இறுகிறுகத் தோட்கோப்புக் கொள்ளார்—இறுகிறுகிப்
பின்னறிவாம் என்றிருக்கும் பேதையார் கைகாட்டும்
பொன்னும் புளிவிளங்கா யாம்."

என்றது.

அறமாகிய கட்டுசோற்றைத் தன்வாழ்நாளில் கட்டிக்கொள்ளாத ஒருவன் இறக்கும் நிலையை அடைகின்றான். அக்காலைப் பற்று வைத்திருந்த பல பொருள்களையும் விட்டுத் தான் பிரியப்புகும் நிலையை அவன் உணரவும், தன்னைப் பிரியாது உடன்வரும் தன்மை வாய்ந்த அறங்களை 'நாம் செய்து பயன் கொள்ள வில்லையே' என்ற வருத்தம் அவன் மனத்தே புகுந்து வாட்டுகின்றது. எனவே, அவன் அப்பொழுதேனும் இயன்ற அளவு பயன் கொள்ளலாம் என்று கருதித் தன் அன்பு நிறைந்த மனையாளை நோக்கித் தன் வாழ்நாளெல்லாம் பாடுபட்டுத் தேடித் தொகுத்து வைத்திருந்த பொன் திரளில் ஒரு திரளை எடுத்து வருமாறு கூற எண்ணி, ஐயம் வந்து தொண்டையை யடைக்கப், பேசமுடியாமையின், தன் கையாலும் கண்ணாலும் குறிப்பிக்கின்றான். அக்குறிப்பை யுணர்ந்த அவன் மனைவி, பொன்திரள் மாட்டுத் தான் வைத்த அவாவினால், அதை அவனுக்குக் கொடுக்க விரும்பாது, அவன் உணர்த்தியது வேறொரு குறிப்பினதாகப் பக்கத்துள்ளார்க்கெல்லாம் புலப்படுமாறு, "தொண்டையில் ஐயம் கட்டித் திணருமிச் சமயத்தில், விளாங்காய்

வேண்டுமென்கிறீர்களே! இச்சமயத்து உட்கொள்ளின், அஃது உம்மைக் கொன்று விடுமே! ஆதலின், அது ஆகவே ஆகாது'' என்று கூறி மறுத்து விடுகின்றாள். இந்நிகழ்ச்சி உணர்த்துவதென்ன? விரைந்து அறஞ் செய்யாதான் அறப்பயன் இன்றியே கழிவான் என்பதன்றோ?

அறம்புரிந்தோரே பிறவிப்பயன் அடைந்தோர் என்பதை,

> "அறஞ்செய்(து) அருளுடையீர் ஆகுமின் யாரும்
> பிறந்தும் பிறவாதார் இல்.''

என்று மேலும் ஒரு நாலடி கூறுமாற்றைக் காண்க. பிறவிப் பயனாக இவ்வறத்தை ஒருவன் விரைந்து செய்யவேண்டும் என்பதையுணர்த்த, ஒருவனது வாழ் நாளின் தன்மையை இந்நாலடியின் முன் இரண்டடிகள் எடுத்துக் காட்டுகின்றன.

> "தோற்றஞ்சால் ஞாயிறு நாழியா வைகலும்
> கூற்ற மளந்துநும் நாளுண் ணும்.''

"ஒருவனது வாழ்நாளைக் கூற்றுவன் என்போன் ஞாயிறு என்னும் படிகொண்டு நாடோறும் அளந்து கொண்டே இருக்கிறான்'' என்று கூறுகின்றது. ஆதலின் நாள் கழிதலை நாள்மேல் வைத்து 'நாள்கழிந்த' தாகக்கொண்டு மயங்காமல் 'தன் வாழ்நாளின் ஒரு நாள் குறைந்தது' என்னும் உண்மையை உணர வேண்டும். அங்ஙனம் மேலும் மேலும் பல நாள் வீணே குறைதற்குமுன், தன் வாழ்நாளின் முழுப் பயனையும் விடாமல் அடையவேண்டும். விரைந்து அறம் புரிதலில் மனம் வைத்து ஒழுகவேண்டும்'' என்று குறிக்கப்பட்டது.

"வாழ்நாட்(கு) அலகா வயங்கொளி மண்டிலம்
வீழ்நாள் படா தெழுதலால்—வாழ்நாள்
உலவாமுன் ஒப்புர வாற்றுமின் யாரும்
நிலவார் நிலமிசை மேல்."

என்று கூறுமாற்றையுங் காண்க.

"வைகலும் வைகல் வரக்கண்டும் அஃதுணரார்
வைகலும் வைகலை வைகுமென் றின்புறுவர்
வைகலும் வைகல்தம் வாழ்நாள்மேல் வைகுதல்
வைகலை வைத்துணரா தார்."

என்று கூறுவதும் அது.

பிறவிப் பயனும் அறஞ்செய்து மேம்படுமாறு கூறும் நாலடி, உடல், இளமை, செல்வம் என்பவற்றின் நிலையா இயற்கையை எடுத்துக்காட்டி வற்புறுத்தும் முறை பலவிடத்தும் காணப்படுகின்றது. அவற்றுள் மனங்கொள உரைக்கும் சில நாலடிகள் அறிந்து உணர்ந்து இன்புறத் தக்கன.

உடலியல் தெளித் தறமுணர்த்தல்

"புல்நுனிமேல் நீர்போல் நிலையாமை என்றெண்ணி
இன்னினியே செய்க அறவினை—இன்னினியே
நின்றான் இருந்தான் கிடந்தான்தன் கேளலறச்
சென்றான் எனப்படுத லால்."

என உடல் நிலையாமை, உலக நிகழ்ச்சி எடுத்துக் காட்டி உணர்த்துமாற்றைக் காண்க. உலகில் ஒருவன் நோய் முதலியன காணாது, திடீரென இறந்து விடுவதை யும் நாம் காண்கின்றோம். அக்காலை, அவனோடு பயின் றோர் இறந்த செய்தியைக் கேட்டுத் திடுக்கிட்டுச் 'சற்று முன் தானே நான் அவனுடன் உரையாடிக் கொண் டிருந்தேன்; நான் சிறிது முன்தானே அவனை வயல்

வெளியிற் கண்டேன் ; கொஞ்சநேர முன் தானே அவன் மக்களோடு மகிழ்ந்து உரையாடியதைக் கேட்டேன்,' என்று பலவாறு கூறுவதை நாம் கேட்டிருக்கின்றோம். 'என்னுடன் தான் வீட்டிற்கு வந்தான் ; மயக்க முறு கிறதென நின்றான் ; தலை சுழற்றுகிறதென உட்கார்ந் தான் ; சோர்வுற்றதெனப் படுத்தான் ; மறுகணத்தில் இறந்தான்' என்று கூறுவதையும் நாம் கேட்கின்றோம். இதே நிகழ்ச்சியை யன்றோ "நின்றான் இருந்தான் கிடந் தான் தன் கேளலறச் சென்றான்" என்று கூறப் பட்டது.

இங்ஙனமாதலினால் உடல் புல் நுனிமேல் நிலைத் துள்ள பனித் திவலை போலாகும் என்று கூறுகின்றது. புல் நுனியில் உள்ள பனிநீர் காண்பதற்கு அழகாகத் தோன்றினாலும், வெயிலெழ எழ மிக விரைவில் ஆவி யாகப் போம். கதிரவன் ஒளியாலன்றி வறண்ட காற் றினாலும் இழுக்கப்பட்டு அழியும்: புன்மேல் ஒட்டாது நிற்றலின் காற்றின் சிறு அசைவாலும் கீழே விழுந்து கெடும். இன்னதாதலின் அது நிலையற்று விரைந்தழியும் தன்மையதன்றே? அங்ஙனமே உடலும் நோயாலும், பிறர் தனக்குச் செய்யும் கொடுஞ்செயலாலும், எதிர் பாரா இடுக்கணாலும் அழிதற்குரிய தன்றே? இங்ஙனம் உடல் நிலையாததாகத் தெளியப் படுதலின், இன் றைக்கே, இப்பொழுதே அறம்புரியத் தொடங்குக என்றுணர்த்துவதாய் "இன்னினியே செய்க அறவினை" என்று கூறப்பட்டதென்க.

**இளமை இயல்பு காட்டி அறமுணர்த்தல்**

இனி இளமை நிலையாமையை எடுத்துக்காட்டி அறம் புரிய வற்புறுத்துமாறு :—

" மற்றறிவாம் நல்வினை யாம்இளையம் என்னாது
கைத்துண்டாம் போழ்தே கரவா தறஞ்செய்ம்மின்
முற்றி யிருந்த கனியொழியத் தீவளியால்
நற்காய் உதிர்தலும் உண்டு."

இளங்காயும் முதிர்கனியுமாய் நிறைந்து அழகுடன் ஒரு மரம் விளங்கி நிற்கும்பொழுது, ஒரு புயற் காற்றானது சுழன்று வீசி யடித்ததாயின், அவ்வமயத்து வலிபெற்ற காம்புடைய முதிர்ந்த பழங்களெல்லாம் மரத்தின்கண்ணேயே தங்கிநிற்க, வலியற்ற மெல்லிய காம்புடைய இளங்காய்களெல்லாம் உதிர்ந்துவிடுதலும் உண்டன்றே? இங்ஙனமே முதியோர் மேலும் உலகில் வாழ, இளைஞர் இறந்து படுதலும் காணப்படுவதன்றே? உலகியற்கை இங்ஙனமாகவே, "நாம் இக்காலை இளைஞரா யிருக்கின்றோம்; நல்வலி பெற்றுப் பேராண்மையுடன் திகழும் காளைப்பருவத்து அறங்களையெல்லாம் தாழாது செய்வோம்" என்று ஒருவர் நினைப்பாராயின், அவர் இடைக்காலத்தேயே இறக்க, அவர் எண்ணெங்களெல்லாம் 'ஊமன் கண்ட கனவாகவே' போதலும் கூடுமன்றே? ஆகவே, உடலின் தன்மை இங்ஙனமாதலை யுணர்ந்தவர்கள் கையில் பொருள் பெற்ற பொழுதே அதை அறவழியில் செலவிடலன்றி, மறைத்துவைத்துப் பொருட்பயன் தேறாப் பேதையாய் ஆக லாகாது என்றுணர்த்துவதாய்க் " கைத்துண்டாம் போழ்தே கரவா தறஞ்செய்ம்மின் " என்று கூறுவதாயிற் றென்க.

**செல்வத் தியற்கை காட்டி அறமுணர்த்தல்**

இனிச் செல்வ நிலையாமையை எடுத்துக்காட்டி அறஞ் செய்ய வற்புறுத்துமாறு :—

"நின்றன நின்றன நில்லா எனஉணர்ந்து
ஒன்றின ஒன்றின வல்லே செயின்செய்க."

ஒருவனிடத்து நிலைத்து நிற்கும் செல்வம் அக் காலத்திருப்பதே உறுதியாம்; உடனே நீங்குதலும் கூடு மன்றே? இதையுணர்த்தவே "நின்றனவே நின்றன" என்றபொருளில் "நின்றன நின்றன" என்றுகூறி, "நின்றன நில்லா" என்று பின்னும் கூறப்பட்டது. "செயின் செய்க" என்பது நல்லறத்தைச் செய்ய நினைப்பின் தாழாது செய்க என்றவாறும். 'நும்மால் செய்ய முடிந்த வழிவகைகளி லெல்லாம் அறஞ்செய்க' என்றுணர்த்தவேண்டி "ஒன்றினசெய்க" என்று கூறப்பட்டது. செய்யவேண்டியதை விரைந்து செய்க என்பதாய் "வல்லே..........செய்க" என்று கூறப் பட்டது. "அறஞ்செய்ய விரும்பின், செல்வ நிலையா மையை யுணர்ந்து, இயன்ற வழி வகைகளிலெல்லாம் விரைந்து செய்க" என்றிங்ஙனம் வலியுறுத்திய முறை பெரிதும் மனம் பதிதற்குரிய தன்றே? வள்ளுவரும்,

"ஒல்லும் வகையால் அறவினை ஓவாதே
செல்லும்வா யெல்லாஞ் செயல்."

என்று இடையீடின்றி அறஞ் செய்யுமாறு வற்புறுத்தி யதனைக் காண்க.

**ஈதலறம்:** இனி அறநெறிகள் பலவற்றுள்ளும் ஈத லறத்தையே சிறந்தெடுத்துக் கூறுகின்றது நாலடி. "பொருளில்லார்க் கிவ்வுலக மில்லை" என்று கூறுமாறு உலகியல் நடைபெறுவது பொருளாலேயாதலின், பொருளுடையார் பொருளற்றார்க்குக் கொடுத்து வாழின் எவ்வகை உலகியலும் தவறாது நடைபெற லின், எவ்வறத்திற்கும் தலையறமாயிற்று ஈதலறம்.

மேலும் ஈதலறம் எவ்வகைப் பட்டோராலும் கைக் கொள்ளற்குரியதுமாகும். ஈதலறமே ஒருவன் நற் பண்பை முற்பட்டுத் தெரிவிப்பதாகும் என்க.

"ஈதலறம் தீவினைவிட் டீட்டல் பொருள்" என்று கூறி ஈதலே அறம் என்றுணர்த்தினர் ஆன்றோரும்.

**பகுத்துண்டல்:** இவ்வீதலறத்தைப் "பகுத்துண்டு வாழ்க" என்று கூறியுணர்த்துகின்றது நாலடி. பிறரை யும் தம்முள் ஒருவராகக் கருதி, அவர்க்கு ஒரு கூறு கொடுத்துப் பின் தாம் உண்ணவேண்டும் என்ற கருத் தைக் கொண்டுள்ளதாகும் 'பகுத்துண்டல்' என்பது. அங்ஙனம் பகுத்துக் கொடாது தாமே உண்டல் உண் டலே யாகாது என்று கூறுகின்றது நாலடி.

> " நட்டார்க்கும் நள்ளா தவர்க்கும் உளவரையால்
> அட்டது பாத்துண்டல் அட்டுண்டல்."

என்று கூறுமாறு காண்க. நட்டார், நெருங்கிய தொடர்புடையார். நள்ளாதவர், அயலார். பிறர்க்குக் கொடாது தாமே யுண்டற்கு, அருள் நீங்கிய வன்கண்மையுடைமையே காரணமாதலால், அவ் வுணவு நன்மை தராது, தீமையே கொடுக்குமென்பது உய்த்துணரப்படும். மற்றுப் பகுத்துண்டலே பிறர்க்கும் இன்பத்தைக் கொடுத்துத் தமக்கும் இன்பத்தைக் கொடுக்குமாம். பகுத்துண்டல் கருதி யன்றோ வள்ளுவரும்,

> " இருந்தோம்பி இல்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி
> வேளாண்மை செய்தற் பொருட்டு."

என்று கூறி, "விருந்தினரைப் பேணி அவர்கட் குபகாரம் செய்யாவிடின், இல்லின்கண் மனைவியோ டிருந்து பொருளைப் போற்றி வாழ்வதெல்லாம்

பயனற்ற செயலேயாம்'' என்றுணர்த்தினர். இதே கருத்தைக் கொண்டே பிற்காலத்தும் நீதியுணர்த்த வந்த ஒரு வெண்பா,

"தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் என்றிவரோ(டு)
இன்புறத்தான் உண்டல் இனிதாமே—அன்புறவே
தக்கவரை இன்றித் தனித்துண்டல் தான்கவர்மீன்
கொக்கருந்த லென்றே குறி."

என்று கூறிப் 'பகுத்துண்டலே இன்பத்தைக் கொடுப்ப' தென்றும், தனித்துண்டல் 'கொக்குத் தனித்திருந்து மீனுண்ணலோ டொக்கு' மென்றும் உணர்த்தியது.

இங்ஙனம் பாத்துண்ணலை வற்புறுத்திக் கூறி மற்றொரு நாலடி,

"பரவன்மின் பற்றன்மின் பாத்துண்மின் யாதும்
கரவன்மின் கைத்துண்டாம் போழ்து."

என்றுணர்த்துகிறது. "பொருளைத் தேடற்கே நாட் கழிப்போராய்ப் பரந்துபட்டுப் பலவிடங்கட்குச் சென்று அலைந்து திரியாதீர்கள். கிடைத்த பொருளைச் செலவிட்டு இன்புறாமல் இறுகப் பிடிக்காதீர்கள். நாடோறும் ஈட்டும் பொருளைப் பலர்க்கும் பகிர்ந்து கொடுத்து உண்ணுங்கள். நும்மாட்டு வந்து நுமக் கியன்றதொன்று யாதானும் பிறர் கேட்டபொழுது கொடாமல் ஒளிக்காதீர்கள்" என்று உணர்த்தி அறிவுறுத்துமாறு காண்க. இந்நாலடியின் முன் னிரண்டடிகள் மக்களுடலுக்கு நோயும் மூப்பும், சாக்காடும் உள்ளவாதலை எடுத்துக்காட்டி,

"முன்னரே சாநாள் முனிதக்க மூப்புள
பின்னரும் பீடழிக்கும் நோயுள."

என்று கூறிப், பாத்துண்ணு மியற்கையை விரைந்து கைக்கொள்ளுமாறு குறித்தன.

உணவு பலருக்கும் பகிர்ந்து கொடுத்து உண்ணத் தக்கதன்றித் தனித்துண்ணத் தக்கதன்று என்பதை யுணர்த்துகிறது ஒரு நாலடி. அவ்வுணவு பலர்க்கு முரிமை பெற்றிருக்கின்ற நிலத்தில், பல்லோரும் சேர்ந்துசெய்யும் கூட்டுத் தொழிலாகவே செய்யப்படும் உழவுத் தொழிலால் பெறப்படும் தன்மைத்தாகலை எடுத்துக்காட்டி, அங்ஙனம் பலர்க்கும் உரிமை பெற நிற்கும் நிலத்தில், பலருடைய் கூட்டு முயற்சியால் வந்த உணவுப்பொருள், பலர்க்கும் பகுத்துக் கொடுத் துண்டற்கே உரிமையுடைத்தன்றித் தாமே யுண்டற்கு உரிமையுடைத்தன்று என்று குறிப்பிக்கின்றது.

'' துகள்தீர் பெருஞ்செல்வம் தோன்றியக்கால் தொட்டுப்
பகடு நடந்தகூழ் பல்லாரோ டுண்க.''

என்றது காண்க. பகடு நடந்த கூழ், ஏர்பூண்ட காளை நடத்தலால் (உழுதொழிலால்) வந்த உணவு என்பதாகும். உழுதொழிலால் வந்த செல்வமாதலின் குற்றமற்ற பெருஞ் செல்வம் என்று சொல்லப்பட்டது. செல்வம் ஓரிடத்து நிலைத்து நிற்கும் இயற்கையுடைய தன்றாகலின், 'தோன்றியக் கால்தொட்டுப் பல்லாரோ டுண்க' என்று சொல்லப்பட்டதென்க. செல்வம் நிலைத்து நில்லா இயற்கையை இந்நாலடியின் மற்றை யிரண்டடிகள் தெளியக் காட்டுகின்றன.

'' அகடுற யார்மாட்டும் நில்லாது செல்வம்
சகடக்கால் போல வரும்.''

நிலைமாறிக் கொண்டிருக்கும் செல்வத்துக்குச் சுழன்று கொண்டிருக்கும் சக்கரம் உவமை கூறப்

பட்டது. வண்டிச் சக்கரமும் உழுதொழிலாளரிடையே பிரியா துறையும் பொருளன்றோ? பொருந்திய உவமையே கூறப்பட்டதென்க.

ஒரு நாலடி 'தாம் உண்ணப்புகும் முன் முதற் படியை அறஞ் செய்தன்றி உண்ணுதோரே சான்றோ ராவர்' என்று, சிறந்த உண்மையை எடுத்துக் காட்டு கின்றது. இது பகுத்துண்ணும் கடப்பாட்டினின்றே எழுந்ததன்றே?

> "முன்துற்றும் துற்றினை நாளும் அறம்செய்து
> பின்துற்றுத் துற்றுவர் சான்றவர்—அத்துற்று
> முக்குற்றம் நீக்கி முடியும் அளவெல்லாம்
> துக்கத்துள் நீக்கி விடும்." (துற்று - உணவு)

முதற் பிடியை அறஞ் செய்தலாவது, தாம் உண்ப தற்கு முன் வறியார்க்குக் கொடுத்தலாம்: இயலாத விடத்து, உண்பதற்குமுன் தாம் கொண்ட முதற்பிடி யைக் காகத்திற்காயினும் அளிப்பதாகும். பண்டைத் தமிழ்ச் சான்றோரின் இச்செயலே இன்றும் சில ரிடத்துக் காணப்படுகின்றது. இங்ஙனம் அறஞ் செய்து உண்ட உணவே ஒருவருக்கு இன்பந்தருமென்று ஈண்டு உணர்த்தப்பட்டவாறு காண்க. உணவுக்கு முன் செய்யும் அறமே விலங்கியற்கையினின்றும் அவனை நீக்கலின், காம வெகுளி மயக்கங்கள் அறுந் தொழிகின்றன என்க.

**அறமும் செல்வமும்:** பகுத்துண்டு அறவழி நிற்பதற்கு நிறைசெல்வம் வேண்டுமென்று நினைப்பவர் சிலர். நிறை செல்வமே பல்லறங்களையும் சிறக்கச் செய்வ தற்குக் காரணமாயினும், அச்செல்வ மொன்றையே கருதி, அது குறைவு பட்டதாயின் அறத்தை மறத்தல்

பெரும் பேதைமையாம் என்க. உள்ளபொருளுக்கும், வீணே கழியும் காலத்துக்கும் ஏற்ற முறையில், சிறந்த பல அறங்களைச்செய்தல் பெரும் பயனுடைச் செயலாம். அறம் செய்யின் பொருள் குன்றும் என்று நினைத்து, அறஞ்செய்தற்கண் நெகிழ்ந்திருத்தல் அறிவுடைமையன்றாம். செல்வம் பெருகுதற்கும் கெடுதற்கும் முன்செய் வினைப்பயன் காரணமாதலை நினைவுறுத்தி, அறத்தைக் கைக்கொள்ளுமாறு கூறுகின்றது ஒரு நாலடி.

"நடுக்குற்றுத் தற்சேர்ந்தார் துன்பம் துடையார்
கொடுத்துத்தான் துய்ப்பினும் ஈண்டுங்கால் ஈண்டும்
இடுக்குற்றுப் பற்றினும் நில்லாது செல்வம்
விடுக்கும் வினை உலந்தக் கால்."

இயன்றவரையில் பிறர்க்குங் கொடுத்துத் தாமுமுண்டாலும் பொருள் சேருங் காலமாயின் சேர்ந்துகொண்டே யிருக்குமென்றும், பொருளை அறஞ் செய்யாமலும் தாம் நுகராமலும் இறுக்கிப் பிடித்தாலும், அது போங்காலமாயின் போய்த்தான் தீருமென்றும், ஊழ்வினை யுண்மையையும் ஒருவாறு உணர்ந்து நடக்கவேண்டும். வறுமையுற்றுத் தம்மையடைந்தாருடைய துன்பத்தைத் துடைக்கப்புகின், நம் செல்வம் குறையுமே யென்றெண்ணி, செல்வப் பயனை இழப்பாருடைய அறிவுதான் என்னே என்று வியந்து கூறிற்று. இது குறித்தே பெரியோர் இயல்பைக் கூறுமொரு நாலடி,

"எற்றொன்று மில்லா இடத்தும் குடிப்பிறந்தார்
அற்றுத்தற் சேர்ந்தார்க்(கு) அசைவிடத்(து) ஊற்றாவர்
அற்றக் கடைத்தும் அகல்யா(று) அகழ்ந்தக்கால்
தெற்றெனத் தண்ணீர் படும்."

என்று கூறிச் சென்றது. ஆறு, தான் நீர் நிறைந்த காலத்துத் தானே வாய்க்கால் மூலம் தண்ணீரைக் கொண்டு கொடுத்தும், வறண்ட காலத்துத் தன்னை வந்து தோண்டினார்க்கு ஊற்றால் நீரைக்கொடுத்தும் உதவல் இயற்கையன்றே? இங்ஙனமே வறுமைக்காலத்தும் பெரியோர் தம்மை யடைந்தோர்க் குதவுவர் என்க.

இனி, நிறை செல்வம் பெறாதோரில் வாழ்க்கைக்கு வேண்டிய வசதிகளைச் செய்து கொண்டபின் அறஞ் செய்வாம் என்று நினைப்பாரும் உளர். அவரை நோக்கிக் கூறும் நாலடியைக் காண்க.

> "பெருங்கடல் ஆடிய சென்றார் ஒருங்குடன்
> ஓசை யவிந்தபின் ஆடுதும் என்றற்றால்
> இற்செய் குறைவினை நீக்கி அறவினை
> மற்றறிவாம் என்றிருப்பார் மாண்பு."

கடலாடச்சென்றார் ஒருவர், அலை யோய்ந்தபின் முழுகுவோமென்று நினைப்பின் அஃது இயலுமோ? கடலலை யோய்தல் ஒருநாளு மில்லையன்றே? அங்ஙனமே, தம்வாழ்க்கைக்கு வேண்டிய பல வசதிகளையும் செய்து விட்டுப் பின் அறஞ் செய்வோமென்று நினைப்பின், வாழ்க்கை வசதிகள் முற்றுப்பெற நிறைவேற்றல் ஒரு நாளு மில்லை யாதலின், அறஞ்செய்யத் தொடங்குதலும் ஒருநாளு மில்லையென்க.

"நிறைசெல்வம் பெறாதோர் செல்வத்தை மேலும் பெருக்க வேண்டுமாயின், அறவழியில் செலவு செய்தலை ஒழித்து வாழவேண்டு மென்று எண்ணலாகாது; செல்வப் பெருக்குக்கு அதுவே காரணமாவதென்பதை விட்டுச், செல்வப் பெருக்கத்துக்கும் அழிவுக்கும்

வினைப்பயன் சிறந்த காரணமாமென்பதை நினைவுறுத்தி, இயன்ற வகையில் அறஞ்செய்து வாழவேண்டும்; வாழ்க்கைவசதிகளைத் தேடுவதுடன் அறத்தையீட்டுவதே தலை சிறந்த ஒன்றாம் என்று உணரவேண்டும்'' என்பன கூறப்பட்டன.

**செல்வம் குறைந்தோர்:** அறஞ் செய்யாமைக்குப் பொருளின்மையைக் காரணமாக்கக் கூடாதென்பதை யுணர்த்தும் நாலடி,

> **'' இல்லா இடத்தும் இயைந்த அளவினால்**
> **உள்ள விடம்போற் பெரிதுவந்து.''**

கொடுத்தல் வேண்டும் என்று கூறுகிறது. நிறைசெல்வமில்லா விடினும் தன்னுணவுக்கேனும் சிறிதிருந்தால், அஃதுள்ளதாதலையே மதித்து, உள்ள அப்பொருட்கேற்ப இயன்றவகை கொடுக்கலா மன்றோ? தனக்கியன்றதைக் கொடுத்தற்கு ஒருவன் மனம் மாறுபடாது மகிழ்வானாயின், அவன் நிறைசெல்வம் பெறாமைக்கு வருந்த வேண்டுவதன்றன்றோ? ஆதலின் நிறைசெல்வம் அற்றாயினும் அதற்குக் கவலாது, உள்ளதில் ஒரு பகுதியைக் கொடுத்தற்கண் மனம் மகிழவேண்டுமென்றுணர்த்தப்பட்டது. ''உள்ளவிடம் போல் பெரிதுவந்து'' என்று கூறப்பட்டது காண்க. இதனால் செல்வக் குறைவையே பெரிதாகக்கருதி ஈதல் இயலவில்லையே என்று வருந்தாது, உள்ளதில் இயைந்த ஒரு பகுதியைக் கொடுத்தற்கண் மனம் மகிழும் இயற்கையே ஒருவனுக்கு வேண்டும் என்பது துணியப்படும்.

இது கருதியே மற்றொரு நாலடி

> **'' இம்மி யரிசித் துணையானும் வைகலும்**
> **நும்மில் இயைவ கொடுத்துண்மின்.''**

என்று கூறுவதாயிற்று. கொடுக்கப்படும் பொருள் மிகச் சிறிதாயிருக்கிறதென்பதைப் பற்றிக் கவல வேண்டா என்றுணர்த்த "இம்மியரிசித் துணையானும்" என்று கூறப்பட்டதென்க. கொடுக்கும் பொருள் அங்ஙனம் மிகச் சிறிதாயினும், அவ்வறத்தை நாடோறும் செய்க என்றுணர்த்தி "வைகலும்" என்றுரைக் கப்பட்டது. அம்மிகச் சிறிய அளவு நுமக்கு வருத்தந் தராது, நும்மால் மனம் மகிழ்ந்து கொடுக்க இயைந்த அளவுஇருக்கலாம் என்பதை உணர்த்தி 'நும்மில் இயைவ' என்று கூறப்பட்டது.

இனி, நிறைந்த பொருளற்றவனாயினும், இயைந்த அளவால் நாடோறும் மனம் மகிழ்ந்து செய்யப்படும் அறமானது, பொருளளவு நோக்கச் சிறிதாயினும், அது நாடோறும் செய்யப்பட்டுவரின், முடிவில் பெருகிப் பெரும்பயனளிப்பது ஒருதலையாம். இதையொரு நாலடி குறிக்குமாற்றைக் காண்க.

> " இறப்பச் சிறிதென்னு(து) இல்லென்னு(து) என்றும்
> அறப்பயன் யார்மாட்டும் செய்க—முறைப்புதவின்
> ஐயம்புகூஉம் தவசி கடிஞைபோல்
> பைய நிறைத்து விடும்.''

'நாம் சிறுபொருளே பெற்றிருக்கின்றோமாகை யால், நாம் கொடுக்க நினைக்கும் பொருள் மிகச் சிறி தாகவே இருக்கின்றதே' யென்று மயங்கலாகாதென் றுணர்த்த "இறப்பச் சிறிதென்னுது" என்று கூறப் பட்டது. அப்பொருளின் சிறுமை நோக்கி இல்லை யென்று சொல்லிவிடலாகாது என்பது "இல் என்னுது" என்று கூறி உணர்த்தப்பட்டது. உள்ளதற்கேற்ப இயைந்த அளவு நாடோறும் செய்ய வேண்டும் என்பதை யுணர்த்தி 'என்றும்' என்று கூறப்பட்டது.

'நாம் தகுதியுடையார் வாய்த்தவழியே அறஞ்செய்ய வேண்டும்' என்ற குறிக்கோளேயே கொண்டு கழிதலும் ஆகாதென்பது "யார்மாட்டும் செய்க" என்றதால் கூறப்பட்டது. இங்ஙனம் செய்யும் அறமே வாழ்க்கைப் பயனுமாதலின், "அறப்பயன்" என்று கூறப்பட்டதென்க. "இல்லையென்று சொல்லாமல், தாம் கொடுக்கும் பொருள் சிறிதேயாயினும் மனமுவந்து, இன்னார் இனியார் என்று வேறுபாடு கருதாமல், பொருளளவுக் கேற்ப, நாடோறும் அறத்தைச் செய்யின், அதுவே வாழ்க்கைப் பயனுயமையும்" என்பது கூறப்பட்டவாறும். ஈண்டுக் கூறப்பட்ட உவமையை நோக்குக.

பல வீடு சென்று இரப்போனுக்குப் பிச்சைப் பாத்திரம் நிறைய, நாடோறும் பலருக்கும் தவருது ஈவோனுக்கும் அறப்பயன் நிறைகின்றது. ஒரு நாளில் அந் நாளுக்கு வேண்டிய உணவை இரப்போன் அடையத், தன் வாழ்நாள் முடிவில் தன் வாழ்நாளின் பயனே ஈவோன் நிறைவெய்தி யடைகின்றுன். ஆதலின், இறப் போனுக்கு அரிசி நிறைய, அவ்வமயத்து ஈவோனுக்கு அறப்பயன் நிறைகின்றது. ஈவோனுக்கும் இரப்போனுக்கும் நடுவில் நின்ற பிச்சைப் பாத்திரம், இரப்போனுக்கு அரிசியின் நிறைவையும், ஈவோனுக்கு அறப் பயன் நிறைவையும் கொடுத்து நின்றமையின், கட்புலனுன அரிசியின் நிறைவு, கட்புலனுகாத அறப்பயன் நிறைவுக்கு ஏற்ற உவமையாயமைதல் பொருத்தமன்றே?

இனிப் பொருளளவு சிறிதாயினும், அஃதற்ருர்க்கு மிகப் பெரியதாய் இருந்து உதவுமன்றே? ஆதலின், சிறு

பொருளாயினும் அது பிறர்க்குப் பெரும்பயன் விளைக்கும் என்று உணர்த்துகின்றது ஒரு நாலடி. அங்ஙனம் விளைந்த பெரும்பயன், இம்மையில் புகழையும் மறுமையில் இன்பத்தையும் கொடுக்குமாற்றை நினைவுறுத்தி,

> "மறுமையும் இம்மையும் நோக்கி ஒருவற்கு
> **உறுமாறு இயைவ** கொடுத்தல்."

என்று கூறுகின்றது. 'இயைவ' என்றதால் பொருளளவு சிறிதாயினும் என்று குறித்ததாம். அச் சிறு அளவு அஃதற்றார்க்குப் பெரும்பயன் அளிக்கும் மேன்மை "உறுமாறு" என்று கூறி உணர்த்தப் பட்டது.

இங்ஙனம் குறைந்த செல்வத்தராயினும், தங்நலம் பேணாது, பிறர்நலம் பேண முற்பட்டுக் கொடைமேற் கொள்ளின், அக்கொடையே உயர்ந்த அறமெனப்படு மென்பதாம். மற்று, நிறைசெல்வம் பெற்றோர் தாம் நுகரவேண்டுவனவெல்லாம் குறைவற நுகர்ந்தே அறம் புரிதலியற்கையாதலின், அவர் கொடை முன்னதை நோக்கக் குறைந்ததாதல் தெள்ளிதின் உணரப்படும். இச்சிறந்த கருத்தை ஒருநாலடி தெரிவிக்கின்றது.

> "இளையான் அடக்கம் அடக்கம் **கிளைபொருள்**
> **இல்லான் கொடையே கொடைப்பயன்**—எல்லாம்
> ஒறுக்கும் மதுகை உரனுடை யாளன்
> பொறுக்கும் பொறையே பொறை."

மேன்மேலும் பெருகிச் செல்லும் இயற்கையதான நிறைசெல்வம் பெறாது, சிறு செல்வம் பெற்றுவைத் தோன் பிறர்க்குக் கொடுக்கும் பேரறமே உயர்ந்த

அறமா மென்பதற் கொப்புமையாக மற்றிரண்டும் வந்தனவாகக் கொள்க. பிறந்து வளர்ந்து இன்பந் துய்த்துக் கிழப்பருவம் வாய்க்கப் பெற்று மூத்தோன், "நான் ஐம்பொறிகளையும் அடக்கிவிட்டேன்" என்று கூறின், அதைக்கேட்டு நகையாடாதவர் யாவர்? கட்டிளமைப் பருவத்தான் ஒருவன் ஐம்பொறியையும் மனம்போனபடி விடாமற் றடுத்துத், தன் சிறந்த அறிவால் அடக்கியாண்டு மேம்பட்டானாயின், அவனை யாரும் மேலோனாக மதித்துப் பாராட்டுவரென்பதும் தெளிவாம். இனி அறிவாலும் உடலாலும் செல்வத்தாலும் வலியற்று, எச்செயலையும் தானேயாய்ச் செய்து முடித்தற்கு ஆற்றலற்ற ஒருவன், தனக்குத் தீமை செய்தார் ஒருவர் மாட்டு "நான் பொறுமைகாட்டி மேற்பட்டேன்" என்று கூறுவானாயின், அதைக்கேட்டு நகையாடாதாரும் உலகில் இல்லை. எதையும் அழிக்கும் அறிவு வன்மையும் மனவன்மையுமுடையோர் தம்மிடம் பகைமை காட்டினாரிடத்துப் பொறுமை மேற்கொண்டு அதைப் பாராட்டாதொழியின், அச்செயல் பலராலும் புகழப்படுமன்றே? இங்ஙனமே நிறைசெல்வம் பெற்றோன் கொடைப்பயனினும், சிறு செல்வம் பெற்றோன் கொடைப்பயன் பல மடங்கு பெரிதென் றுணர்க.

### நிறைசெல்வம் பெற்றோர்

இனி நிறைசெல்வம் பெற்றோராயினும் ஈகையறம் பூண்டு தமக்கு ஆக்கந்தேடிக்கொள்ளாது, தாமே உண்டுறங்கிப் பொருளின் சிறந்த பயனை அறியாதொழிந்து கழியின், அவர் வறியரையே ஒப்பாவது தெளிவாம். இது குறித்து ஒரு நாலடி,

"—செல்வரும்
நல்கூர்ந்தார் ஈயா ரெனில்."

என்று கூறுகிறது. நல்கூர்ந்தார் வறியோர். வறியோர் பொருளின்மையால் பொருட்பயன் அடையாதாராக, இவர் பொருளிருந்தும் அதன் சிறந்த பயனை அறிந் துணராப் பேதையராய் நின்றனர். இதே கருத்தை மற்றொரு நாலடி,

"மல்லன்மா ஞாலத்து வாழ்பவருள் எல்லாம்
செல்வ ரெனினும் கொடாதவர் நல்கூர்ந்தார்."

என்று கூறுகிறது. பெருஞ் செல்வராயினும், உளநிறை வற்றவராய்ப், பேரவாவால் விழுங்கப்பட்டு, எக்காலமும் மனவமைதியின்றி வருத்தப்பட்டொழுகலோடு, உள்ள பொருளையும் அறவழியில் பயன் படுத்தாமல் வீணே கழிவாராயின், அவர் வறியோரே என்று சொல்லப்படற் கிழுக்கென்னை? மற்றொருவர் வறிஞராயினும், பேரவா என்னும் தீயினின்றும் நீங்கி, இரத்தலை விட்டு, முயற்சியே மேற்கொண்டு, மனவமைதி பெற்றவராய்த், தம்மிடம் உள்ளதைப் பிறர்க்கும் பகிர்ந்துகொடுத்து, 'நம்மாலான சிறந்த அறத்தையும் செய்தோம்' என்று மனம் மகிழ்ந் திருப்பாராயின், அவர் செல்வராதற்கு இழுக்கென்னை?

'செல்வரும் ஈகையறம் பூணுவிடத்து வறிஞரே' என்று வற்புறுத்திய நாலடி,

"செல்வ முடையாரும் செல்வரே தற்சேர்ந்தார்
அல்லல் களைப வெனின்."

என்று மேற்கூறுகிறது. செல்வம் பெற்ற அளவே செல்வரானவர்கள், அச்செல்வப் பயனைப் பிறர் துன்பந் துடைத்த வழியே, உண்மைச்செல்வராவ

ரென்பது ஈண்டு உணர்த்தப்படுகிறது. தஞ்செயலால் பிறர் மகிழ, அவர் மன நிறைந்த மகிழ்ச்சியால் தந் துன்பந் துடைத்தோரை வாழ்த்துவாராதலால், அது அவருக்கு ஆக்கத்தை யளிக்குமென்க. ஒருவர் செய்த கொடுஞ் செயலால் மற்றவர் மனம் நைந்து கொதிப்பாராயின், அது தீமைசெய்தாரைச் சார்வதும் உலகியலில் உணரப்படுமன்றே. அங்ஙனமே ஒருவர் செயலால் மற்றையோர் மனந்துளும்பும் மகிழ்ச்சிகொண்ட விடத்து, அது நற்செயல் செய்தார்க்கு ஆக்கந் தருதலும் திண்ணமாகத் துணியப்படுமென்க. இங்ஙனம் ஈகை மேற்கோடலால், பிறர் துன்பம் துடைத்துத் தலைமை யெய்தித் தாம் மகிழ்தலோடு, அதனால் பிறர் அடையும் மகிழ்ச்சியும் தம் ஆக்கத்திற்கே காரணமாதலால், ஈத் துவந்து பயன் கோடலைவிட வேறு சிறந்த பயனும் உலகில் உண்டோ? மற்று, ஒருவன் பெற்ற பொருளால் தானே இன்பம் நுகர நினைப்பானாயின், அச்செயல் அவன் ஆக்கத்திற்கு வழி தேடுவதாகாது. மற்று, அவன் கழிபேரின்பம் துய்த்து, மதிமயங்கி, உண்மையுணராது, பல அருஞ் செயல் செயற்கேற்ற சிறந்த பிறப்பைப் பயன்படுத்திக்கொள்ளாது பாழாக்கிக் கொண்டவனாய், முடிவில் வீணே இறத்தற்கே யாவன் என்க.

**ஈதலே ஆண்மை**

இனி நிறைசெல்வம் பெற்றோன்தானும் ஈகை யறம் பூண்டவழியே செல்வமுடையனுந் தன்மைக் கேற்ப ஆண்மையுடையவனாய் மேம்பட்டுத் தோன்றுவனென்க. அது பூணாத விடத்து அவனிடத்துப் பிறர் துயர் துடைக்கும் ஆண்மை தோன்ற லின்மையின்,

அவன் பேடியே யாவான் என்க. இது குறித்து ஒரு நாலடி,

> "ஏற்றகை மாற்றாமை என்னானும் தாம்வரையா(து)
> ஆற்றாதார்க் கீவதாம் ஆண்கடன்."

என்று கூறுகிறது. ஆற்றாதார் வறிஞர். அவர்க் கீதலே ஈகையா மென்பதும் உணர்த்தப்பட்டது.

> "வறியார்க்கொன் றீவதே ஈகை."

என்ற வள்ளுவர் வாய்மொழியையும் நோக்குக. தாம் கொடுக்க வாங்கித் தமக்கு மீண்டுங் கைம்மாறு செய்ய இயலாத நிலையில் பெறுவோர் இருக்கின்றமையின், இஃதாண்மையாதற் கிழுக்கென்னை? ஈதலன்றோ சிறந்த ஆண்மை. இதுவே ஆண்மைத் தன்மை யென் பதை யுணர்ந்தனராயின், பொருள் பெற்றும் ஈகைக் குணமற்றிருப்பாரோ? அவர் பொருள் பேடி கைய தாம் வாள் போன்றன்றோ பயனின்றி ஒழிகின்றது. ஆதலின், உலகில் ஈகையறம் பூண்டோரே ஆண்மை யுடையோராய்க் கொள்ளப்பட்டுத் தலைமக்களாகவும் கருதப்படுவர். இவரே தலை மக்களாவார் என்பதை ஒரு நாலடி,

> "இன்னர் இனையர் எமர்பிறர் என்னுஞ்சொல்
> என்னும் இலராம் இயல்பினால்—துன்னித்
> தொலைமக்கள் துன்பந்தீர்ப் பாரேயார் மாட்டும்
> தலைமக்கள் ஆகற்பா லார்."

என்று கூறுகிறது. தொலைமக்களாவார் வறுமை முதலிய கொடும் பிணியால் அழிகின்ற மக்கள். வறுமை யுற்றோர் இத்தகையினர், இவ்வளவினர், எம்மைச் சேர்ந்தவர், பிறர் என்றெல்லாம் ஒரு சிறிதும் கருதாது, அவர் படும் துன்பத்தின் தன்மையையே கருதி, அது

தீர்த்தற்கண் முயன்று செய்தலின், இவர் தலைவராதற் கிழுக்கென்னை? பலர் துன்பத்தை ஒருவராய் இருந்து தீர்த்தல் பெருந் தலைமைத்தன்மையைக் கொடுப்ப தன்றோ? ஒருவரால் பலர் வாழலின், பலரும் இவரையே தலைவராகக் கருதலும் வெளிப்படை. ஆதலின் இத்தலைமையை யடைய அவாவுக என்று குறிக்கப்பட்ட தென்க.

சிறந்த உவமை

இனி, அறவாழ்க்கை பூண்டு ஆண்மையுற்றோராய்ப் பிறர் துயர் துடைத்து வாழும் மேலோரைச் சிறந்த உவமைகொண்டு விளக்குகின்றது நாலடி.

> "அழல்மண்டு போழ்தின் அடைந்தவர்கட் கெல்லாம்
> நிழல்மரம்போல் நேரொப்பத் தாங்கிப்—பழுமரம்போல்
> பல்லார் பயன்றுய்ப்பத் தான்வருந்தி வாழ்வதே
> நல்லாண் மகற்குக் கடன்."

வெயிலவன் வெப்பத்தால் வாடிவதங்கும் மக்கள், அக்கொடிய வருத்தம் நீங்குமாறு நிழல்மரம் எங்கே னும் உண்டோ வென்று நாடிப் பார்த்தல் இயற்கை யன்றே? அங்ஙனமே வறுமை முதலிய கொடிய துன்பம் வந்துற்ற காலையும், மக்கள் அன்பும் அருளும் வள்ளன்மையும் பூண்ட பெரியோரையே தங்குறை முடிக்கத் தேடி வருந்துகின்றனர். பல் வுயிர்களும் தன்மாட்டு வந்து களைப்புநீங்கி மகிழ்ச்சிபெற நிழல் மரம் உதவுவதுபோலப், பெரியோரும் தம்மைத் தேடி வந்தோர்க்கெல்லாம் தாமே உற்றகுறை முடித்து வாழ்கின்றனர். இனி, ஊரகத்தேயுள்ள மா, பலா முதலிய கனிதரு மரங்கள் பூத்துப் பிஞ்சுவிட்டுக் காய்த்துப் பழுத்துப் பலர்க்கும் சுவை நிறைந்த பழங்

களைக் கொடுத்துதவி, அச்சிறந்த பழத்தால் தாமே பயனடையாதவாறு போலப், பெரியோரும் தாம் வருந்தி ஈட்டிய செல்வத்தால் பிறர் துயர்துடைத்து வாழ்வர் என்பதும் குறிக்கப்பட்டது. இக்கருத்தே குறித்தன்றோ வள்ளுவரும்,

"பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்றால் செல்வம்
நயனுடை யான்கட் படின்."

என்று கூறிச் சென்றனர். ஊரகத்தே பழுமரத்தைக் கூறியது போலவே, மற்றொரு நாலடி வீட்டருகே நிற்கும் பனைமரத்தைக் கொடையாளர்க்கு உவமை கூறிச், சுடுகாட்டகத்தே நிற்கும் ஆண்பனையை ஈயாத உலோபிக்கு உவமை கூறுகிறது.

"நடுவூருள் வேதிகை சுற்றுக்கோட் புக்க
படுபனை அன்னர் பலர்நச்ச வாழ்வார்
குடிகொழுத்தக் கண்ணும் கொடுத்துண்ணா மாக்கள்
இடுகாட்டுள் ஏற்றைப் பனை."

வேதிகை திண்ணையாம். பல மரங்களிருக்கவும் பனையைக் கூறியது, அது பிறர் நீரிறைத்தல் முதலியன வேண்டாதே பிறர்க்குப் பயன் கொடுத்தலின், அவ் வுயர்வு நோக்கி. சுடுகாட்டுள் நிற்கும் ஆண்பனை மக்கள் வழங்கா நெடுந்தொலைவில் இருப்பதையும், அது பிறர்க்கு நுங்கு பழம் என்பவற்றைக் கொடாது வறிதே நிற்றலையும் நோக்கி யுணர்க. இங்ஙனமே ஈயாத உலோபியரும் மக்கள் தம்மை நெருங்கிப் பழகாதவாறு தனித்து இருத்தலையும், பிறர்க்குப் பயன் படாது கழிதலையும் உணர்க.

**ஈதலே தலையறம்**

இனி, மக்கள் கடப்பாடாகக் கொள்ளவேண்டும் ஒழுக்கநெறிகளைத் தொகுத்துணர்த்தும் முறையில்

கூறிச் செல்லுமிடத்தும் இக்கொடையறமே தலையான அறமாகக் குறிப்பிட்டுச் சொல்லப்படுகிறது.

"கல்லாது போகிய நாளும் பெரியவர்கண்
சொல்லாது வைகிய வைகலும்—ஒல்வ
கொடாஅது தொழிந்த பகலும் உரைப்பின்
படாஅவாம் பண்புடையார் கண்."

'நாடோறும் கற்றலும், நாடோறும் நல்லாரோடு பழக லும், நாடோறும் கொடுத்தலும் நன்மகன் இயற்கையாம்' என்று கூறப்படுவது காண்க. கற்றல் அறிவின் விரிவையடைதற்காம். நல்லாரோடு பழகல் அறிவொடு நற்குணமெல்லாம் கைவரப் பெறற்காம். கொடை அவ்விரிந்த அறிவுக்கும் குண நிறைவுக்கும் ஏற்பக் கடமையாகக் கொள்ளவேண்டிய நற்செய்கையாம். ஆகவே, அவ்விரண்டின் பயன் கொடை என்பது குறிக்கப்படும். ஆதலின், இம்மூன்றுள்ளும் தலைமையா யமைவதும் கொடையறமே யன்றோ? மற்றொரு நாலடியும்,

"இனநன்மை இன்சொல்ஒன்(று) ஈதல்மற் றேனை
மனநன்மை என்றிவை எல்லாம்—கனமணி
முத்தோ டிமைக்கும் முழங்குவரித் தண்சேர்ப்ப
இற்பிறந்தார் கண்ணே யுள."

என்று கூறுவதைக் காண்க. இனநன்மை நல்லா ரிணக்கத்தைக் குறித்தது. மனநன்மை கல்விப் பயனைக் குறித்தது. ஈதல் பொருளளவாக மிகுந்தும்' குறைந்தும் இருப்பினும், இன்சொல் அங்ஙனம் பொருளளவு காரணமாக வேறாகாது, அறம் ஒருவர் மனத்தே நிலை பேறுடைமையைப் புலப்படுத்தி நிற்கும். வறுமை காரணமாக ஈதலியையா விடத்தும் இன்சொல் நிலைத்திருப்பதொன்றாகலின், ஈதலோடு தொடர்

புடைய இன்சொல் பிரித்துத் தனியறமாகக் கூறப் பட்டது. இவை மக்கட் பண்பு என்பது "இற்பிறந் தார் கண்ணே யுள" என்று கூறி உணர்த்தப்பட்ட தென்க.

"கல்லாமை யச்சம் கயவா தொழிலச்சம்
சொல்லாமை யுள்ளுமோர் சோர்வச்சம்—எல்லாம்
இரப்பார்க்கொன் றீயாமை யச்சம் மரத்தார்இம்
மாணுக் குடிப்பிறந் தார்."

என்ற நாலடியும் கல்வி, ஈதல் என்பவற்றைக் குடிப் பிறந்தார்க் குள்ளனவாக உணர்த்தலால், அவையே மக்கட்பண்பென்பது பெறப்படும். மற்றொரு நாலடியும்,

"அறிமின் அறநெறி அஞ்சுமின் கூற்றம்
பெறுமின் பிறர்கடுஞ்சொல் போற்றுமின் வஞ்சம்
வெறுமின் வினைதீயார் கேண்மைஎஞ் ஞான்றும்
பொறுமின் பெரியார்வாய்ச் சொல்."

என்று அறம் புரிந்தொழுகுமாற்றையே முதன்மை யாக எடுத்துக்கூறி, அதற்குச் சார்பான மற்றவைகளை யும் உடனுணர்த்திற்று.

ஈயாதோர் இழிபுரைத்தல்

இனி, உடற்பயனும் இத்தகைச் சிறந்த அறத் தைப் புரியாது வீணே கழியும் மக்களின் மடமையை எடுத்துக் காட்டி வியக்குமாற்றையும், அவரை வெறுத்துக் கூறுமாற்றையுங் காண்க:

"என்னேமற் றிவ்வுடம்பு பெற்றும் அறம்நினையார்
கொன்னே கழிப்பர்தம் வாழ்நாளை—அன்னோ
அளவிறந்த காதல்தம் ஆருயிர் அன்னார்க்
கொளவிழைக்கும் கூற்றமும் கண்டு."

'தாம் அளவிறந்து அன்பு பாரட்டும், தம்முயிரை யொத் தாரும் கூற்றுவனால் உடலினின்றும் உயிர் பிரிய நேருங் காலத்து, மிகப் பெரியதொரு துன்பத்தை யெய்திச் செயலற்றுக் கலங்குதலையும் ஒருவர் கண்டிருந்தும், உடல் நிலையற்றதாவதை யுணராது, அவ்வுடலை நிலை யானதாகவே கொண்டு, உடற்பய னடையவேண்டி அறம்புரியாது உடலோம்பலையும் உடலின்பத்தையும் மட்டுமே கருதி வாழ்நாளைக் கழிப்பாராய், வாழ்க்கைப் பயன் பெறுதுபோதலை நினைக்க, அவர் அறியாமையின் மேம்பாடே புலப்பட்டு வியத்தற்குரியதா யிருக்கின்ற தென்று புலப்படுத்தி வியந்த வாறும்.

உணவு தேடி யுழலுதற்கு மட்டுமே வாழ்க்கை யைச் செலவிட்டு "நம் ஆக்கத்திற்கான அறத்தை இயன்ற வழியெல்லாம் செய்கின்றோம்" என்ற மனக் கோள் பெறுது வீணே கழியும் மடவோர், தம் வாழ்க் கைப் பயனை ஒருகணமேனும் நினைத்துப் பாாத்தவரா வரோ? அவரை நினைந்து ஒரு நாலடி கூறுவதாவது:

" நல்லவை நாடோறும் எய்தார் அறஞ்செய்யார்
இல்லாதார்க் கியாதொன்றும் ஈகலார்—எல்லாம்
இனியார்தோள் சேரார் இசைபட வாழார்
முனியார்கொல் தாம்வாழு நாள்."

இத்தகையோர் தம்வாழ்க்கை பயனின்றிக் கழிதலை யுணர்ந்து அவ்வாழ்க்கையைத் தாமே வெறுக்கமாட் டார்களோ? அங்ஙனம் வெறுமையை நினைக்கும் பொழுது அது வியக்கத்தக்கதாகவே இருப்பதன்றோ?

ஒரு நாலடி, அறம்புரியாது நாளை வீணே கழிக்கும் ஒருவர் வாழ்நாளின் பயனின்மையைப் புலப்படுத்தி,

"இமைக்கு மளவில்தம் இன்னுயிர்போம் மார்க்கம்
எனைத்தானும் தாங்கண் டிருந்தும்—தினைத்துணையும்
நன்றி புகரில்லா நாண் இல் மடமாக்கள்
பொன்றிலென் பொன்ருக்கா லென்."

என்று கூறுவதாயிற்று. உடலின் நிலையற்ற தன்மையை முன்னிரண்டடிகளும் தெளியக் குறித்து நிற்கின்றன. அறம்புரியாதோர் "நாண் இல் மடமாக்கள்" என்று குறிக்கப்படுகிருர்கள். உடற்பயனறிந்து ஆவன செய்யாமையின் மடவோராயினர். அறமாம் நிலைத்த பயனை யடையத்தக்க உடலைப் பெற்றுவைத்தும், அவ்வழியில் முயலும் அறிவுத் திறமும், மனத்திண்மையுமற்று, அச்சிறந்த பயன்பெருது போதலை நினைக்க, அவரே நாணவேண்டியிருத்தலின், நாண மற்றவர் என்று குறிக்கப்பட்டனர். அவர் வாழுங்காலத்துத் தமக்குச் சிறந்த பயனைப் பெருமையின், இருந்தாலென் இறந்தாலென் என்று வெறுத்துக் கூறியதாம் நாலடி.

---

## அ. துறவறப் பெருநெறி

**உலக இன்பம்**

துறவை வலியுறுத்தும் நாலடி, உலக இன்பத்தின் தன்மையையும், அதை விரும்பி மனைவாழ்க்கையே பூண்டொழுகும் மக்களின் தன்மையையும் எடுத்துக்காட்டுவது முதலாவதாக உணரத்தக்கது.

i "துன்பம் பலநாள் உழந்தும் ஒருநாளை
இன்பமே காமுறுவர் ஏழையார்."

ii "துன்பமே மீதூரக் கண்டும் துறவுள்ளார்
இன்பமே காமுறுவர் ஏழையார்."

ஒரே கருத்தும் ஒரே மனப்பாங்கும் கொண்ட இரு வேறு சமண்புலவரின் இருவேறுசெய்யுட்களும் ஒற்றுமை யுற்றுத் திகழ்வன காண்க. பலநாள் துன்புற்றுச் சில நாள் இன்பத்துக்கே உழன்று நிற்கும் தன்மையும், துன்பமே மேன்மேலும் அடர்ந்து வரினும் அதுகண்டு வெறுத்து நீங்காது, மீண்டும் மீண்டும் உலக இன்பத்தையே அவாவி நிற்கும் இயல்பும் எடுத்துக் காட்டப்படுமாறு காண்க. இத்தகைய மக்கள் "ஏழையர்" என்று கூறப்பட்டவாறும் உணரத்தக்கது. ஏழையர் அறிவற்றவர்; இரங்கத் தக்கவர்.

அறிவற்ற ஏழையர் இங்ஙனமாகப், பேரறிவுற்ற மேலோர் மன இயற்கையை அந்நாலடி காட்டுமாற்றைக் காண்க.

"—இன்பம்
i இடைதெரிந்து இன்னாமை நோக்கி மனையா(று)
அடைவொழிந்தார் ஆன்றமைந் தார்."

"—இன்பம்
ii மிசை தோறும் மற்றதன் இன்னாமை நோக்கிப்
பசைதல் பரியாதாம் மேல்."

"மனை வாழ்க்கையில் இன்பம் இடையிடையே காணப்படுவதன்றி, அது துன்பமே நிறைந்தது என்ற உண்மை யுணர்ச்சியைப் பேரறிவுற்ற மேலோர் மனம் பொருந்த அறிகின்றனர்; அத்தகைய மனைவாழ்க்கையை நீங்குகின்றனர்: துறவற நெறியே அழியா இன்பத்தை எய்துவிக்கும் நெறியா மென்றுணர்கின்றனர்; அதன்கண் நின்றமைகின்றனர்", "மனைவாழ்க்கை பூண்டு இன்பம் நுகர்கின்ற விடத்தும், அவ்வின்பப் பொருள்களே பெருந்துன்பத்துக்கு உறைவிடமாய் நிற்

பதையும் உணர்கின்றனர்; அச்சிறு இன்பம் நோக்கி அதனிடத்துப் பற்றுவையாது, பெருந்துன்ப மெய்தவும் காரணமாயிருத்தல் நோக்கி அதைத் துறக்கின்றனர்'' என்று கூறப்படுமாறு காண்க.

உலக இன்பத்தை அவாவியே வாழும் மனைவாழ்க்கையில் துன்பம் பல வாதலையும் இன்பம் சில வாதலையும் சில சிறந்த உவமை கொண்டு விளக்குகின்றது நாலடி.

> "வெறியயர் வெங்களத்து வேல்மகன் பாணி
> முறியார் நறுங் கண்ணி முன்னர்த் தயங்க
> மறிகுள குண்டன்ன மன்று மகிழ்ச்சி
> அறிவுடை யாளர்கண் இல்."

முருகனுக்கு வெறியாட்டெடுக்கும் இடம். வெறியாட்டெடுக்கும் வேலன் முருகனுக்குப் பலியிடுதற்காக ஆட்டுடன் வந்து நிற்கின்றான். அவன் கையில் பலியிடுமுன் அவ்வாட்டின் கழுத்தில் இடப்பெறுதற்காகத், தழை இடை யிடையே வைத்துக் கட்டப்பட்ட மாலை உள்ளது. பக்கத்தே நிற்கும் ஆடு, அவன் கையிலுள்ள தழையைக் கண்டு அது நல்லுணவாமென்று கொண்டு கறிக்கின்றது. அத்தழை யிடையிட்ட மாலை, தன்னைப் பலியிடுவதற்காகக் கொள்ளப்பட்டுள்ளதென்பதை அஃதுணரவில்லை. இங்ஙனமே உலக மக்களும், உலகப் பொருள்களெல்லாம் தமக்கு இன்பத்தையே தருவனவாகக் கொண்டு மயங்கி நிற்கின்றனர். அப்பொருள்கள் மக்களைத் துன்பத்துள் ஆழ்த்துதற்கும் ஏதுவா மென்பதை யுணர்ந்து துறவு பூணுமாறு குறிப்பித்ததாம் இந் நாலடி.

மற்றோருவமையைக் காண்க.

"கொல்லனுர் உலைஏற்றித் தீமடுப்ப ஆமை
நிலையறியா(து) அந்நீர்ப் படிந்தாடி யற்றே
கொலைவல் பெருங்கூற்றம் கோள்பார்ப்ப ஈண்டை
வலையகத்துச் செம்மாப்பார் மாண்பு."

ஊனுண்போர் ஆமையைப் பிடித்து வந்து, அடுப்பில் உலை ஏற்றி, ஆமையை அதிலிட்டு, அடுப்பில் தீ மூட்டி எரிக்கின்றனர். உலைக்கண் உள்ள ஆமை, தான் எரியும் அடுப்பின்மீதுள்ள உலையிலிருப்பதை யறியாது, தான் நிறை நீரில் உள்ளமை யொன்றே நினைந்து மகிழ்ந்து, மூழ்கி விளையாடுகின்றது. சின்னேரத்தில் தான் மகிழ்ந்து விளையாடும் நீர் சூடேறிக் கொதிக்கத் தான் மாண்டுபோம் நிலையை, அஃதுணராது விளையாடல் போலவே, மக்களும் உலகப் பொருள்களாம் நிறைநீரில் மகிழ்ந்து விளையாடுகின்றார்கள்; நிறைநீர் ஆமைக்கு வருத்தத்தைக் கொடுத்து முடிவில் அழிவைக் கொடுப்பதுபோல், உலகப் பொருள்களும் துன்பத்தையே கொடுத்து முடிவில் வீணே கெட்டொழியச் செய்கின்றன. என்பது குறிக்கப்பட்டவாறும்.

துன்பமே நிறைந்த உலக வாழ்க்கையில், இன்பமே கருதி உழலும் மக்களியற்கையைக் காட்டச், சமண் சமயத்தவரால் பெரிதும் பயிலப்பெற்றிருந்ததுபோலும் இவ்வுவமை. சமண்சமயம் புகுந்திருந்த நாவுக்கரசப் பெருந்தகையாரும் இதே உவமையைத் தந் தேவாரப் பாடலுள் அமைத்திருப்பது பெரிதும் நோக்கத்தக்கது. அது வருமாறு.

"வளைத்துநின்(று) ஐவர்கள்வர் வந்தெனை நடுக்கம்செய்யத்
தளைத்துவைத் துலையைஏற்றித் தழல்எரி மடுத்தநீரில்
திளைத்துநின்(று) ஆடுகின்ற ஆமைபோல் தெளிவிலாதேன்
இளைத்துநின்(று) ஆடுகின்றேன் என்செய்வான் தோன்றி
னேனே."

மணம் கடியத்தக்கது

உலக இன்பம் நிலையற்றதென்று வற்புறுத்தும் நாலடி மணத்தைக் கடிந்தும் கூறுகின்றது.

"மாண்ட குணத்தொடு மக்கட்பே றில்லெனினும்
பூண்டான் கழித்தற் கருமையால்—பூண்ட
மிடியென்னும் காரணத்தின் மேன்முறைக் கண்ணே
கடியென்றார் கற்றறிந் தார்."

மணத்தைக் கடியவேண்டும் என்று கூறுகிற நாலடி, அதற்கான காரணத்தை ஈண்டுச் சிறக்கக் காட்டுமாற்றைக் காண்க. மணம் செய்துகொண்ட ஒருவன், தனக்கு வாய்த்த மனைவி தன் மனத்திற்கேற்ப நற்குண நற்செய்கை பெறாவிடத்து அவளால் தான் நற்பயன் அடைதற்கு மாறாகத் துன்பத்தையே யன்றோ அடைகின்றான். அவள் தன் மனத்திற்கேற்ற மனைவியா யமையினும், தான் கொண்ட மண வாழ்க்கையால் நற்புதல்வனைப் பெறாவிடத்தும், அவ் வாழ்க்கை பயனற்ற வாழ்க்கையாகவே ஆகிறதன்றோ? மனைவி தன் மனத்திற்கேற்ப நற்குணமுடையோளாய் அமையாவிட்டாலும், தான் பூண்ட மணவாழ்க்கை யால் நற்புதல்வற்பேறு ஏற்படாவிட்டாலும், இல் வாழ்க்கையால் சிறந்த பயனின்மை குறித்துத் துறவு பூணலாமென ஒருவன் நினைப்பின், அக்காலை அது இயலாததாகின்றதன்றே? நன்மனைவியும் நற்புதல்வற் பேறும் வாய்ப்பினும், வறுமை வந்துறுமாயின், அவ்வில் வாழ்க்கை நற்பயன் பெறாது துன்பத்தையே கொடுப்ப

தாகவும் ஆகின்றதன்றே? இங்ஙனமெல்லாம் ஆதலின், இளமையிலேயே துறவுபூண்பாயாக என்றுணர்த்து கின்றது இந்நாலடி. மணத்திற்குக் கடியென்னும் பெயரமைந்தது தானும், அது அறிவுடையோரால் நீக்கத்தக்கதாதலின், அதுகுறித்தேயாம் என்று குறிப் பிடுவதையும் காண்க. (கடியென்பதற்கு மணம், நீக்கு என இரு பொருளுண்டு.)

மணத்தைக் கடியவேண்டுமென்று மற்ருெரு நாலடி கூறுவதும் ஈண்டுணரத் தக்கது. இளமை இன்பத்தால் இழுக்கப்பட்டு ஒருவன் மணஞ்செய்து கொள்வானுயினும், அவன் மனைவி ஒருகால் இறக்க நேரின், மறுமணமேனும் செய்துகொள்ளாது துறக்க என்று கூறுகிறது அந்நாலடி.

"கடியெனக் கேட்டும் கடியான் வெடிபட
ஆர்ப்பது கேட்டும் அதுதெளியான்—பேர்த்துமோர்
இற்கொண் டினிதிரூஉம் ஏமுறுதல் என்பவே
கற்கொண் டெறியும் தவறு."

'இளமைக் காலத்தேயே மணத்தைக் கடிந்து துறவு பூண்பாய்' என அறிவோர் கூறிய அறிவுரையைக் கேளாருய் மணம்செய்து கொண்டாருயினும், தான் மணந்து கொண்டவள் இறக்க, அக்காலை கொட்டப் பெறும் பறையின் ஒலியானது உலகப்பொருளும், உலக இன்பமும் நிலையற்றன நிலையற்றன என்று காட்டித் தன் காது செவிடுபடும்படி வந்து ஒலிக்கத் தான் துன்பத்துள் ஆழ்கின்ருனன்றே? அதுகொண்டு மனம் தெளியாது மேலும் ஒரு மனைவியை மணந்து "யான் இன்புறுவேன்" என்று ஒருவன் நினைத்தாரு யின், அவன் கல்லைத் தன்மேல் தானே எறிந்து

கொள்ளும் பித்தனே போல்வான், என்று இந்நாலடி உணர்த்தியவாற்றைக் காண்க.

இனி மணங்கொண்டு இன்புற நினைத்தல் அறிவுடைமையன்று என்பதை உணர்த்தச் சாக்காட்டையும் பறையொலியையும் எடுத்துக்காட்டிக் கூறிச் செல்வது பெரிதும் மனங்கொளற் குரியது.

" கணங்கொண்டு சுற்றத்தார் கல்லென் றலறப்
பிணங்கொண்டு காட்டுய்ப்பார்க் கண்டும் மணங்கொண்டீண்(டு)
உண்டுண் டுண் டென்னும் உணர்விஞற் சாற்றுமே
டொண்டொண்டொ டென்னும் பறை."

'மணம்செய்துகொண்டு ஈண்டு இன்பம் நுகரல் உண்டு உண்டு உண்டு என நினைக்கும் மக்களை நோக்கி, சாப்பறை, டொண்டொண்டொடு என முழங்கி மண வாழ்க்கை துன்பத்துக்கே காரணமாதலை அறிவுறுத்து கின்றது, என்பதாம்.

மணவாழ்க்கை இன்பம் நிலையற்றதாவதை மற்ருெரு நாலடி உணர்த்துமாறு:—

"மன்றங் கறங்க மணப்பறை யாயின
அன்றவற் காங்கே பிணப்பறையாய்ப்—பின்றை
ஒலித்தலும் உண்டாமென்(று) உய்ந்துபோ மாறே
வலிக்குமாம் மாண்டார் மனம்."

'மணமகனே பிணமகனுய் மணப்பறையே பிணப் பறையாய்' ஆதலும் உண்டென்ற உண்மையை எடுத்துக்காட்டி, இத்தகைய நிலையற்ற இன்பத்தில் அகப்பட்டுழலாது, இம்மணவாழ்க்கை இன்ப மயக்கத்தினின்றும் பிழைத்தோடலே செய்யத்தக்கதாம். என்றுணர்த்தியதாம் "உய்ந்துபோமாறே" என்று கூறப்பட்டவாறு காண்க. இங்ஙனம் உய்ந்து

துறவறம் பூண்போரே மக்களுள் மாட்சிமையுற்றுப் பொலிவோராவர் என்பதும் குறிக்கப்பட்டது.

துறவே உயிர்க்குறுதி பயப்பது

மணத்தைச் செய்துகொண்டு காமநெறி படர்தலால் ஒருவன் உடற்பயனாய்க் காணும் பயன் மூப்பேயன்றி வேறில்லை என்று கூறித், துறவே உயிர்க்குறுதி பயக்கும் நெறியாகும் என்று குறிப்பிக்கின்றது நாலடி.

" சொல்தளர்ந்து கோலூன்றிச் சோர்ந்த நடையினராய்ப்
பல்கழன்று பண்டம் பழிகாறும் — இல்செறிந்து
காம நெறிபடரும் கண்ணினார்க்(கு) இல்லையே
ஏம நெறி படரு மாறு.''

கிழப்பருவ இயல்பை எடுத்துக்காட்டி, அத்தகைய கிழப்பருவம் வரும்வரை காமத்தின் கண்ணேயே அழுந்தப் பெற்று, வேறு சிறந்த நோக்கம் ஏதும் கொள்ளாது கழிவோர், தம் வாழ்க்கைப் பயனாகக் கண்டது அக்கிழப்பருவமேயன்றி வேறெதுவுமில்லை எனக் குறித்த வாறன்றோ? துறவே (ஏம) உயிர்க்கரணாகும் நெறியென்று உடன் குறிக்கப்பட்டது.

துறவை மேற்கொள்ளாது காமநெறி படர்வோர் வாழ்க்கைப் பயனறியாப் பேதையரே என்று அறிவுறுத்தும் மற்றொரு நாலடி,

" நட்புநார் அற்றன நல்லாரும் அஃகினார்
அற்புத் தளையும் அவிழ்ந்தன — உட்காணாய்
வாழ்தலின் ஊதியம் என்னுண்டாம் வந்ததே
ஆழ்கலத் தன்ன கலி.''

என்று கூறுகிறது. ஈண்டும் கிழப்பருவ இயல்பை எடுத்துக் காட்டி, இத்தகைய முடிவுகாலம்வரை உலகில் காமமே நுகர்ந்து வாழ்ந்ததால் கண்ட பயன் என்ன என்று கேட்குமாற்றைக் காண்க.

ஈண்டு எடுத்துக்காட்டும் கிழப்பருவ இயல்பு பெரிதும் உணரத்தக்கது. கிழப்பருவம் முதிர்ந்த பொழுது, அதுவரை உலக மக்கள் பலருடனும் கொண்டிருந்த நட்பெல்லாம் பசையற்றுப் போகின்றது. அதுவரை நெருங்கி இன்பத்துடன் உரையாடிய பெண்டிரும் அருகே வரக் கூசுகின்றனர். மனைவிமக்கள் மாட்டுக் கொண்டிருந்த அன்புப் பிணிப்பும் அறுந்தொழிகின்றது. சாவை நெருங்கிக்கொண்டிருக்கின்றான். அங்ஙனம் கணந்தோறும் சாவை நெருங்கிக் கொண்டிருக்கும் அவனுக்குக் கடலில் மூழ்கிக்கொண்டிருக்கும் மரக்கலம் உவமையாயிற்று. மரக்கலம் மூழ்குங்கால் ஆண்டுள்ள மக்கள் நான்கு புறமும் ஓடியாடி அழுதரற்றுகின்றனரன்றே? அங்ஙனமே செத்தார் வீட்டும் பலரும் ஓடியாடி அழுதரற்றி ஒலி பெருக்குதல் இயற்கையன்றே?

துறவோரே நிகரற்ற மேலோர்

உடலின் உண்மைத் தன்மையை உணர்தலும், உலகவாழ்க்கை துன்பமே மிகுந்திருப்பதை அறிதலும், அவ்வுலக இன்பதுன்பச் சுழலுள் அகப்பட்டுத் தடுமாறாமல் அத்துன்பத்தை நீக்க வழிகாணுதலும், துறவு பூண்டு முயலுதலும் உலக இன்ப துன்பத்துள் பட்டுழலும் மக்களினும் மேம்பட்டோர் செயலன்றே. ஆதலின், அவரை ஒப்பற்ற மேலோராகக் குறித்துச் செல்கிறது நாலடி.

"படுமழை மொக்குளுள் பல்காலும் தோன்றிக்
கெடுமிதோர் யாக்கையென் றெண்ணித்—தடுமாற்றம்
தீர்ப்பேம்யாம் என்றுணரும் திண்ணறி வாளரை
நேர்ப்பாரார் நீணிலத்தின் மேல்.''

உடலின் நிலையற்ற தன்மை ஈண்டு உணர்த்தப் பட்டவாறுகாண்க. மழை பெய்யுங்கால், வீட்டு முற் றத்திடத்தே சிறியவும் பெரியவுமாய்த் தோன்றும் அழகிய நீர்க்குமிழிகள் சின்னேரம் நிலைபெற்றிருந்து, பின் கால நியதியின்றி முன்னே பின்னே மறைந்தொழி கின்றன வன்றே? இங்ஙனமே உலகில் சிறியோரும் பெரியோருமாய்ப் பலர் காணப்பட்டுப் பெருமைபெற விளங்கிக் காலநியதியின்றி இறந்தொழிகின்றனரன்றே? தடுமாற்றமாவது உலக இன்ப துன்பங்களை விட வலி யற்றுத் தடுமாறுதல். இன்பதுன்பங்கள் மாறிவரும் இயல்பறிந்து நிலையான இன்பத்தை யடையத்தக்க வழியைக் காண்டலும், அதன்கண் முயலுதலும், மேலான அறிவோர்க்கன்றி இயலாமையின், துறவற நெறி நிற்போரைத் திண்ணறிவாளர் என்று கூறிற்று.

இங்ஙனம் துறவறநெறி நிற்போரை மக்களுள் தலையாயோராக உணர்த்துகின்றது மற்றொரு நாலடி.

"இல்லம் இளமை எழில்வனப்பு மீக்கூற்றம்
செல்வம் வலியென் றிவையெல்லாம் — மெல்ல
நிலையாமை கண்டு நெடியார் துறப்பர்
தலையாயார் தாமுய்யக் கொண்டு."

என்று கூறிச் செல்வது காண்க. உலகப்பொருள் நிலை யற்ற தன்மையை இந்நாலடி எடுத்துக் காட்டுகின்றது. இல்வாழ்க்கையும், இளமைப் பருவமும், இளமை எழுச்சியும், அழகும், மதிப்பும், செல்வமும், உடல் வலியும் என்றித் தொடக்கத்தன வெல்லாம் நிலை யுடையனபோற் காணப்படினும் நிலைத்து நில்லா என் கிறது. மனைவாழ்க்கையை விரும்பாது உண்மை யுணர்ச்சி பெற்றுத் துறத்தலே தக்கதாம் என்கிறது.

இவ்வுண்மை யுணர்ந்து துறந்தோரே உலகில் தலையா யோராவர் என்று குறிப்பிடுகிறது.

**துறவோரே தங்கருமம் செய்வார்**

தமக்காம் நன்மை எதுவென்றுணர்ந்து அதை யடையும் நன்னெறிக்கண் முயலுதலின் துறந்தோரே தலையா யோராயினர் என்று கூறுகின்றது நாலடி.

> "நிலையாமை நோய்மூப்புச் சாக்காடென் றெண்ணித்
> **தலையாயார் தங்கருமம் செய்வார்**—தொலைவில்லாச்
> சத்தமும் சோதிடமும் என்றாங் கிவைபிதற்றும்
> பித்தரில் பேதையார் இல்.''

ஈண்டு உலகப்பொருள் நிலையற்றனவாதலையும், உடல் எய்த நிற்கும் நோய் மூப்புச் சாக்காட்டையும் எடுத்துக்காட்டியவாறு காண்க. "உலகப்பொருள் களும் உடலும் இங்ஙனமாதலை யுணர்ந்தவர், தம் உடல் இவ்வுலகத்தில் நல்வலியுடன் திகழும் சிறு பொழுதையும் வீணாக்காது, தம்முயிர்க்கு நிலையான இன்பத்தை அவாவி, அதையடைதற்காம் நெறி துறவு நெறியென் றுணர்ந்து, அதை மேற்கொண்டு, தமக் காக்கம் தேடிக்கொள்வோராய்த், தங்கருமம் செய்வோ ராய்த் தலைமைப்பாடடைகின்றனர். மற்றையோரோ வெனின், உலகவாழ்க்கையே நிலையுற்றது போன்று கருதுவாராய், உலக இன்பமொன்றையே அவாவுவோ ராய், உலக இன்பமே குறித்து இசைநூல்களையும், சோதிடநூல்களையும் கற்றறிந்தும், மற்றும் உலகியல் மட்டும் கருதிய துறைகளிலேயே தம் அறிவாற்றலை ஈடு படுத்திப்பொழுதுபோக்கியும், இவையெல்லாம் தமக்கு நிலையான இன்பத்தை அளிக்கவல்லன அல்ல என்ப தையும், இவை மேலும் தம்மைத் துன்பத்துள்ளேயே ஆழ்த்தும் என்பதையும் உணராது, தமக்காம் நன்மை

மறந்த பேதையராய்ப் பித்தராய் ஒழுகுகின்றனர்" என்றவாறும்.

" தவஞ்செய்வார் தங்கருமம் செய்வார்மற் றல்லார்
அவஞ்செய்வார் ஆசையுட் பட்டு."

என்ற வள்ளுவர் வாய்மொழியையும் ஈண்டுநோக்குக.

துறவை விரைந்து கொள்க

இங்ஙனம் துறவறத்தையே மேன்மையான அறமாகக் கூறி நாலடி அத் துறவற நெறியின் மாண்பை யுணர்ந்தவர், அதை இயன்ற அளவு விரைந்து கைக் கொள்க என்று மிக வலியுறுத்திக் கூறுகின்றது.

" நரைவரு மென்றெண்ணி நல்லறி வாளர்
குழவி யிடத்தே துறந்தார்."

என்று கூறுமாற்றைக் காண்க. இளமைக் காலமன்றி முதுமைக்காலம் உடற்பயனடைதற்கு ஏற்றகால மன்மையின், "நரைவருமென்றெண்ணி" என்று கூறி உணர்த்தப்பட்டது. துறத்தற்குற்ற பருவமாகக் குழந்தைப் பருவத்தைக் கூறியது காண்க. இயன்ற அளவு விரைவிற் கைக்கொள்ள வேண்டும் என்று கருதி யன்றே அங்ஙனம் கூறியது. முதுமை வருமென்று உணர்ந்து, வாழ்க்கைப்பயன் அடையவேண்டி, இளம் பருவத்தேயே துறவறம் மேற்கோடல், பேரறிவாளர்க் கன்றி இயலாமையின், "நல்லறிவாளர் துறந்தார்" என்று கூறப்பட்ட தென்க.

துறவாவ தியாது

இனித் துறவின் இயல்பைக் கூறப்புகுந்த நாலடி,

" மெய்வாய்கண் மூக்குச் செவியெனப் பேர்பெற்ற
ஐவாய வேட்கை அவாவினைக்—கைவாய்க்
கலங்காமல் காத்துய்க்கும் ஆற்றல் உடையான்
விலங்காது வீடு பெறும்."

"அவாவினைக் காத்து உயக்கும் ஆற்றலுடையான் வீடு பெறுவான்" என்று கூறப்படுகிறது. அவாவின் இயற்கை முன்னதாகக் கூறப்படுகிறது. அவாவாவது ஆசை. அவ்வாசை தோன்றி நிலைபெறும் இயற்கை சொல்லப்படுகிறது. ஆசை ஐந்திடங் காரணமாகத் தோன்றி நிலைபெறுகிறதென்று சொல்லப்படுகின்றது. மெய் வாய் கண் மூக்குச் செவி என்பன அவ்வைந் திடங்கள். மெத்தென்ற படுக்கை முதலியவற்றை விரும்பியும், இன்சுவை மிகுக்கும் உண்டி முதலிய வற்றை விழைந்தும், மனங்களிக்கப் பல்வகைக் காட்சி களைக் காண அவாவியும், நறுமணம் கமழும் பொருள் களை நுகர ஆசைப்பட்டும், இன்னிசை கேட்டு மகிழ உளங்கொண்டும் உலக ஆசையைப் பெருக்கல் மக்கள் இயற்கையன்றே! இங்ஙனம் மெய் வாய் கண் மூக்குச் செவி யெனு மைந்திடங்களிலும் தோன்றும் ஆசை யை மனம்போனவாறு விடாமல் தம்மறிவாற் றடுத்து நிறுத்தி நன்னெறியிற் செலுத்தவேண்டும் என்று சொல்லப்படுகிறது. கை என்பது மனம் விரும்பிய வாறு செல்லும் நெறியல்லா இழிநெறியைப் புலப் படுத்தி நின்றது. அங்ஙனம் மனம் விரும்பியவாறு இழி நெறிக்கட் செல்லின், நிலைத்த இன்பமன்றி மனக்கலக் கமே எய்தும் பயனாதலின், "கலங்காமல்" என்று அடுத்துக் கூறப்பட்டது. அங்ஙனம் செல்லும் மனத் தைத் தம் அறிவு வலி கொண்டு தடுத்து நன்னெறிப் படுத்த வேண்டியிருத்தலின், "காத்து" என்று பிற் கூறப்பட்டது. இனி "உய்த்தலாவது" ஐம்பொறி வழியாக வெளிப்புறத்தேயே அலையும் மனத்தைத் திருப்பி அகமுகமாக மெய்யுணர்வு காணற்கண் ஈடு படுத்தலாம். மனம்போனவாறு விடாமற்றடுத்து

நன்னெறிப்படுத்தலும், புறத்தேயே விடாது அகமுகப் படுத்தலும் அறிவாற்றலின்றி முடியாவாதலின், "ஆற்றலுடையான்" என்று அதன்பின் கூறப்பட்டதென்க. இத்தகையோனே மெய்யுணர்ச்சிகூடப் பெற்று வீடுபெறுவான் என்று முடித்துக் கூறப் பட்டது. இங்ஙனம் தம் பேரறிவால் ஐம்பொறிகளையும் நன்னெறிப்படுத்தி ஆள்வோனே வீடு பெறுவான் என்பதை,

> "உரனென்னும் தோட்டியான் ஓரைந்தும் காப்பான்
> வரனென்னும் வைப்புக்கோர் வித்து."

என்று வள்ளுவர் தெளித்துப் போந்தமையும் காண்க. ஐம்பொறிகளையும் ஐந்து யானையாகவும், அறிவை அவ்யானையை யடக்கத்தக்க தோட்டி (அங்குசம்) யாகவும் கூறியுணர்த்தி ஐம்பொறியின் வலியினையும், அறிவின் வலியினையும் விளங்குமாறு செய்த வள்ளுவரின் வாய்மை பெரிதும் அறிந்து மனங்கொளற் குரியதன்றே?

### தவநெறி

இனி, ஐம்பொறிகளையும் அடக்கியாளும் நெறியே தவம் என்று சொல்லப்படும். பரிமேலழகரும் திருக்குறளில் தவம் என்னும் அதிகாரத்தில் தவத்தை விளக்கப் புகுந்தவர், "அஃதாவது மனம் பொறிவழி போகாது நிற்றற் பொருட்டு விரதங்களால் உண்டி சுருக்கலும், கோடைக்கண் வெயில்நிலை நிற்றலும், மாரியினும் பனியினும் நீர் நிலை நிற்றலும் முதலிய செயல்களை மேற்கொண்டு, அவற்றால் தம்முயிர்க்கு வருந் துன்பங்களைப் பொறுத்துப் பிற உயிர்களை யோம்புதல்" என்று கூறிச் சென்றனர். உண்டி சுருக்கியும்,

வெயிலும் மழையும் பொறுத்தும், காடு மலை முதலிய வற்றில் உறைந்தும் ஐம்பொறியையும் தம் வயப்படுத்தி அகமுகத்தே செலுத்துவோர் தவத்துறை நிற்போ ராவர் என்க. இத்தவ நெறியின் முடிவு யோக நெறி யாகும். மூச்சைத் தம் வயப்படுத்தி, ஐம்பொறியும் செயலழிய மனத்தை ஒருநெறிப்படுத்தி, அம்மனத்தை மெய்ப்பொருளோடு பற்றவைத்து, அப்பொருளோடு தான் இரண்டற நிற்கும் நெறியே யோகநெறியாம். இவ்யோக நெறியை வளிநிலை, தொகை நிலை, பொறை நிலை, நினைவு, சமாதி என ஐவகையாகச் சொல்வர் ஆன் ்றோர். இவ்யோகத்தை முடிவாகக்கொண்ட தவத்தின் இயல்பைக் கூறும் நாலடியைக் காண்க:

" விளக்குப் புகஇருள் மாய்ந்தாங்(கு) ஒருவன்
தவத்தின்முன் நில்லாதாம் பாவம்—விளக்குநெய்
தேய்விடத்துச் சென்றிருள் பாய்ந்தாங்கு நல்வினை
தீர்விடத்து நிற்குமாம் தீது."

தவத்தை விளக்காகவும், தவமற்ற தன்மையைப் பாவமே நிறைந்த இருளாகவும் கூறியவாறு காண்க. தவம், பொறிகளைப் புலன்மேல் செல்லாவாறு தடுத்த லின், ஒருவன் செய்யும் பாவமும் இல்லையென்க. தவ மில்லாவிடத்து மனம் விரும்பியவாறு செல்லலின் பாவம் பெருகுமென்பதும் தெளிவென்க.

---

## கூ. இல்லறங் குறித்த நல்லுரை சில

சமண் சமயத்தைச் சார்ந்த நம் பண்டைத் தமிழ்ப் பெரும் புலவர் துறவறத்தையே பெருநெறியாகக் கொண்டவராயினும், இல்லற நெறிச் சார்பாகப் பெண்டி ரிலக்கணத்தைச் சிறக்க உணர்த்திச் செல்கின்றனர்.

பெண்டிர்க்குச் சிறந்த கற்புடைமையைக் கூறும் முறை பெரிதும் உணர்ந்து போற்றற் குரியது. கற்புடைமையைக் குறிக்குமாற்றைக் கீழே காண்க:

> " பெறுநசையால் பின்னிற்பா ரின்மையே பேணும்
> நறுநுதலாள் நன்மைத் துணை.''

கணவனைத் தவிர்த்த மற்ருேரை மனத்தாலும் தீண்டலாகாது என்று கூறிக் கற்புடைமையைக் குறித்தாரல்லர். தன்னைப் பிறர் நோக்காதவாறு நடந்துகோடலே கற்புடைமையாம் என்று குறித்தார். இதனுல் கற்புடைமையாவது இத்தகையது என்பது தெள்ளிதின் உணரப்படும். கற்புடைமையாவது 'தன் மனம் நெறி தவருது பாதுகாத்தல்' என்பு தன்றிப், 'பிறர் மனம் தன்னை விரும்பாவாறு அமைதியாய் நடந்துகோடலே' யாம் என்பது ஊன்றி உணரத் தக்கது. இயற்கையே மனம் நெறி தவருதிருக்கவேண்டியிருக்கத் தான் முயன்று தன்மனத்தை நெறிப்படுத்தல் சிறந்த கற்புடைமையன்றன்றே? ஒருத்தி உண்மையான கற்புடையாளாயின், அவளது அமைந்த தன்மை கணவனைத் தவிர்த்த மற்ற யாவர் மனமும் அவளை நாடாவாறு செய்தலின், அவ்வமைந்த தன்மையுடன் ஒழுகலையே கற்புடைமைக்காம் இலக்கணமாகக் குறித்தனர். இயற்கையே கற்புடைமை வாய்ந்தவள் மாட்டு,

நாண் மடம் அச்சம் பயிர்ப்பு என்னும் நான்கு குண மும் நிறைவெய்தப் பெற்றிருக்கு மாதலின், அவள் மாட்டுப் பிறர் மனம் செல்லப்பெருது தடைப்படுதல் இயற்கையேயாம் என்க. இந்நான்கும் குறைந்திருத் தலும், இவற்றை மிகுதியாய்க் காட்டிக்கோடலும் கற்புடைமையன்ருதலின், இவை நிறைவெய்தி, ஆடம் பரமின்றி அமைந்தொழுகலே கற்புடைமையாம்என்க.

இக்காலத்தே பலர் காணப், பகட்டுடை அணிதலே நாகரிகமாகக் கருதப்படுகிறது. "பின்நிற்பாரின்மையே பேணும்" குணமுடையராயின் ஆடம்பரமானபகட் டுடை யணிவரோ? பின் நிற்பாரைப் பேணுதலும் நாகரிகம் போலும். ஆடம்பரமான பகட்டுடை அணிந்துபெருமை தேடிக்கொள்ள நினைத்தால்தன்சிறு மையையே உணர்த்துமென்க. தூய்மையான நல்லுடை களை அணிந்து அமைந்தொழுகலே நிறையறிவு பெற்ற மைக் கடையாளமாம் என்க. கணவன் முன்னும் பிறர் முன்னும் ஒப்ப ஆடம்பர ஆடையணிந்து ஒழுகுவோர் "பின் நிற்பாரைப் பேணுவோராகவே" கருதப்படுதல் தெளிவாமென்க. இனி, யாவரோடும் கலந்து பழகலும் நாகரிகமாகக் கருதப்படுகிறது. அன்னேர் ஏழை எளி யார்மாட்டு அங்ஙனம் ஒத்த உரிமையோடு கலந்து பழகல் காணப்படவில்லை. இது எத்தகைய மனக் கலப்போ அறியோம். உலகில் மக்கள் பல திறத்தரா தலின், அவ்வவர் மன நிலை யறிந்து பழகலே அறி வுடைமையாம். ஆதலின், பிறர் மன நிலை யறிந்து அதற் கேற்பக் கலந்து பழகியும், தூய நல்லுடை யணிந்து அமைந்தும், நாண் மடம் அச்சம் பயிர்ப்பு என்னும் நாற்குணங்களையும்கொண்டும் ஒழுகலே நற்பெண்டிர்க் கியல்பா மென்றுணர்க.

பின்னிற்பா ரின்மையே பேணும் இயற்கையே கற்புடைமையா மென்பது நந்தமிழ்நாட்டகத்தே வழி வழி வந்த சிறந்ததொரு கொள்கையாம். இவ்வியற்கையை ஐம்பெருங் காப்பியங்களுள் ஒன்ருனதும், கோவலன் மகள் துறவறம் பூண்டொழுகிய வரலாற்றைக் கூறுவதுமான மணிமேகலை என்னும் தமிழ் வளம் பழுத்த விழுமிய நூல் சிறக்கக் காட்டுகின்றது.

காவிரிப்பூம்பட்டினத்து, ஒருகால் ககந்தன் என்போன் அரசனுக இருந்து ஆண்டுகொண்டிருந்த பொழுது, அவன் இளைய மகன் காவிரியில் நீராடி விட்டுத் தனியேவந்த மருதி யென்னும் பார்ப்பன மங்கையைக் கண்டு காமுற்று அவளை யழைத்தான். அவள் மனங்கலங்கி, "கற்புடைப் பெண்டிராயின், அவர் பிறர் நெஞ்சு புகுதாராயிற்றே; யானே இவ னுள்ளத்தில் புகுந்தேனே. ஆதலின் என் கணவருடன் முத்தீப் பேணும் தகுதி எனக்கினியில்லை'' என்று நினைந்து பெருந்துயர் மனத்தைக் கலக்கத், தான் வீடு செல்லாது, அவ் வூரில் தீயொழுக்கமுடையாரை அறைந்துண்ணும் பூதம் உறையும் கோயிலின் கண்ணே சென்று மதி மயங்கி நின்று, 'கொண்டானுக்கு யாதொரு குற்றமும் செய்திலேனே; அங்ஙனமாகவும் பிறனுடைய நெஞ்சில் எளிமையாகப் புகுந்தேனே; யான் செய் தவறு இன்னதென்று புலப்படவில்லையே. பிறர் நெஞ்சு புகுந்த என்னை அறைந்துண்ணு திருத்தலின், நீ கோயிலி லிருப்பதும் பொய்யோ?' என்றழுது அரற்றினுள். இதைக் கூறும் மணிமேகலை யடிகளைக் கீழே காண்க:

"காவிரி வாயிலின் ககந்தன் சிறுவன்
நீவா என்ன நேரிழை கலங்கி
மண் திணி ஞாலத்து மழைவளம் தரூஉம்

பெண்டி ராயின் பிறர்நெஞ்சு புகார்
முத்தீப் பேணும் முறைஎனக்(கு) இல்லென
மாதுயர் எவ்வமொடு மனையகம் புகாஅள்
பூத சதுக்கம் புக்கனள் மயங்கிக்
கொண்டோற் பிழைத்த குற்றம் தான்இலேன்
கண்டோன் நெஞ்சில் கரப்பெளி தாயினேன்
வான்தரு கற்பின் மனையறம் பட்டேன்
யான்செய் குற்றம் யானறி கில்லேன்
பொய்வினை கொல்லோ பூதசதுக் கத்துத்
தெய்வம் நீஎனச் சேயிழை அரற்றலும்.''

இதைச் செவியுற்ற பூதம், "பெண்ணே! நீ பொய்க் கதைகளையும் நகை விளைக்கும் மொழிகளையும் பிறரிடம் கேட்டும் இசை நாடகக் களியாட்டத்துடன் கூடிய ஆடம்பர விழாக்களைக் கண்டு களித்தும் ஒழுகினை ஆதலின், நீ பிறர் நெஞ்சு புகுதற்குக் காரணமாயினை. உன்னை விரும்பிய அச்சிறுவனைக் ககந்தனே இன்னும் ஏழு நாளைக்குள் இச்செய்தி யுணர்ந்தவனாய் வெட்டி வீழ்த்துவன்'' என்று கூறித் தேற்றியது.

ஈண்டு நாண் மடம் அச்சம் பயிர்ப் பென்னும் நாற்குணமும் கொண்டு அமைந்தொழுகாமல் ஆடம் பரமாய் ஒழுகலே பிறர் நெஞ்சு புகுதற்குக் காரண மாயிற்று என்று குறிக்கப்பட்டதும் காண்க.

'பின்னிற்பா ரின்மையே பேணி யொழுகும்' இயல்புக் கடுத்த படியாக, நாற்குணங்களுள்ளும் முதற் குணமான நாண் உடைமையின் சிறப்புச் சிறக்கச் சொல்லப்படுகிறது.

நாணுடைமையே நற்பெண்டிர் மாட்டமையும் சிறந்த இயல்பாம். பெண்டிர்க்கே சிறப்பான இந்நா ணுடைமை இல்லாவிடின், அவள் பெண்ணெனப்

படாது ஆண் தன்மையே மிக்கவளாய்க் காணப்படு வாள். இந்நாணுடைமையே பெண்டிரை அமைந் தொழுகச் செய்கின்றது. ஒருவனும் ஒருத்தியுமாய் வாழ்கின்ற காதல் வாழ்க்கையில் அக்காதல் சிறப்புற்று மேம்படுவது அவள்மாட்டு நாணம் என்னும் நல்லியல்பு நிறைந்தவழியேயாம் என்க. நாணமற்றவழி, அவள் பெண்ணியல்பு கெட்டு ஆண் தன்மையே மிகுந்து நிற்ற லின், காதல் சிறவாதன்றே? இங்ஙனமாகப், பொதுப் பெண்டிர்மாட்டு நாணமிருத்தற்கு இயல்புண்டோ? இல்லையன்றே? அவர் நடிப்புப் பொய்ந் நடிப்பேயன்றி வேறன்று. ஆதலின், நாணமற்ற, பெண்ணியல்பு கெட்டுநிற்கின்ற, பொதுப்பெண்டிரை விரும்பி யுறைதல் உண்மை இன்பமறியாக் கயவர் செயலாம். பெண்டிர்க்கு நாணமே பிரியாதுறையும் உயிர்க் குண மாதலை எடுத்துக் காட்டித் தலைவி யொருத்தியின் கூற்றாக வரும் நாலடியைக் கீழே காண்க:

"எஞ்ஞான்றும் எங்கணவர் எந்தோண்மேல் சேர்ந்தெழினும்
அஞ்ஞான்று கண்டேம்போல் நாணுதுமால்—எஞ்ஞான்றும்
என்னை கெழீஇயினர் கொல்லோ பொருள்நசையால்
பன்மார்பு சேர்ந்தொழுகு வார்."

"பலகாலும் எங்கணவர், எந்தோளைச் சேர்ந்து மணந்தாலும், யான் மணம் செய்துகொண்ட முதல் நாள் அவரைக் கண்டு நாணி நின்றது போன்றே நாணுகின்றேன். இங்ஙனமாகச், செலவமே பெறுதல் விரும்பிப் பலரோடும் மருவியொழுகும் பொதுமகளிர் எப்படித்தான் நாணத்தை விட்டு அவ்வனைவரோடும் மருவி யொழுகுகின்றனரோ ? இஃதெனக்கு விந்தையா யிருக்கின்றதே" என்று தன்கண் நாணுடைமையின் பெருமை வெளிப்பட மொழிந்தனள் தலைவி.

இனி, நன்மனையாட்குரிய பல சிறந்த இயல்பைத் தெளிய எடுத்துக் காட்டுகின்றது ஒரு நாலடி.

"கட்கினியாள் காதலன் காதல் வகைபுனைவாள்
உட்குடையாள் ஊர்நாண் இயல்பினாள்—உட்கி
இடன்அறிந்(து) ஊடி இனிதின் உணரும்
மடமொழி மாதராள் பெண்."

நன்மனைவிக்காம் ஒன்பது சிறந்த குணங்கள் ஈண்டுச் சிறக்கக் குறிப்பிடப்பட்டன. முதலாவது குணமாக அழகு சொல்லப்பட்டது. உலகில் இதுவே பலராலும் விரும்பப்படலின் முதற்கண் கூறப்பட்டது. அங்ஙனம் கூறப்பட்ட அவ்வழகு நற்பயன் பெறுவது நற்குணம் பெற்றவழியே ஆதலின், அது இரண்டாவதாகக் குறிக்கப்பட்டதாம் என்க. தன் கணவன் மனத்திற்கேற்ப நடப்பாளாய் எச்செயலையும் அவன் விருப்பமறிந்து செய்பவள் என்று கூறப்பட்டது. முன் கூறியவாறு பின் நிற்பாரின்மையே பேணுவாளாய்க் கணவன் மனத்துக் கேற்பத் தன்னைப் புனைந்துகொள்வாள் என்பதும் குறிக்கப்படும். ஆகவே, 'கணவன் மனம் மகிழ ஒழுகலே சிறந்த கடமையாகக் கொண்டு ஒழுகுபவ'ளாக அவளது இரண்டாவது குணம் குறிக்கப்பட்டது. "பின்நிற்பாரின்மையே பேணி" யொழுகுவாளாதலின், பிறர் தன் கற்புடைமையைக் கண்டு அஞ்சி மதிக்கும் மதிப்பினை யுடையளாவாளன்றே? ஆதலின் இம்மதிப்புடைமை உட்குடையாள் என்று கூறி மூன்றாவது குணமாகக் குறிக்கப்பட்டது. கற்புடைமையால் பிறர் அஞ்ச வாழுமவள், தன்னூரிலுள்ளார் பலரோடும் பொருள்களைக் கொடுத்தும் கொண்டும் ஒப்புரவு செய்து வாழும் நல் இயற்கையுடையவளாயிருத்தல் வேண்டும் என்பது குறிக்க ஒப்புரவுக் குணம்

நான்காவதாகக் குறிக்கப்பட்டது. இனிக், கணவன் மாட்டுக் காதல் சிறக்க ஒழுகு முறையனவான மூன்று குணங்கள் கூறப்பட்டன. அவற்றுள் முதலாவது முற்குறிப்பிட்ட நாணுடைமை என்பது. இந்நாணம் 'உட்கு' என்று கூறப்பட்டது. அடுத்த இரண்டு குணங்கள் ஊடலும், உணர்தலும். ஊடலாவது, அன்பின் மிகுதியால், காதலன் தன் மாட்டு அன்புக் குறைவாக நடந்துகொண்டதாகக் கூறிப் பிணங்கி நிற்றல். உணர்தலாவது, அங்ஙனம் பிணங்கி நின்ற வழிக் கணவன் பல்லாற்ருனும் தேற்றத் தேறுதல். இங்ஙனம் தேற்றினும் தேருதொழியின் அது காத லுக்கே பகையாமென்க. இனி ஊடாது நிற்றலும் அன்பின் மிகுதிக்கண் இயலுவதன்று. நிறைந்த அன்பு கொண்டார் இருவர் நடுவே, அவ்வன்பின் முதிர்ச்சி, காரணமாக, ஒருவர் மாட்டுக் குற்றமில்லாமலிருக்கவும், குற்றங்காண முற்படல் இயல்பாய் நிகழும்.

காதலன் காதலியை நோக்கி "உன்னை இப்பிறப் பிற் பிரியேன்" என்ருனுக, அதைக்கேட்ட காதலி "இப்பிறப்பிற் பிரியாயாயின் மறு பிறப்பிற் பிரிய நினைந்தனைபோலும்" என்று கொண்டு புலக்கின்ருள்.

> "இம்மைப் பிறப்பிற் பிரியலம் என்றேனுக்
> கண்ணிறை நீர்கொண் டனள்."

'உன்னைப் பிரிந்திருந்த காலத்து உன்னை நினைந் திருந்தேன்' என்று காதலன் கூறினுனுக, அதைக் கேட்ட காதலி, 'மறந்திருந்த நாளும் உண்டுபோலும்' என்று கூறிப் புலக்கின்ருள்.

> "உள்ளினேன் என்றேன்மற்(று)என்மறந்தீர் என்(று)என்னைப்
> புல்லாள் புலத்தக் கனள்."

இங்ஙனம் ஊடியும் உணர்ந்தும் கூடியும் வாழ்தலே நிறைந்த காதல் வாழ்க்கையாம் என்க.

i. "ஊடுதல் காமத்திற் கின்பம் அதற்கின்பம்
கூடி முயங்கப் பெறின்."

ii. "துனியும் புலவியும் இல்லாயிற் காமம்
கனியும் கருக்காயும் அற்று."

என்ற முப்பாலையும் நோக்குக.

நினைத்ததற்கொல்லாம் ஊடலும், மனங்கனிந்து தேற்றிய வழித் தேறி ஊடலொழியாது நிற்றலும் காதலுக்கே அழிவுசெய்யுமாதலின், " இடன் அறிந்து ஊடி, இனிதின் உணரும் மாதராள் " என்று குறிக்கப் பட்டாள்.

இனி, எட்டாவது குணமாக அவளது மொழியி னியல்பு சொல்லப்பட்டது. அவள் பேசும் மொழி செருக்குத்தோன்ற நில்லாது அமைந்த மென்மொழி யாதல் வேண்டும் என்று குறிக்கப்பட்டது. நாற்குணங் களுள் மடம் என்பது பல பொருள்களையும் அறிந் தும் செருக்கொடு தோன்றாது அமைந்தொழுகலன்றே? ஆதலின், மடநல்லார் பேசும்மொழி மடமொழி என்று சொல்லப்பட்டது. மனமொழி மெய் என்னும் மூன் றுள் மொழியின் இயல்பு ஈண்டுச் சொல்லப்பட்ட தென்க.

ஒன்பதாவது குணமாகக் கணவன்மாட்டுக் காதற் கேண்மையுடன் வாழும் நல்லியல்பு பெற்றவளாயிருத் தல் வேண்டும் என்பது குறிக்கப்பட்டது. ஊடலும் உணர்தலும் முன் உணர்த்தி, அவை தோன்றற்குக் காரணமான காதல் கடைசியாகக் குறிக்கப்பட்டது. ஊடியும் உணர்ந்தும் காதல் சிறந்து ஒழுகவேண்டலைக்

குறிக்கவே காதல் முப்பாற் படுத்துக் கூறப்பட்ட தென்க. ('மாதர்-காதல்'-தொல். சொல்-328.)

---

## ௧௦. மேன்மையும் கீழ்மையும்

### I

**மேன்மை**

பெரியோர்மாட் டமைந்த சிறந்த குணங்களை நாலடி பல விடங்களில் சிறந்தெடுத்துக் கூறுகின்றது. அவற்றைத் தொகுத்துக் காண்டல் வாழ்க்கையை நெறியறிந்து செலுத்த முயலும் மக்கட்குச் சிறந்த அறிவினைக் கொடுப்பதாகும். உலகில் தலைமக்கள் எனச் சொல்லத்தக்க பெரியோர்க்கு உரிய இலக்கண மாக ஒரு நாலடி கூறும் சிறந்த பண்பினைக் காண்க:

**தலைமக்கள்**

"இன்னார் இனையர் எமர்பிறர் என்னும்சொல்
என்னும் இலராம் இயல்பினால்—துன்னித்
தொலைமக்கள் துன்பந்தீர்ப் பாரேயார் மாட்டும்
தலைமக்கள் ஆகற்பா லார்."

'உலகில் எல்லாரையும் தமர், பிறர் என்ற வேறு பாடு கருதாது ஒரே நோக்காகப் பார்த்து அவர்க்கு நேர்ந்த துன்பங்களை நீக்குதற்கண் முனைந்திருப்போரே உலகில் தலைமக்களாவார்' என்று குறிக்கின்றது. ஆகவே, தந்நலந்துறந்து "அருள்பூண்டாரே" தலைமக் கள் என்பது பெறப்படும். பற்றுத் தீமைக்குக் காரண மாவதும், அருள் எல்லா அறங்களுக்கும் உறைவிடமா யிருப்பதும் தெளிவாம். எல்லோரையும் ஒரு தன்மை யராகக் கருதலோடு, எல்லார்க்கும் வேண்டுவன புரிந்து

தலைமை யெய்தலின், இவர் தலைமக்களாதல் இயல் பன்றே? பலர் ஆடவராய்ப் பிறந்தும் இத்தகையோரே ஆண்மை யுற்றோர் என்று குறிக்கின்றது நாலடி.

ஆண்மை

"அழல்மண்டு போழ்தின் அடைந்தவர்கட் கெல்லாம்
நிழல்மரம்போல் நேரொப்பத் தாங்கிப்—பழுமரம்போல்
பல்லார் பயன்துய்ப்பத் தான்வருந்தி வாழ்வதே
நல்லாண் மகற்குக் கடன்."

'தம்மால் பலரும் பயனடையுமாறு தாம் வருந்தி முயல்வதே ஆண்மை' என்று கூறப்படுவது காண்க. ஈண்டுப் பெரியோர்க்கு நிழல் மரமும் பழுமரமும் உவமை கூறப்படுகின்றன. பிறர் துன்பந் துடைத் தலின், வெயிற்றுன்பந் துடைக்கும் நிழன் மரம் ஒப் பாயிற்று. தாம் வருந்தி ஈட்டிய பொருளைப் பலர்க்கும் கொடுத்தலின் பலர்க்கும் பூத்துக் காய்த்துப் பழுத்துக் கொடுக்கும் பழுமரம் ஒப்பாயிற்று. ஒருவர் முயற்சி யால் பலர் வாழ்தலின் இவரே ஆண்மையுடையோராய் மதிக்கப்படுதல் இயற்கையேயன்றோ? தம்மால் உதவத் தக்கார் பலரான வழியும், இத்தகையோர் உதவலில் குன்றார் என்க.

"அடுக்கன் மலைநாட தற்சேர்ந் தவரை
எடுக்கலம் என்னார் பெரியோர்—அடுத்தடுத்து
வன்காய் பலபல காய்ப்பினும் இல்லையே
தன்காய் பொறுக்கலாக் கொம்பு."

'தம்மை வந்தடைந்தாரை யெல்லாம் ஆதரிக்கும் குணமுடைமை அவர்க்கியல்பாகும்' என்கிறது. ஒரு மரத்தின் கிளைகளில் மேலும் மேலும் சுமை மிகப் பலப்பல காய்கள் காய்த்தாலும், அக்காய்களை அக்

கிளை தாங்காது விடுத்தலும் உண்டோ? இங்ஙனமே, தம்மை யடைந்தவர்கள் பலராயினும் அவரைக் கைவிடார் மேலோர் என்க.

கேண்மை பாராட்டல்

இங்ஙனம் தமர் பிறர் என்று பாராது பலர்க்கும் துன்பந் துடைத்து இன்பஞ் செய்தலே பூண்ட மேலோர், தாம் கணமே கண்டு பழகினுரையும் கேளிர் போன்று கொண்டொழுகி அன்பு பாராட்டி அணைத் தொழுகுவரன்றே? இவ்வியல்பை நாலடி கூறுமாறு:

> " செல்வுழிக் கண்ணொருநாட் காணினும் சான்றவர்
> தொல்வழிக் கேண்மையில் தோன்றப் புரிந்தியாப்பர்."

'வழிநடை போமிடத்து ஒருநாள் கண்டு பிரிந்தா ராயினும், அவரைப் பலநாள் பழகிய நண்பர் போன்று மனத்தகத் தன்பால் பிணித்துக்கொண் டொழுகுவர்' என்றது காண்க. அருள் நிறைந்த உள்ளத்தவராத லின், சிறு பொழுது பழகினுரிடத்தும் நிறைந்த மனப் பிணிப்புடன் ஒழுகல் இயற்கையன்றே? மற்றுக் கீழோ ரோவெனின் பல நாள் பழகினும் பற்றிலராவர்.

காண்டொறும் சிறப்புச் செய்தல்

யாரையும் கேளிர் போன்று கருதுவோரும், தற் பெருமை கருதாதவருமான இப்பெரியோர் பிறரைச் சிறக்க உபசரித்தல் இயற்கையே யன்றே?

> " பன்னாளும் சென்றக்கால் பண்பிலார் தம்முழை
> என்னானும் வேண்டுப என்றிகழ்ப—என்னானும்
> வேண்டினும் நன்றுமற்(று)என்று விழுமியோர்
> காண்டொறுஞ் செய்வர் சிறப்பு."

கீழோர்மாட்டு ஒருவர் பலநாள் சென்று பழகினுல், 'இவர் நம்மோடு நெருங்கிய இத்தொடர்புண்மையே காரணமாகக் கொண்டு நம்மாட்டு ஏதேனும் வேண்டினும் வேண்டுவர்; இதற்கிடங்கொடுத்த லாகாது' என்று கொண்டு அவரைக் கண்டவழி அவரை மதியாராய் இருந்து, அவர் தம்மாட்டு நெருங்கிப் பழகாதவாறு தடுத்துக்கொள்வர். மற்றுப்பெரியோரோவெனின், 'நம்மால் பிறர்க்காவன ஏது செய்வோம்' என்ற கருத்தினரே யாதலின், பிறர் பலர் தம்மாட்டுப் பலமுறை வந்தபோ தெல்லாம், மனம் பொருந்த மகிழ்ந்து உபசரிப்பார்கள். அவர் எதையேனும் வேண்டினுலும் 'இவ்வுதவி நாம் செய்யப்பெறுவோம்' என்று மேலும் மகிழ்வர் என்க.

**கண்ணோட்டம்**

பிறர் துன்பந் துடைத்து அருளாள்வோராதலின், பிறர் குற்றம் கண்டுழிக் கண்ணோடி இரக்கங் காட்டுதல் அவர்க்கியல்பன்றே? அதை ஒரு நாலடி கூறுமாற்றைக் காண்க.

" புல்லா எழுத்தில் பொருளில் வறுங்கோட்டி
கல்லா ஒருவன் உரைப்பவும் கண்ணோடி
நல்லார் வருந்தியும் கேட்பரே மற்றவன்
பல்லாருள் நாணல் பரிந்து."

கண்ணோட்டத்திற்கான ஓரிடம் இங்குக் குறிக்கப் படுகிறது. "பல நூல்களையும் கல்லாத ஒருவன் பொருத்தமற்ற, பொருளற்ற பேச்சுக்களை அவையில் உரைத்தானுயினும், பெரியோர் 'அறிவற்ற அவன் பேச்சை வெறுத்து இகழின், மேலும் பலர் அவனை இகழப்புகுவ ராதலின் அவன்

பலர் முன்னிலையில் நாணுவான்' என்பதைக் கருதி, வெறுத்திகழாமல், தம் இயற்கையான கண்ணோட்டத்தினால் வருத்தமுற்றாயினும் கேட்டுக்கொண்டிருப்பர்'' என்று கூறப்படுகின்றது. பொருளற்ற பேச்சாதலின் 'சொல்' லென்று சொல்லாமல் ''புல்லா எழுத்து'' என்று சொல்லப்பட்டதென்க ஈண்டுக் 'கோட்டி' என்பது பேச்சைக் குறிக்கும். கொள்ளத் தகுந்த சிறந்த பேச்சுக்கள் கோட்டி யெனப்படும். கோட்டி யென்பதைப் பேச்சென்ற பொருளிலே ''என் வீரக்கோட்டி பேசுவார்'' என்று கம்ப ராமாயணச் (யுத்த காண்டம்-மாயா சனகப் படலம்-13) செய்யுளில் ஆண்டிருத்தல் காணத்தக்கது. கோட்டி யென்னும் செந்தமிழ்ச் சொல் பல பொருளிலும் வழங்கும். ''ஆயிழை கோட்டத்து ஓங்கிருங் கோட்டியிருந்தோய்'' என்னும் சிலப்பதிகார (30-வரந்.61-62) அடிகளில், கோட்டி யென்பது கோயிலின் வாயிலைக் குறிக்கும் ஒரு சொல்லாய் அமைந்திருக்கின்றது. கோட்டி யென்பது கொள்ளத்தக்க சிறந்த பேச்சுக்களையே குறிக்குமாதலால், அறிவோர் அவையின்கண் பேசப்படும் சிறந்த பேச்சுக்களைக் கோட்டி யென்பது குறித்து வழங்குவதாயிற்று. அத்தகைய அவையில், அத்தகைய பேருரை கூறப்புகுவோன்போல் கல்லா மகன் ஒருவன் வந்த தன்மை ''பொருளில் வறுங் கோட்டி'' என்றதால் குறிக்கப்பட்டதென்க.

### மானங்குறைய வாழார்

இனி, மேலோர் வாழ்க்கை நெறியினைக் கூறப் புகுந்த நாலடி, பழியொடு படாமையே அவரது குறிக்கோள் என்று கூறுகிறது. நெறி துன்பமுடைத்தாயி

னும் அதிற் சென்று புகழின்பம் பெறுவரல்லாமல், துன்பத்துக் கஞ்சிச் சிறு சில இன்பங் கருதித் தகா நெறியிற் சென்று பழிபூணார் மேலோர்.

> "பாவமும் ஏனைப் பழியும் படவருவ
> சாயினும் சான்றவர் செய்கலார் சாதல்
> ஒருநாள் ஒருபொழுதைத் துன்பம் அவைபோல்
> அருநவை ஆற்றுதல் இன்று"

என்று கூறுமாற்றைக் காண்க. பழியொடுவரும் இன்பம் எவ்வளவு உயர்ந்ததாயினும் கருதார். இதைச் சிறந்த ஓர் உவமைகொண் டுணர்த்துகின்றது நாலடி.

'புலியானது யானையை அறைந்து வீழ்த்துழி, அவ் யானை இடப்புறமாக வீழின் அதை யுண்ணாது செல்லும் இயற்கையுடைத்து. இங்ஙனமே மேலோர் பெருமனம் படைத்தோராய், மானமழியாமையே பொருளாகக் கொண்டு அருஞ்செயல் மேற்கொண்டு புகழ்பெறுவர். மானமழியுஞ் செயலால் வானுலகமே வருவதாயினும் அதைக் கருதார்' என்று கூறுகிறது நாலடி.

> "கடமா தொலைச்சிய கான்உறை வேங்கை
> இடம்வீழ்ந்த(து) உண்ணா(து) இறக்கும்—இடமுடைய
> வானகம் கையுறினும் வேண்டார் விழுமியோர்
> மானம் அழுங்க வரின்."

பழிக்கஞ்சல்

மானங்குறைய வாழாத மேலோரின் பழிக்கஞ்சும் இயல்பைச் சிறந்த உவமை மூலம் கூறும் நாலடியைக் காண்க:

"அங்கண் விசும்பின் அகல்நிலாப் பாரிக்கும்
திங்களும் சான்றோரும் ஒப்பர்மன்—திங்கள்
மறுவாற்றும் சான்றோர்அஃ தாற்றார் தெருமந்து
தேய்வர் ஒருமா சுறின்."

ஈண்டுப் பெரியோர்க்கு நிலா உவமை கூறப்படுகிறது. நிலா உயர்ந்த இடத்தில் விளங்கித், தண்மை பெற்று, மக்களெல்லாரும் இன்புறும்படி இன்னிலவைத் தந்து, தானும் விளக்கம்பெற்றுப் பொலிகின்றது. பெரியோரும், மற்றை மக்களினும் உயர்ந்து தோன்றி, தண்ணருளே மனத்தகத்து நிறைந்து, மக்கள்தம் வாழ்க்கையை நன்னெறிப் படுத்தி இனிமைபெறச் செய்து, தாமும் விளங்கித் தோன்றுகின்றனர்.

ஆயினும் ஒருவகையில் நிலவினும் பெரியோர் மேன்மையுற்று விளங்குகின்றனர். நிலவு தன்மாட்டு மறு விளங்கவும், அதைப் பொருட்படுத்தா தமைகின்றது. பெரியோர் தம்மாட்டு ஒரு தவறுண்டாய்ப் பழிப்புக் கிடமாயின், மனமறுகி வருந்தி உடல் தேயப் பெறுகின்றனர்.

### கொள்கையிற் குன்றார்

பழிக்கஞ்சும் மேலோர், தம்மை யழிக்கும் வறுமைக் காலத்தும் தாங்கொண்ட உயர்ந்த மனக்கோளையே பற்றிப் பெருநெறி பிடித்தொழுகுவரன்றி, எக்காலத்தும் தங்கொள்கையிற் குன்றார் என்பதை உணர்த்துகின்றது நாலடி.

"உடுக்கை உலறி உடம்பழிந்தக் கண்ணும்
குடிப்பிறப் பாளர்தங் கொள்கையிற் குன்றார்
இடுக்கண் தலைவந்தக் கண்ணும் அரிமா
கொடிப்புற் கறிக்குமோ மற்று."

வறுமையின் மிகுதியை "உடை சிதைந்து உடம்பு மெலிந்த விடத்தும்" என்று கூறி உணர்த்தியது காண்க. இத்தகைய மிகு வறுமைதானும் அவர் மனக் கோளை விடச் செய்யாது என்று குறிப்பித்தவாறும். தாம் மற்றையோரின் மேம்பட்டுக்கொண்ட மனக் கோளே அவர்க் குயிராகு மன்றி, அது கெட்டு உயிர் பேணுதல் அவர்க்கில்லையாகும். உடலினும் நன்மனத் தொடு பட்ட நற்செயலே உலகில் நிலைத்து நிற்பதன்றே? அதை யுணர்ந்தோர் வறுமைக் கஞ்சுவரோ? ஈண்டுக் கூறப்பட்ட உவமையைக் காண்க. சிங்கம் பசித்தும் புல் தின்னுமோ? வீரமும் வலியும் மேன்மையும் பொருந்திய சிங்கம், யானை முதலிய பெருவிலங்குகளை யன்றோ கொன்று தின்னும். இத்தகைய மேலோ ரன்றே பெரியோரும்? பிறர் ஒறுப்பினும் பெரியோர் தம் கொள்கையிற் குன்றார் என்பதைச் சிறந்த உவமை கொண்டு உணர்த்துகின்றது நாலடி.

> "கடித்துக் கரும்பினைக் கண்தகர நூறி
> இடித்துநீர் கொள்ளினும் இன்சுவைத்தே யாகும்
> வடுப்பட வைதிறந்தக் கண்ணும் குடிப்பிறந்தார்
> கூறார்தம் வாயிற் சிதைந்து."

கரும்பை ஒருவன் கடித்தும், தரையில் அடித்தும், பிளந்தும் வருத்தினும், அக்கரும்பு அவனுக்கு இனிய சாற்றையே கொடுக்கிறது.

இதை யொப்பப் பெரியாரையும் ஒருவன் பல வகையில் துன்புறுத்தின னாயினும், அவர்மாட்டு விலங்கியற்கை தோன்றாது. அவர்மாட்டுத் தண்ணரு ளும், பொறுமைக் குணமும் மற்றையோரின் வேறு பட்ட பிற உயர்ந்த மன இயற்கையுமே விளங்கித் தோன்றும். 'அவர் வாயினின்றும் மறந்தும் தீய

மொழிகள் வாரா' என்று உணர்த்தப்பட்டவாறு காண்க.

இக் கருத்தை உட்கொண்டன்றே, இந்நூலுக்குப் பின் எழுந்த நறுந்தொகையிலும் அதிவீரராம பாண்டியர்,

"அடினும் ஆவின்பால் தன்சுவை குன்றாது
சுடினும் செம்பொன் தன்னொளி கெடாது
அரைக்கினும் சந்தனம் தன்மண மாறாது
புகைக்கினும் காரகில் பொல்லாங்கு கமழாது
கலக்கினும் தண்கடல் சேறா காது."

என்னும் பசும்பால், பொன், சந்தனம், அகில், கடல் என்னும் சிறந்த உவமைகளை யமைத்து இதே கருத்தை விளங்கக் கூறினர். கூறிய சுவை முதலிய குணங்களெல்லாம், பால் முதலியவற்றிற்கு இயற்கைக் குணமானாற்போலப், பெரியோர்க்கும் தண்ணளியே இயற்கைக் குணமாமென்பதும் விளங்கும்.

இனிக் கொள்கையிற் குன்றாத இம்மேலோர், தாம் சிறந்துகொண்ட கொள்கையில் முயலும்போது, அவர் வினைசெயும் மேம்பாட்டை நாலடி தெளிய எடுத்து உரைக்கின்றது.

### வசைதீர எண்ணல்

பொதுவாக மக்கள் யாவர்க்கும் இயலும் எளிய காரியங்களிலேயே முயன்று வாழ்வர். பெரியாரோ வெனின் பெருமனமும் பேரறிவும் படைத்தமைக் கேற்பத், தாம் மற்றை மக்கள் செயலினும் மாறுபட்டு, மேம்பட்ட செயலிடத்தே மனம் பொருந்தப் பெறுவர். பெரியோர் மனம் பழியொடு படாத விழுப்பயனே குறிக்கொண்டு விரும்புமன்றி, அவை எளியனவா

அரியனவா என்று எண்ணிப் பார்க்கும் இயல்பின தன்று. தங்கடமையாகக் கண்டன அரியவாயிருத்தல் நோக்கி அவற்றைக் கைவிடார். ஆதலின், பெரியோர் மேற்கொள்ளும் செயல்களெல்லாம் புகழ்கொள்ளும் செயல்களா யமையும் என்க. மற்றையோர் செயல் புகழ் கொள்ளாவாகலின் இகழப்படும்.

ஒருவேளை பெரியோர் முயன்று மேற்கொண்ட அரிய செயல் முடியாவிட்டாலும் அதனால் இகழ்ச்சி யில்லை. அரிய செயல் மேற்கொண்டு முயன்றமை நோக்கி உலகம் அவரைப் புகழுமேயன்றி இகழாது. இதை நாலடி கூறுமாறு:

"இசையும் எனினும் இசையா தெனினும்
வசைதீர எண்ணுவர் சான்றோர் — விசையின்
நரிமா உளங்கிழித்த அம்பினில் தீதோ
அரிமாப் பிழைப்பெய்த கோல்."

ஈண்டுக் கூறப்படும் உவமையைக் காண்க. ஒருவன் நரியைக் கொல்லவேண்டி அதன்மீது அம் பெய்து கொல்கின்றான். மற்றொருவன் சிங்கத்தைக் கொல்லவேண்டி அம்பெய்கின்றான். இவன் அம்பு குறி தவறி விடுகின்றது. அம்பெய்த இவ்விருவருள் உலகம் யாரைப் புகழும்? அம்பு பிழையாது நரியைக் கொன்று கொண்டுவந்தோனைப் புகழுமா? சிங்கத்தை நோக்கி அம்பெய்து தவறியோனைப் புகழுமா? அம்பு பிழைப் பெய்தினும் சிங்கத்தைக் கொல்ல நினைத்து ஆண்மை யுடன் அம்பெய்தோனையன்றோ புகழும்? சிங்கத்தைக் கொல்லவேண்டி அம்பெய்த ஆண்மையுடையோனைத் தாம் மேற்கொண்ட அருஞ்செயற் பயனை யடையாத, அருஞ்செயல் மேற்கொண்ட மேலோர் ஒப்பாவதும் விளக்கமன்றோ?

**ஊக்க முரையாமை**

இங்ஙனம் வசைதீர எண்ணிய மேலோர் தாம் செயப்புகுமளவும் பிறர்க்குத் தோன்ருவாறு மனத் தகத்தே கரந்து அடங்கியொழுகுவர். இங்ஙனம் கரந்து அடக்கிவைத்த செயலே வெளிப்படின் மிகுபய னெய்துவிக்கும். இங்ஙனமாகாது தாம் செய்யப் புகு வனவற்றையெல்லாம் மனநிறையின்றி முற்கூட்டியே பலர்க்கும் சொல்லிச், சொல்லளவில் தற்புகழ்ச்சி கொண்டு திரிவோர் கீழோராவர். அன்னவர் செயல் வலி யற்ற, வாய்ச்சொல் வீரரே யாவார் என்க; மன வலியற்றவராதலின் அதுகொண்டு எழும் செயல்வலியு மற்றுக் கெட்டொழிவர். மனவலியுடையோர் தம் நிறைமனத்தால் செயலிலும் மேம்படுவரென்க. இதுவே உலக இயற்கை. இதை நாலடி,

> "ஆற்றுந் துணையும் அறிவினை உள்ளடக்கி
> ஊக்கம் உரையார் உணர்வுடையார்."

என்று கூறுகின்றது.

**பேரறிவும் பெருமுயற்சியும்**

இனி, அவர் செயல் மேற்கொள்ளுங்கால் மனம் போனபடி விடார். அவர் பேரறிவும் பெருமுயற்சியும் அவர் மனத்தை யடக்கி யாளும். மற்றுக் கீழோரோ வெனின், தம்மறிவு தம் மனத்தை யடக்கியாள வலி யற்று மனம்போனபடி செய்து தாழ்வடைவர். இங் ஙனம் மனம் வழியே செல்லலன்றி மீட்டுத் தடுத்து நிறுத்த இயலாது செய்து, பின் செய்ததற் கிரங்கிக் கூறிப்,பின்னும் மனவழியே ஒழுகும் அறிவுவலியற்ருேர் பலரை உலகில் காணலாம். மனம் சென்றவழி விடா

மல் தம் மறிவால் தடுத்து நிறுத்தி முயற்சியை மேலான நல்வழியில் செலுத்தும் பெரியோர் இயற்கையை,

> " நரம்பெழுந்து நல்கூர்ந்தா ராயினும் சான்றோர்
> குரம்பெழுந்து குற்றங்கொண் டேருர் — உரங்கவரு
> உள்ளமெனும் நாரினுற் கட்டி உளவரையால்
> செய்வர் செயற்பா லவை."

என்று கூறுகிறது நாலடி.

வறுமை, யாரையும் மனந்திரியச் செய்யும். இவ் 'வறுமைக் காலத்தும் அறிவின் வன்மையால் மனத்தைத் தடுத்து நிறுத்தி அம்மனத்தை நன்முயற்சியில் ஈடுபடுத்துவர் மேலோர்' என்று ஈண்டுச் சொல்லப் பட்டது. மற்றுக் கீழோர் செல்வக் காலத்தும், அருஞ் செயல் செயற்கேற்ற பெருஞ்செல்வம் பெற்றுவைத் திருந்தும், அது துணைக் கொண்டு அருஞ்செயல் செய்து மேம்படாமல், இழி தொழிலே செய்து செல்வப்பயன் பெரு தொழிவர். பெரியோர்மாட்டு வறுமையின் மிகுதியை "நரம்பெழுந்து நல்கூர்ந்தா ராயினும்" என்ற தொடர் எடுத்துக் காட்டியது. குரம்பாவது வரம்பு. அவ்வறுமையால் பெரியோர் நன்மக்கட்காம் வரம்பைக் கடக்கமாட்டார் என்பதும், வறுமை குற்றத்தின்கட்புகுத்தும் என்பதும் "குரம்பெழுந்து குற்றங்கொண் டேருர்" என்பதால் உணர்த்தப்பட்டன. பெரியோர் தம்மிடம் உள்ள பொருளளவானே பெருங் காரியங்களைச் செய்வார் என்பது, "உளவரையால் செய் வார்" என்றுகூறி உணர்த்தப்பட்டது. இனி, அவர் மனத்தைத் தடுத்து நிறுத்தும் மேன்மை, "உரம் கவரு உள்ளமெனு நாரினுற் கட்டி" என்பதால் காட்டப் பட்டது. பெரியோர் தம்மனத்தை அறிவென்னும் நறியொடு சேர்த்துக் கட்டுகிருர்கள். முயற்சியை

அதைக் கட்டுதற்கு நாராகக் கொள்கிறார்கள். (உரம்-அறிவு. கவறு-தறி. உள்ளம்-முயற்சி) இங்ஙனம் மனம் அறிவொடும் முயற்சியொடும் பட்டவழி, அது செல்லும் நெறியும் அந்நெறியால் எய்தும் பயனும் பெரியவன்றோ? நன்மக்கள் மேற்கொள்ளத்தக்க செய்கையினின்றும் அவர் செய்கை சிறிதும் தவரு தென்பது "செயற்பாலவை" என்றுகூறி உணர்த்தப் பட்டதென்க.

துளங்கா மனம்

இனி இங்ஙனம் அறிவும் முயற்சியுங் கொண்டு அரிய நல்வழியில் உய்த்து மேம்படும் பெரியோர் மனம் எத்தகைய புறச்சார்பாலும் அலைவுறுதல் பெருது, தான் மேற்கொண்ட முயற்சியிலேயே நிலைபெற்று நிற்கும். மற்றுச் சிறியோரோவெனின், வன்மையுடைய பிறர் தம் வன்மையால் மனந்திரியவும் பெறுவர். உலகில் சிலர் தாம் மன வன்மையற்று ஒரு நெறிப்பட்ட ஒழுக்கத்தில் நில்லாராய், வன்மையுடைய பிறர் சிலர் வன்மையால் இழுத்தவழி யெல்லாம் இழுப்புண்டு ஒழுகுவர். பெரியோர் தன்மை கூறும் செய்யுள் வருமாறு:

"கடுக்கி ஒருவன் கடுங்குறளை பேசி
மயக்கி விடினும் மனப்பிரிப்பொன் றின்றித்
துளக்க மிலாதவர் தூய மனத்தார்
விளக்கினுள் ஒண்சுடரே போன்று."

குறளையாவது கோட்சொல். பிறர் சொல்லும் கோட்சொல்லுக்கு மனங்கொடுத்து, அதையே பெரிய உறுதிப்பொருளாகக் கொண்டு, அதுவரை ஒருவர் மாட்டுக் கொண்டிருந்த தம் மனத்தன்மையும் திரியப்

பெற்று நிற்பார் மனவன்மையற்ற கீழோரே யாவர். குறளையையே பெரிதாகக் கொள்பவர் தலைமைப் பாடற்ற பேடியரே யென்க. தலைமையுடையோர் குறளைச் சொல்லை ஒரு பொருட்டாகக் கொள்ளார். மனந்துளங்காமைக்கோ ரிடமாக ஈண்டுக் குறளை பேசுதல் கூறப்பட்டதாதலின், வேறு எவ்விடத்தும் பெரியோர், தம் அரிய காரியத்தில் முயல்கின்றவர், புறச் சார்பால் மனந்துளங்கார் என்பது கொள்ளப் படும். ஈண்டுக் கூறப்பட்ட உவமையைக் காண்க. 'விளக்கின் சுடர் அவியாது நிற்றல்வேண்டின் காற்றி னின்றும் காக்கப்பட வேண்டுவதுபோல, மனம் குறளை முதலிய புற அலைவால் தன் தன்மை கெடாவாறு நிற்க வேண்டின், அம் மனமும் காக்கப்படவேண்டும் என்பது பெறப்படும். பெரியோர் அங்ஙனம் அறிவால் காக்கப்பட்ட மனவன்மையுடையவர் என்பது குறிக் கப்பட்டவாறும்.

அசையாது நிற்றல்

இனிப் பழியொழியப் புகழ் கொடுக்கும் செயற் கரிய செயல் மேற்கொள்ளும் மேலோர், தாம் செய்யத் தொடங்கி மேற்கொண்ட செயல்புரிந்து நிற்கும் பொழுது, அச்செயல் முடிவுறுததுபோல் தோன்றி னும், தம்மால் இயன்றவகையெல்லாம் வினைமேற் கொண்டு மனங்கலங்காமல் நிற்பர். இங்ஙனம் நிற்கும் மனவலியே வெற்றிக்குக் காரணமா மன்றிச், சோர்ந்து நிற்றல் வெற்றியை யழிக்கு மன்றோ? அது தலைமை யும் வன்மையு முடைய பெரியோர்க்கு இழுக்கே யன்றோ? மேலோர் தாம் செய்யத்தொடங்கிய செயல் கற்பயனை யளிக்கவல்ல தாயின், இயன்ற வழி வகை

யெல்லாம் அச்செயல் புரிதலே தமக்குக் கடமை யென்று கொள்வரேயன்றி, அதன் பயன் வருமோ வராதோ என்பதையே குறிக்கொண்டு கருதமாட்டார் கள். சிறந்த முயற்சிக்கு உற்றபயன் வாராமற் போகாது.

"தெய்வத்தான் ஆகா தெனினும் முயற்சிதன்
மெய்வருத்தக் கூலி தரும்."

என்பது மெய்ம்மொழி யன்றே?

"இசையா தெனினும் இயற்றி ஓர் ஆற்றல்
அசையாது நிற்பதாம் ஆண்மை—இசையுங்கால்
கண்டல் திரையலைக்கும் கானலங் தண்சேர்ப்ப
பெண்டிரும் வாழாரோ மற்று."

'முடியாததுபோல் தோன்றினும் தம்மால் இயன்றவாறு முயன்று நிற்றலே ஆண்மை' யென்று சொல்லப்படுவது காண்க. இங்ஙனம் முடியாதன போற் றோன்றும் அரிய செயற்கண்ணும் தாம் ஆண் மையுடைமைக் கேற்ப நின்று முயலாது, யார்க்கும் எளிய செயலிலேயே மனம் புரிந்து வாழ்தல் பொது வான பெண்களுக்கும் இயலும் என்று கூறப்படுவது காண்க. அங்ஙனமாகியோர் ஆண்மையற்ற பேடியர் என்பது குறிக்கப்பட்டது. ஆகவே, பயனையே நோக் காது சிறந்ததென்று கண்ட செயலிடத்து மனங் கொண்டு முயன்றுநிற்றல் மேலோர் கடமையாமென் றுணர்க.

"செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்
செற்கரிய செய்கலா தார்."

**உயர்ந்தோர்க்காம் உயிர்க் குணங்கள்**

உயர்ந்தோர்க்குரிய உயிர்க்குணமாக நான்கை ஒரு செய்யுளில் அமைக்கின்றது நாலடி.

"இனநன்மை இன்சொல்ஒன் (று) ஈதல்மற் றேனை
மனநன்மை என்றிவை யெல்லாம்—கனமணி
முத்தோ டிமைக்கும் முழங்குவரித் தண்சேர்ப்ப
இற்பிறந்தார் கண்ணே யுள."

உயர்ந்தோர் மன மொழி மெய்களின் தன்மையினை இச் செய்யுள் சொல்கிறது. அவர் மனம் தீமையை ஒரு சிறிதும் பொருந்தாது; நன்மையே நிறைந்த தன்மையது என்று சொல்லப்படுகிறது. பாலுக்கு வெண்மை இயற்கைத் தன்மை யானாற்போல உயர்ந்தோர் மனம் இயற்கையே தூய்மையுற்றிருக்கு மன்றி மாசு ஒரு சிறிதும் பொருந்தாது. பிறர்க் கின்னா செயல் அவரால் இயலாத தாகும். செய்வன வெல்லாம் நன்மையா யமைதலும் அவர் மனத்தியற்கையாலாம். மன இயற்கையே செயலில் வெளிப்படுமாதலினாலேயே,

"மனத்துக்கண் மாசில னாதல்; அனைத்தறன்
ஆகுல நீர பிற."

என்று கூறி, மனமாசற்றிருத்தலே அறமாகுமென்று தெளிய உரைத்தனர் வள்ளுவ ரென்க.

இனி, இங்ஙனம் நன்மனம் பொருந்தியோர் வாய்ச் சொல் இன்சொலாவதன்றி வேறாவதுளதோ? அவர் கனவிலும் கொடுஞ்சொல் வழங்காரன்றே? தீமொழி களை அவர் வாய் மறந்தும் உரையாதன்றே? இக் கருத்தாலேயே வள்ளுவரும்,

"ஒழுக்க முடையவர்க் கொல்லாவே தீய
வழுக்கியும் வாயாற் சொலல்."

என்று கூறினர் என்க. அவர் கூறும் அவ் வின்சொல் கேட்டற் கினிமையாயிருத்தன் மாத்திரையன்றிப் பிறர்க்கு நன்மையே பயக்குமென்க. ஆதலின், அவர் மொழியின் தன்மையாக இன்சொல் கூறப்பட்டது.

இனி, நன்மனமும் அதனால் இன்சொலும் பொருந்தியோர் செயல் சொல்லப்படுகிறது. உலக மக்களை இருவகையில் அடக்கலாம்; தந்நலங் கருதியே வாழ்வோரும் பிறர் நலங்கருதியே வாழ்வோருமென. தந்நலம் ஒன்றையுமே கருதுவோர்தாமும் உண்மையுணர்ந்தவராயின், பிறர் நலங் கருதலே தந்நலங் கருதுவதாகும் என்றுணர்வர்.

> "தன்னைத்தான் காதல னாயின் எனைத்தொன்றும்
> துன்னற்க தீவினைப் பால்."

என்றுணர்த்தினார் வள்ளுவர்.

பிறர்க்குத் தீமையோ நன்மையோ செய்தவழி, அத் தீவினையோ நல்வினையோ பின் தம்மையே வந்தடைதலின், பிறர்க்குத் தீமைசெய்து தமக்குத் தீவினை தேடிக்கொள்ளாமல், பிறர்க்கு நன்மைசெய்து தமக்கு நன்மை தேடிக்கொள்ளலன்றே அறிவுடைமையாவது. ஆதலின், ஒருவர் பிறர்நலம் நாடும் இயற்கைக் குணம் வாய்க்கப் பெறாது, தந்நலமே நாடினும், அவர் அறிவுடையவராயின், பிறர்க்குத் தீமைபுரியாது, நன்மையே செய்து மேன்மை யுறுவர் என்பது துணியப்படும். இங்ஙன மிருக்க, நன்மனம் வாய்க்கப் பெற்றவர், அதற்கேற்ப இன்சொல் வாய்க்கப்பெற்றதோடு, செயலிலும் பிறர்நலங் கருதியே வாழ்வரன்றே? அங்ஙனம் பிறர் நலங் கருதி வாழும் முறையில் ஒருவர்க்கு இயற்கையா யமைந்த சிறந்த குணம் ஈகையே யாகும் என்க. அவ்வீகைக் குணமே தந்நலங் கருதாது பிறர்நலங் கருதும் இயற்கையை உணர்த்துவதாகும் என்க. தந்நலமே கருதும் அறிவிலார் ஈகைக் குணமற்ற உலோபியா யிருப்பதும் உலகியற்கை யன்றே? இங்ஙனம் ஈகையே தந்நலங் கருதாது பிறர்நலங் கரு

தும் இயற்கையைத் தெரிவிப்பதாகலின், "ஈதலறம்" என்று சிறப்பித்துச் சொல்லப்படுகின்றது. ஆதலின், உயர்ந்தோர் மனம் நன்மையே நினைக்குமென்றும், அவர் சொல் இனிமையே பொருந்துமென்றும், அவர் கை ஈகையே மேற்கொள்ளுமென்றும் அவர் இயற்கை கூறப்பட்டதென்க. இங்ஙனம் தம் மளவில் மன மொழி மெய்களில் நற்செயல் வாய்க்கப்பெற்றவர் தம் வாழ்க்கையில் உலகியலில் பலரொடும் பழகும்வழி நற்சார்புடையோர்மாட்டே கலக்கப்பெற்றிருப்பதும் இயற்கையாம். இனம் இனத்தைச் சாருமாதலின், நல்லோர் நல்லோரையே சார்வர். ஆதலின், மன மொழி மெய்களின் தன்மைகூறி அவர் இயற்கைத் தன்மை யுணர்த்தியதோடு அவர், வாழ்க்கை நெறி யைப் புலப்படுத்திக் காட்ட "இன நன்மை"யும் உடன் கூறப்பட்டது.

உயர்ந்தோரின் மன மொழி மெய்களின் தன்மை யும் அவர் வாழ்க்கை முறையும் ஈண்டுக் காட்டப் பட்டன. இவை உயர்ந்தோர்க்கு இயற்கையாயமை யும் குணமாதலை யுணர்த்தி "இற்பிறந்தார் கண்ணே யுள" என்று கூறப்பட்டதென்க.

ஈண்டுக் கூறிய இனநன்மை, ஈதல் என்ற இரண் டோடு, மனநன்மையை உண்டாக்கிச் சொல்விளக்கத் தைக் கொடுக்கும் கல்வியை மூன்றாவதாக அமைத்து, இம் மூன்றும் பெரியோர்மாட்டு நீங்காமற் பொருந்தும் என்று ஒரு நாலடி கூறுகிறது:

"கல்லாது போகிய நாளும் பெரியவர்கண்
செல்லாது வைகிய வைகலும்—ஒல்வ
கொடாஅ தொழிந்த பகலும் உரைப்பின்
படாஅவாம் பண்புடையார் கண்."

கல்வியின் சிறப்புப் பெரிதும் கருதற்குரியது. மக்கட் பிறப்பை யடைந்த ஒருவன் அப்பிறப்பிற் கேற்ற உயர் குணம் பொருந்தினன்றி மக்களுள் ஒருவனாய் எண்ணப்படுவனோ? விலங்குணர்ச்சியினின்றும் ஒருவனை வேறு படுத்துவது, நன்மை தீமை உணர்ந்து, தீமையைக் கடிந்து, நன்மையை மேற்கொண்டு மேற்படுவதன்றோ? அங்ஙனம் உலகில் நன்மை தீமை யுணர்ந்து, 'இதுதான் மக்கள் கடைப்பிடித் தொழுகத் தக்க பெருநெறி' யென்றறிந்து, அதை மேற்கொள்ளாது வீணே உண்டுறங்கி இன்புற்றுக் காலங் கழிப்பானாயின், அங்ஙனமே உண்டுறங்கி இன்புற்றுக் காலங் கழிக்கும் விலங்கினங்களே போல்வானல்லது வேறுவனோ? இங்ஙனம் நன்மை தீமை யுணர்ந்து மக்கள் மேற்கொள்ளத்தக்க பெருநெறியை உள்ளவாறுணர்தல் எவ்வாறு? அங்ஙனம் நன்மை தீமை யுணர்ந்து பெருநெறி பிடித்தொழுகி மேம்பட்ட அறிவுடையார் இயற்றிய நூல்களாலன்றோ அவற்றை யறியலாம். நூல்கள், பலகாலத்தும் பலநாட்டும் தோன்றி மேம்பட்ட மேலோர், தம் வாழ்க்கையிற் கண்ட சிறந்த உண்மைகளை ஒருசேர எடுத்துக் கூறுவனவன்றே? ஆதலின், நூல்களைக் கற்றலே மக்களுட் பிறந்த ஒருவன் கைக் கொள்ள வேண்டிய முதற்கடமையாம்; அதுவே விலங்குணர்ச்சியினின்றும் ஒருவனை நீக்கி மகனுந்தன்மையை யெய்துவித்து அதற்கேற்ற நன்னெறியில் அடைவிக்கு மாதலின். இதனாலன்றோ வள்ளுவரும்,

> "விலங்கொடு மக்க ளனையர் இலங்குநூல்
> கற்றாரோ டேனை யவர்."

என்று கூறிச் சென்றனர்.

ஆதலின், இந்நாலடிச் செய்யுள் 'தனக்காக்கம் வேண்டுவான் ஒருவன் நாடோறும் கற்றலைக் கடைப் பிடியாகக் கொள்ளவேண்டு'மென்று கூறுகின்றது.

விலங்குணர்ச்சியினின்றும் வேறுபட்டுச் சிறந்த அறிவையடைதற்கு ஒருவன் கற்றலை மேற்கொள்வது போல, அங்ஙனம் அடைந்த உயர்நிலையினின்றும் அவன் மேலும் மேலும் உயர்வடைந்து பெரும்பய னடைதற்கு ஒரு வழியாகும், பெரியாரொடு பழகல் என்பது. மக்கள் இயற்கையே நல்லறிவோ புல்லறிவோ வாய்க்கப் பெற்றவராயினும், தாம் பழகும் மக்கள் காரணமாக அவர்நிலை பெரிதும் மாறுபடுகின்றன. எடுத்துக்காட்டாக, ஒரு தன்மையவான அறிவு வாய்க்கப்பெற்றவராயினும், இருவர் இரு வேறு நாட்டில் தோன்றின், அவ்விருவர் தோன்றிய நாட்டு மக்களின் பழக்கவழக்கத்தால் அவ்விருவர் நிலையும் மாறுபாடெய்தும். இதனால் தாம் பழகும் மக்கட் கூட்டம் ஒருவன் உயர்நிலைக்கோ தாழ்நிலைக்கோ பெரி தும் காரணமாவது தெளியப்படுமன்றோ? உலகில் மக்கள், பிறர் சிலரைத் தம் வயப்படுத்தித் தீத் தொழிலைப் புரியச் செய்வதும், மற்றுஞ் சிலர் பிறரை நல்வழிப்படுத்தலும் நாம் நாடோறுங் காண்பனவே. ஆதலின், மக்கள் தாஞ் சேர்ந்த இனத்தின் இயல்பால் தம் அறிவு திரிந்து அவ்வினத் தன்மைத்தான அறிவைப் பெறுவாரென்பது துணியப்படும். இதனா லன்றோ வள்ளுவரும்,

> "நிலத்தியல்பால் நீர்திரிந்(து) அற்றாகும் மாந்தர்க்(கு)
> இனத்தியல்ப தாகு மறிவு."

என்று கூறினர்.

ஆதலின், தூயோரான மேலோரைச் சேரின், தாமும் தூயோராய் மனமொழிகளில் தூய்மையுற்று உயர்வர். இதுவே உலகில் உயர்ச்சி பெற விழையும் மக்கட்குச் சிறந்த வழியாகும்.

> "மனந்தூய்மை செய்வினை தூய்மை இரண்டும்
> இனந்தூய்மை தூவா வரும்."

என்று வள்ளுவர் கூறியவாறுங் காண்க.

> "இனத்தானும் இன்னா னெனப்படுஞ் சொல்."

என்று மேலும் அவர் கூறினார்.

பெரியோர் சேர்க்கை இங்ஙனம் ஒருவனுக்கு நல்லறிவைத் தந்து, மனமொழி மெய்களை நல்வழிப் படுத்தி, நல்லோனென்ற புகழையுமுண்டாக்கி, அவன் கைக்கொள்ள வேண்டிய நன்னெறியில் மேலும் மேலும் வழிகாட்டி யுயர்த்தலின், நாடோறும் பெரியாரோடு பழகவேண்டுமென்பது இரண்டாவதாகக் குறிக்கப்பட்டது.

நாடோறும் கற்றல் வேண்டுமென்றும், நாடோறும் பெரியாரோடு பழகவேண்டுமென்றுங் குறித்து, விலங்குணர்ச்சி நீங்கி மேன்மேலும் நல்வழியில் சென்று உயர்வடையக் கூறிப், பின் சிறந்த நல்வாழ்க்கை நெறியைக் கூறுவதாய் ஈதலை எடுத்துக் கூறுகின்றது. அறங்கள் யாவற்றுள்ளும் சிறந்த அறமாக அதுவே எடுத்துச்சொல்லப்படுகிறது. ஈதலே எளியார் முதல் வலியார் வரை யாவரும் கைக்கொள்ளத்தகுந்த தாதலாலும் அதுவே அறங்கள் யாவற்றினும், பெரும்பயன் விளைவிக்குமாதலாலும், அவ்வறமே நன்மனமுடைமையைக் காட்டும் சிறந்த செயலாதலாலும், புகழைக்

கொடுக்குமாதலாலும் ஈதலை நாடோறும் ஒருவன் செய்க என்று கூறப்பட்டது.

ஆதலின், நாடோறுங் கற்றலும், நாடோறும் பெரியாரோடு பழகலும், நாடோறும் இயைந்த அளவால் ஈதலும் என்னும் மூன்றும் மேன்மை யெய்த நினைக்குமொருவன் கடைப்பிடிக்கவேண்டிய சிறந்த செயல்களாமாறு உணர்க. இவை மூன்றையும் ஆக்கங்கருதிய மேலோர் தவறாது புரிவார் என்பதுகொண்டு, 'கல்லாத நாளும், பெரியாரொடு சேராத நாளும், இயைந்தது ஈயாத நாளும் மேலோரிடத் தில்லை' என்று எதிர்மறை முகத்தால் கூறப்பட்ட தென்க.

## II

### கீழ்மை

இனிக் கீழோரை வெறுத்தொதுக்கும் முறையில் அவர்தம் இழிகுணங்களைச் சிறந்தெடுத்துக் கூறும் நாலடியைக் காண்பாம் :

### கீழோர் செயல்

"மூத்தொறூஉம்
*தீத்தொழிலே கன்றித் திரிதந்து எருவைபோல்*
*போத்தறார் புல்லறிவி னார்."*

மக்கள் வயதேற ஏற அறிவு விரியப்பெற்று அதற்கேற்ப மேற்செயல் புரிதற்கண்ணன்றே மனம்புக வேண்டும். மற்றுக் கீழோரோ வெனின் வயதேற ஏறத் தீத்தொழில் செய்தலில் முதிர்ச்சி பெறுகின்றனர். இவர்க்குவமை பிணந்தின்னும் கழுகு கூறப்படுகிறது. பிணந்தின்னும் கழுகு, நல்ல உணவுப் பொருள்கள் உலகத்திருப்பவும், அவற்றை விரும்பாது இடுகாட்

டையே உறைவிடமாகக் கொண்டு, ஆண்டுக் காணப் படும் பிணத்தையே தின்று மகிழ்கின்றதன்றே! கீழோர் தீத்தொழிலுக்கு ஏற்ற உவமையை அமைத் துக் கீழோரியல்பு மனங்கொளத் தெரிவித்தவா றன்றோ?

**மனம் மொழி மெய்**

இனி இக்கீழோ ரியற்கையைச் சற்றே விரித்துக் கூறுமாறு:—

“ கடுக்கெனச் சொல்வற்றும் கண்ணோட்ட மின்றும்
இடுக்கண் பிறர்மாட் டுவக்கும்—அடுத்தடுத்து
வேக முடைத்தாம் விறன்மலை நன்றுட
ஏகுமாம் எள்ளுமாம் கீழ்.”

கீழோர் பேசும் பேச்சுக்களெல்லாம் பிறர்செவி யைச் சுடுவனவாயிருக்கும். தாம் பழகியோரிடத்தும் பொருந்திய மனப்பண்பற்றவர். பிறர்க்குத் தீங்கு செய்தலிலேயே விருப்புடையர். அடிக்கடி சினங் கொள்ளும் இயல்பினர். எங்கும் சென்று திரிந்து ஒழுகலே இயற்கையாக உடையார். பிறரை இகழ்ந்து பேசுந் தன்மையினர்.

**மொழி**

இனி, இக்கீழோரின் மொழியின் இயற்கை சிறந் தெடுத்துக் கூறி உணர்த்தப்படுகின்றது.

“ பெறுவதொன் றின்றியும் பெற்றுனே போலக்
கறுவுகொண்(டு) ஏலாதார் மாட்டும்—கறுவினல்
கோத்தின்னு கூறி உரையாக்கால் பேதைக்கு
நாத்தின்னும் நல்ல சுனைத்து.”

கீழோர், தமக்கு வரும் பயன் ஒன்றும் இல்லையா யினும், பெரும் பயன் பெறுபவர்போலத் தமக்கு

யாதோர் தொடர்புமற்ற பிறர்மாட்டும், எவ்வகைக் காரணமின்றியும், சினங்கொண்டு தீய சொற்களையே படைத்துத் துணிந்து கூறுவர். அதைப் பல படியாக விரித்து உரைப்பர். இங்ஙனம் 'உரையாவிட்டால் அக் கீழோர்க்கு நாத் தினவெடுக்கும்' என்று கூறப்பட்ட வாறு உணர்க. ஆகவே, தீய செய்தலே அவர்க்குப் பொழுதுபோக்காகு மென்பதும், அவர் யாரிடத்தும் நண்பு பாராட்டும் குணமின்றி யாரிடத்தும் பகை பாராட்டும் குணமே பெற்றவ ரென்பதும் காட்டப் பட்டன.

கீழோர், பிறர்மாட்டு அருங்குணங்கள் மிகுந்திருப் பினும் அக்குணத்தைெயல்லாம் பொருட்படுத்தாமல், அவர்மாட்டு ஏதேனும் குற்றமுண்டா வென்று ராய்ந்து, அக்குற்றத்தையே அவர் முன்னிலையிலும் கூறி, அதனால் மகிழ்கின்ற குணமுடையராவர். இதைப் பின்வரும் நாலடி உணர்த்துமாற்றைக் காண்க :

" கணமலை நன்னாட கண்ணின்(று) ஒருவர்
குணனேயும் கூறற் கரிதால்—குணனழுங்கக்
குற்றம் உழைநின்று கூறும் சிறியவர்கட்(கு)
எற்றால் இயன்றதோ நா."

உலகில் பலர் பிறர் குணங்களை அவர் முன்னிலை யிலே(யோ அல்லது புறத்தோ) புகழ்தற்கும் தயங்கு கின்றனர் ; அங்ஙனம் புகழின் முகத்துதியாகுமென்று அஞ்சி. இங்ஙனமிருப்பத் தீயோரோவெனின் பிறர் புறத்தேயன்றி அவர் முன்னேயே நின்று, அவர்மாட்டு மிகு குணமிருக்கவும், அவற்றையெல்லாம் பொருட் படுத்தாது, அவர்மாட்டுக் குற்றமே யாராய்ந்து கொண்டு கூறி, அவர் மனம் துன்புறச் செய்கின்றனர். இங்ஙனம் மகனுந்தன்மை கெட்டுத் தீய கூறி மகிழ்

தலின், அவர் நா மற்றையோர் நாக்குப் போன்ற தன்று; 'அது மரத்தாலோ பிறவற்ருலோ ஆகிய நாவோ' என்று குறிப்பித்ததும் உணர்க.

மக்கட்பண் பற்றவர்

இனி அக்கீழோர் பிறர் துன்பங்கண்டு மகிழ் வோரேயாதலின், அவர் பிறர்க்கு உதவும் அருளுள்ளம் படையாரன்றே? இம்மனவியற்கையைக் குறிக்கு மாறு :—

" கல்நனி நல்ல கடையாய மாக்களில்
சொல்நனி தாமுணரா வாயினும்—இன்னினியே
நிற்றல் இருத்தல் கிடத்தல் இயங்குதல் என்(று)
உற்றவர்க்குத் தாமுதவ லான்."

கீழோர் பிறர்க்குதவா இயல்பு, கல்லின் தன் மையை எடுத்துக் காட்டி, அக்கல்லோடு கீழோரை ஒப்பித்துக் காட்டுமுகத்தால், கூறப்படுகிறது. கல், பிறர் சொல்வனவற்றைக் கேட்கும் அறிவு படைத்த தன்று. அங்ஙனம் பிறர் கூறுவனவற்றை உணர்ந் தறியும் அறிவாற்றல் அற்றதாயினும், அது பிறர் தன் மீது நிற்றற்கும், தன் மீது இருத்தற்கும், தன் மீது படுத்தற்கும், தன் மீது நடத்தற்கும் இடந் தந்து உதவுகின்றது. மற்றுக் கீழோரோவெனின், தாமும் மக்களறிவு வாய்க்கப்பெற்றிருந்தும், அறிவோர் பலர் கூறும் அறிவுரைகளைக் கேட்டறியும் ஆற்றல் பெற் றிருந்தும், அவ்வறிவோடெல்லாம் படாது, அறிவற்ற அக்கல்தானும் உதவும் தன்மையொடு மாறுபட்டுப், பிறர்க்கேதும் உதவுதல் புரிய நினையாது, மக்கட் பண் பற்றிருக்கின்றனர்.

இங்ஙனம் பிறர்க்குதவா இயல்பு வாய்க்கப்பெற்ற கீழோர், தம்மை ஒறுப்பார்க்கோ வேண்டுவன செய்தலில் முற்படுகின்றனர்.

" தளிர்மேலே நிற்பினும் தட்டாமற் செல்லா
உளிநீரர் மாதோ கயவர்—அளிநீரார்க்(கு)
என்னானும் செய்யார் எனைத்தானும் செய்பவே
இன்னாங்கு செய்வார்ப் பெறின்."

கீழோர் அன்பே உருவாக உடைய நல்லோர்க்கு ஏதும் செய்ய முற்படுவதில்லை. மற்றுத் தமக்குத் துன்பஞ் செய்யும் வலியோரைக் கண்டால், அவர்க்கு வேண்டுவன புரிந்து உதவுகின்றனர். ஈண்டு உளி உவமை கூறப்படுவது காண்க. உளி எளிதில் வெட்டத்தகும் மெல்லிய தளிர் மேல் நின்றாலும், அவ்வுளியின் தலையைத் தட்டினாலல்லாமல் அத்தளிரை வெட்டுத லில்லையன்றே? தம்மைத்துன்புறுத்துவோருக்கு வேண்டுவன செய்யும் கீழோர்க்குப் பொருந்திய உவமையாயமைந்தது காண்க.

வாழ்க்கைப்பய னிழப்போர்

இக் கீழோர் மனநிலையை மேலும் கூறுமாறு :

" காழாய கொண்டு கசடற்றார் தஞ்சாரல்
தாழாது போவாம் எனஉரைப்பின்—கீழ்தான்
உறங்குவா மென்றெழுந்து போமாம் அஃதன்றி
மறங்குமாம் மற்றொன் றுரைத்து."

'உலகத்து உறுதிப்பொருளை யுணர்ந்த, குற்றம் நீங்கிய பெரியோர்மாட்டுச் சென்று, அவர் மொழி கேட்டு நற்பயனடைவோ' மென்று ஒரு கீழோனிடம் கூறினால், கீழோன் "உறங்கச் செல்வோம்" என்று கூறி, உறங்கிப் பொழுதை வீணாக்கழிப்பதையே

விரும்பிச் செல்வன் என்று அவன்மனநிலை எடுத்துக் கூறப்பட்டது. ஆகவே வாழ்க்கைப் பயனறியாத கயவ ரவர் என்பது உணர்த்தப்பட்டது. இங்ஙனம் வாழ்க் கைப் பயன்பெறாது கழியும் அவரியல்பை மேலுமொரு நாலடி,

> "பொன்னே கொடுத்தும் புணர்தற் கரியாரைக்
> கொன்னே தலைக்கூடப் பெற்றிருந்தும்—அன்னோ
> பயனில் பொழுதாக் கழிப்பரே நல்ல
> நயமில் அறிவி னவர்."

என்று கூறுகிறது. ஓரூரிடத்தே பெரியார் ஒருவ ரிருந்தும், அப்பெரியோர்மாட் டுடனுறையும் பயனை அவ்வூரிடத்தே வாழும் ஒரு கீழ்மகன் பெறுவனோ? இனி, இப்பெரியோர் தாமும், தாமே வருந்திச் சென்று கீழோனுக்கு அறிவுரை கூறினும், அதை இகழ்ந் தொதுக்கித் தன்போல்வானையே கொண்டு அவன் மாட்டு விரும்பி உரையாடி மகிழ்வன் அவன்.

> "கற்றோர் உரைக்கும் கசடறு நுண்கேள்வி
> பற்றாது தன்னெஞ்(சு) உதைத்தலான்—மற்றுமோர்
> தன்போல் ஒருவன் முகநோக்கித் தானுமோர்
> புன்கோட்டி கொள்ளுமாங் கீழ்."

கீழோர் தம் மன வழியே செல்லும் இயல்பினராத லால், தம்மனம் பெரியோர் பேச்சை இகழ்ந்து ஒதுக்கு தலின், அம்மனவழிப்பட்டுப் பெரியோர் பேச்சை வெறுத்து நீங்குகின்றனர். "வேம்பன்றோ காக்கை விரும்புங் கனி" என்பது போன்று கீழோர் கீழோ ரையே விரும்பிக் கொண்டு அழிகின்றனர். இத்தகைய கீழோர்க்கு இரு உவமை கூறி, அவர் தன்மையை வெளிப்படுத்துவது பெரிதும் உணர்ந்து இன்புறத் தக்கது. ஒன்று நாய்.

"அவ்விய மில்லார் அறத்தா றுரைக்குங்கால்
செவ்விய ரல்லார் செவிகொடுத்தும் கேட்கலார்
கவ்வித்தோல் தின்னும் குணுங்கர்நாய் பாற்சோற்றின்
செவ்வி கொளல்தேற் றாதங்கு."

புலாலுண்ணும் இழிசினரால் வளர்க்கப்பெறும் நாயானது, ஆண்டுப் பெறுகின்ற தோலையே சுவைத்துத் தின்னும் இயல்பினதாதலால், அது அத்தோலையே விருப்பத்துடன் சுவைக்குமல்லாமல், பாலும் நெய்யுங் கலந்த பாயசத்தைச் சுவைத்துண்ணும் இயல்பு பெறுமோ? இந்'நாயே போன்று கீழோரும், பெரியோர் கூறும் அறிவுரைகளின் மேன்மையை யறிந்து விரும்பிக் கேட்காமல், தம்போன்றோர் புல்லுரையே விரும்பிக் கேட்டு நாட்கழிப்ப' ரென்பது கூறப்பட்டது.

இனி மற்றோர் உவமை கோழி.

"கப்பி கடவதாக் காலைத்தன் வாய்ப்பெயினும்
குப்பை கிளைப்போவாக் கோழிபோல் — மிக்க
கனம்பொதிந்த நூல்விரித்துக் காட்டினும் கீழ்தன்
மனம்புரிந்த வாறே மிகும்."

கோழிக்கு நாள்தோறும் அரிசி நொய்யை நிறையத் தூவியளித்தாலும், அக்கோழி அவ்வரிசி நொய்யைக் கொள்வதோடமையாது, குப்பைமேடுகளிற் சென்று உணவுகொள்ளும் தன் வழக்கத்தை விடாதன்றே? கீழோரும் இங்ஙனமே அரும்பொருள் நிறைந்த நூற்பொருளைப் பெரியோர்பால் உணர்ந்தாலும், அந்நூற்பொருளைக் கொண்டொழுகாமல், தம் மனம் விரும்பிய இழிதொழிலையே விரும்பிச் செய்வர் என்பதாம்.

---

## கக. நல்லாரிணக்கம்

"நல்லா ரிணக்கமும் நின்பூசை நேசமும் ஞானமுமே
அல்லாது வேறு நிலையுள தோஅக மும்பொருளும்
இல்லாளும் சுற்றமும் மைந்தரும் வாழ்வும் எழிலுடம்பும்
எல்லாம் வெளிமயக் கேஇறை வாகச்சி ஏகம்பனே."

என்று மொழிந்தனர் முற்றத்துறந்த முனிவராய் விளங்கிய பட்டினத்தடிகள். உலகப் பொருள்கள் நிலையற்றன என்று கூறிய அடிகள், அதையுணர்ந்த மக்கள் மேற்கொள்ளத்தக்க சிறந்த செயலாக நல்லா ரிணக்கத்தையே முதற்கண் குறிக்கின்றனர். நல்லா ரிணக்கமே ஒருவனை அறியாமையினின்றும், அதன் காரணமாக உண்டாகும் தீமையினின்றும் நீக்கி, அறிவையும், அவ்வறிவால் அடையத்தக்க பேரின்பத்தையும் எய்துவிக்குமென்க.

துறவறமே பேரறமாகக்கொண்ட நம்சமண் தமிழ்ப் புலவர்களும் இந்நல்லாரிணக்கத்தின் மேன்மையையே பலவிடத்தும் பெரிதும் வற்புறுத்திச் செல்கின்றனர். நல்லாரிணக்கம் இன்பம் கொடுப்பதை நாலடி கூறுமாறு:

"உணர உணரும் உணர்வுடை யாரைப்
புணரப் புணருமாம் இன்பம் — புணரின்
தெரியத் தெரியும் தெரிவிலா தாரைப்
பிரியப் பிரியுமாம் நோய்."

'நன்மை தீமைகளைப் பகுத்தறியவல்ல சிறந்த அறிவினைப் பெற்ற பேரறிவாளர்களைச் சேரின் இன்பம்பெருகு' மென்றும், 'நன்மை தீமைகளைப் பகுத்தறியவல்ல அறிவினைப் பெறுத புல்லறிவாளர்களைச் சேரின் துன்பமே யுண்டாமாதலால், அவரைப் பிரிந்

திருத்தலே துன்பம் வேண்டா மக்கள் செய்யவேண்டிய தொன்'றென்றும் உணர்த்தப்பட்டமை காண்க.

இத்தகைச் சிறந்த அறிவின்பத்தைக் கொடுக்கும் மேலோரின் மேன்மையையும், அவரை அருகில் பெற்று வைத்தும் பலர் அவரையடுத்துச் சிறந்த பயன் பெறாது கழிகின்றமையையும் ஒரு நாலடி யுணர்த்துகின்றது:

“ பொன்னே கொடுத்தும் புணர்தற் கரியாரைக்
கொன்னே தலைக்கூடப் பெற்றிருந்தும் --- அன்னோ
பயனில் பொழுதாக் கழிப்பரே நல்ல
நயமில் அறிவி னவர்.''

பொன்னைக்கொடுத்து அதற்கு மாறாகப் பல பொருளையும் வாங்கி அடையலாமாயினும், அறிவையும் அறிஞரையும் பொன்கொடுத்தல் ஒன்றேகொண்டு அடைந்துவிடல் முடியுமோ? மனம் விரும்பி அறிவு நூல்களைக் கற்றும், அறிஞரைத் தேடியடைந்து அவர் மாட்டுச் சிறந்த அறிவுரைகளை விரும்பிக் கேட்டும் அல்லாமல் பயன்பெறல் முடியுமோ? ஆதலின், துன் பத்துக்குக் காரணமாய அறியாமையை யகற்றி, வாழ்க்கைப் பயனடைந்து இன்புறுமாறு செய்யவல்ல பெரியார், “பொன்னே கொடுத்தும் புணர்தற் கரியார்'' என்று உயர்த்துச் சொல்லப்பட்டார். இத் தகைய அறிஞரைத் தாம் வாழும் ஊரில் பெற்றுவைத் தாராயினும், புல்லறிவாளர், அவர் மேன்மையுணர்ந்து அவரோடு கூடி யொழுகி மேம்படாது அழிவதை நோக்கி இரங்கிக் கூறியவாறும் இச் செய்யுள்.

இனி இவ்வறிஞர் பலரும், மக்கள் வாழ்க்கைப் பயனெய்தி மேம்படுமாறு செய்யவல்ல மேலோ ராதலின், அவரால் உலகம் அடையும் பயனை ஒரு நாலடி சிறந்த உவமைகொண் டுணர்த்துகின்றது.

> " சீரியார் கேண்மை சிறந்த சிறப்பிற்றாய்
> மாரிபோல் மாண்ட பயத்ததாம் — மாரி
> வறந்தக்கால் போலுமே வாலருவி நாட
> சிறந்தக்கால் சீரிலார் நட்பு."

உலகத்தில் பல உயிர்களையும் செழிக்கச் செய்வது மழையேயாம். மற்று, மழை வறந்த காலமோ வெனின் துன்பமே மிகுப்பது. உலகத்துக்கு நல்வழிகாட்டி மக்களை நல்லின்ப வாழ்க்கையில் செலுத்தும் மேலோர்க்கு மழையும், கீழோர்க்கு வறந்த காலமும் உவமை கூறப்பட்டிருப்பது காண்க. மழை உலகத்துப் பல்லுயிர்களின் உடலைப் பொலியச்செய்யப், பெரியோர் மக்களுக்கு உயிர்க்குறுதி காட்டி உயிரைப் பொலியச் செய்கின்றனரென்க.

இனி இந்நல்லாரிணக்கம் தொடக்கத்திலிருந்து போகப்போக இன்பமே மிகுத்துக்கொண்டு போகுமென்பதை ஒரு சிறந்த உவமைமூலம் உணர்த்துகின்றது நாலடி.

> " கருத்துணர்ந்து கற்றறிந்தார் கேண்மைஎஞ் ஞான்றும்
> குருத்திற் கரும்புதின் றற்றே—குருத்திற்(கு)
> எதிர்செலத்தின் றன்ன தகைத்தரோ என்றும்
> மதுரமி லாளர் தொடர்பு."

நல்லாரிணக்கம் குருத்தினின்று அடிநோக்கிக் கரும்பைத் தின்று சுவைப்பதோடொக்கு மென்றும், அல்லாரிணக்கம் அடியினின்று நுனிநோக்கித் தின்பதோ டொக்குமென்றும் கூறப்படுமாறு காண்க. அல்லாரிணக்கத்தால் பெறப்படுவது கரும்பின் சுவை இன்பம்போல் காணப்பட்டாலும், அது போலி இன்பமாயமைந்து முடிவில் கரும்பின் நுனி உவர்க்குமாறு தீமையே பயந்துவிடுகிறது. நல்லோரிணக்கம் கரும்பின் இன்சுவைபோன் றமைந்து நிலைத்த நன்மை செய்

கிறது. மேலோரால் எய்தும் இன்பத்துக்குச் சிறந்த உவமையேயன்றோ?

மேலோரைச் சார்வதால் உண்டாகும் இன்பப் பயனை மற்றொரு நாலடி கூறுமாறு:

*" நுண்ணுணர்வி னாரோடு கூடி நுகர்வுடைமை*
*விண்ணுலகே யொக்கும் விழைவிற்றால்—நுண்ணூல்*
*உணர்வில ராகிய ஊதிய மில்லார்ப்*
*புணர்தல் நிரயத்துள் ஒன்று."*

ஈண்டுப் பெரியோரைச் சார்வது விண்ணுலகத்தைச் சார்வதுபோன்று பேரின்பப்பயனை யளிக்குமென்றும், சிறியோரைச் சார்வது நரகத்தைச் சார்வது போன்று துன்பப்பயனையே யளிக்குமென்றும் உணர்த்தியமை காண்க பெரியோரால் எய்தும் அழியா இன்பத்துக்கு ஏற்ற உவமையே யென்க.

இனி, இங்ஙனம் அழியா இன்பத்துக்கு வழி காட்டும் 'பெரியோர்களைச் சேர்வதனால், துன்பமே மிகுக்கும் இப்பிறப்புத்தானும் வேண்டுவதேயாம்' என்று கூறி, மக்கட் பிறப்பின் சிறந்தபயனாக நல்லாரிணக்கத்தைக் குறிப்பிடுகின்றது.

*" இறப்ப நினையுங்கால் இன்னா தெனினும்*
*பிறப்பினை யாரும் முனியார்—பிறப்பினுள்*
*பண்பாற்று நெஞ்சத் தவர்களோ டெஞ்ஞான்றும்*
*நண்பாற்றி நட்கப் பெறின்."*

'பிறப்புப் பல துன்பத்துக்கு மிடமாயினும், பல நற்குணங்களும் பொருந்திய பெரியோருடன் கலந்து பழகி இன்புறல் கைகூடின், அது இன்பமாவதேயாம்' என்பது கூறப்படுமாறு. ஆகவே பிறப்பைப் பயனுடையதாக்குவது நல்லாரிணக்கமேயா மென்பது துணிந்துகொள்ளப்படுமன்றோ?

---

## கஉ. நட்பு நலம்

நட்பின் தன்மையை நாலடி எடுத்துக் கூறுவது சிறந்த முறையி லமைந்துள்ளது. மக்கட்டன்மையாம் கலந்து வாழும் இயற்கைக்கு ஆக்கமளிக்கும் இல்லற வாழ்க்கையை யன்றித் துறவறத்தையே சிறப்பாகக் கொண்ட நம் சமண் தமிழ்ப்புலவர்கள், கலந்து வாழும் கொள்கையதான நட்பின் மேன்மையைச் சிறந்தெடுத்துக் கூறுவது ஏற்புடைத்தே. அறிவோருடன் நட்பாடிப் பழகின், அறிவெல்லை விரிந்து வாழ்க்கைப்பயனைத் தலைக்கூட்டு மாதலின் நட்புச் சிறந்ததாகின்றது.

### நட்பின் தோற்றம்

இனி நட்பாவது யாது என்பதை நாலடி தெளியக் கூறுகின்றது. 'நட்பென்பது இருவர் சேர்ந்து பலநாள் பழகலால் உண்டாவதன்று' என்று நாலடி கூறுகிறது. பின் நட்பு உண்டாவது எப்படி? இருவர் மனம் ஒற்றுமைப்பட்டவிடத்து நட்புண்டாகின்றது. மன ஒற்றுமையற்றவர் நெடுநாள் கலந்து பழகினும் அவர் நண்பராகார். மனம் ஒற்றுமைப்பட்டோர் ஒரு கணமே கூடிப் பிரியினும், அவரிடம் நட்பு, அவ்விருவரும் உளராம் வரை, நிலைத்து நிற்கும்.

> " பலநாளும் பக்கத்தா ராயினும் நெஞ்சில்
> சிலநாளும் ஒட்டாரோ டொட்டார்—பலநாளும்
> நீத்தார் எனக்கை விடல்உண்டோ தந்நெஞ்சத்(து)
> யாத்தாரோ(டு) யாத்த தொடர்பு.''

என்று கூறப்படுவது காண்க.

ஈண்டு 'ஒட்டல்' 'யாத்தல்' என்ற சொற்கள் நோக்கத்தக்கன. ஒட்டல், இரு பொருள் இருமை கெட்டு ஒன்றுபடலன்றே? யாத்தலாவதும் இருமை கெட்டு ஒன்றுமாறு ஒன்றோடொன்று பிணிப்புண்டு நிற்றலன்றே?

இங்ஙனம் மன ஒற்றுமைப்பட்டோர் தம்முள் வேற்றுமையின்றிக் கலக்கப்பெற்று நண்பராயமைந்து ஒன்றுபடுவர்.

இனி, ஒரு கணந்தானும் கூடுதலும் நட்புக்கு வேண்டுவதன்று. கூடாவிடத்தும் மனம் ஒற்றுமைப் பட்டவழி, இருவரும் கேள்வியளவானே நண்பரா யமைவர். ஆகவே, மன ஒற்றுமையே நட்புக்குக் காரணமென்பதும், கூடிப் பழகல் காரணமாகாதென் பதும் உணரப்படும். பலநாள் நண்பர் போன்று கூடிப் பழகுவோரும் பகையாதலும், கேள்வியளவானே ஒருவர் மற்றொருவரோடு அன்பு செலுத்தி வாழ்தலும் எக்காலத்தும் உலகில் காணப்படும் இயற்கையாம். கேள்வியளவால் நட்புரிமை பூண்டொழுகிய தன்மை, நம் பண்டைத் தமிழரின் வாழ்க்கை முறையினை அறி தற்குக் கருவியாயமைந்த பழந்தமிழ்ச் சங்க நூலாகிய புறநானூற்றில் ஒரு புலவரின் செய்தியால் விளங்குவது ஈண்டுப் பெரிதும் உணர்தற்குரியது. அப்பெரியார் பாண்டி நாட்டில் பிசிர் என்னும் ஊரில் உறைந்த ஆந்தையார். அவர் தம் நண்பன் உறையூரைத் தலை நகராகக் கொண்டு ஆட்சிபுரிந்த கோப்பெருஞ்சோழன் என்பவன். இவ்விருவரும் ஒருவரையொருவர் நேரில் கண்டு பழகாராயினும், ஒருவர் தன்மையை ஒருவர் அறிந்து இருவர் மனமும் ஒன்றுபட்ட காரணத்தால்

நெருங்கிய நண்பராயினர். கோப்பெருஞ் சோழன் தன் வாழ்க்கையின் கடைப்பகுதியில் எல்லாவற்றையும் துறந்து வடக்கிருந்து உயிர்விடத் துணிந்தான். அங்ஙனம் வடக்கிருந்துழிக் கோப்பெருஞ் சோழன்,

"பிசிரோன் என்பஎன் உயிரோம் புநனே
செல்வக் காலை நிற்பினும்
அல்லற் காலை நில்லலன் மன்னே."

என்றும்,

"கேட்டன் மாத்திரை அல்லது, யாவதும்
காண்டல் இல்லாது யாண்டுபல கழிய
வழுவின்று பழகிய கிழமையர் ஆயினும்,
அரிதே தோன்றல் அதன்பட ஒழுகல்என் (று)
ஐயங் கொள்ளன்மின்; ஆரறி வாளிர்
இகழ்விலன், இனியன், யாத்த நண்பினன்,
புகழ்கெட வரூஉம் பொய்வேண் டலனே,
தன்பெயர் கிளக்கும் காலை, என்பெயர்
பேதைச் சோழன் என்னும், சிறந்த
காதல் கிழமையும் உடையன்; அதன்தலை,
இன்னதோர் காலை நில்லலன்,
இன்னே வருகுவன்; ஒழிக்க அவற்(கு) இடமே."

என்றும், பிசிராந்தையார் தன் செல்வக் காலத்து வாராராயினும், தான் இறக்குமிக்காலத்துக் கட்டாயம் வருவாரென்று கூறியதும், அங்ஙனம் அவன் கூறியவாறே பிசிராந்தையார் வந்தபொழுது, அதைக் கண்டு பொத்தியார் என்ற புலவர்,

"வருவன் என்ற கோனது பெருமையும்
அதுபழு தின்றி வந்தவன் அறிவும்
வியத்தொறும் வியத்தொறும் வியப்பிறந் தன்றே."

என்று கூறி வியந்ததும், வந்த பிசிராந்தையார் தன் உயிர் நண்பன் வடக்கிருந்து உயிர் விட நின்றமை

கண்டு தாமும் உயிர்விடத் துணிந்து, வடக்கிருந்தமை கண்ட கண்ணகனார் என்ற புலவர்,

" பொன்னும் துகிரும் முத்தும் மன்னிய
மாமலை பயந்த காமரு மணியும்
இடைபடச் சேய வாயினும் தொடைபுணர்ந்து
அருவிலை நன்கலம் அமைக்குங் காலை
ஒருவழித் தோன்றியாங்(கு) என்றும் சான்றோர்
சான்றோர் பால ராப
சாலார் சாலார் பாலரா குபவே." (கலம்—அணிகலம்)

என்று கூறியதும் ஈண்டுப் பெரிதும் வைத்துணரத் தக்கன.

இங்ஙனம் மன வொற்றுமை கொள்ளாத நட்பு நன்மையற்றுக் கெட்டொழியும் என்க.

" முற்றற் சிறுமந்தி முற்பட்ட தந்தையை
நெற்றுக் கண்டன்ன விரலால் ஞெமிர்த்திட்டுக்
குற்றிப் பறிக்கும் மலைநாட இன்னாதே
ஒற்றுமை கொள்ளாதார் நட்பு."

என்று நாலடி யுணர்த்துமாற்றைக் காண்க. ஈண்டு ஒற்றுமை மன ஒற்றுமையாம்.

### ஆராய்ந்து நட்புக்கோடல்

ஆகவே, ஒருவரோடு நட்புப் பூணுமுன் அவரைப் பல்லாற்றானும் நாடி, மன ஒற்றுமை கண்டவழியே நண்பினராகக் கொள்ளல்வேண்டும்.

" மரீஇப் பலரோடு பன்னாள் முயங்கிப்
பொரீஇப் பொருட்டக்கார்க் கோடலே வேண்டும்."

ஈண்டுப் பொரீஇ என்பது சிந்திக்கத் தக்கது. பொருவுதலாவது தம் மனவியற்கையும் அவர் மன வியற்கையும் பொருத்திப் பார்த்தல். அங்ஙனம்

பொருத்திப் பார்த்தவிடத்து இரண்டும் வேறுபட்ட தாயின், நட்புக் கொள்ளத்தக்க தன்றென்று உணரல் வேண்டும். ஏன்? கலந்தொழுகிப் பின் பிரிவது பெருந்துன்பஞ் செய்யும் ஆதலின். முன்காட்டிய நாலடிச் செய்யுள் மேலும்,

> "பரீஇ உயிர்செகுக்கும் பாம்பொடும் இன்னா
> மரீஇப் பின்னைப் பிரிவு."

என்று கூறுவது காண்க. இதனாலேயே நன்கு ஆராய்ந்து தெளியாமல் நட்புக்கொளல் கூடாதென்று வற்புறுத்திக் கூறத் தொடங்கி,

> "தெளிவிலார் நட்பிற் பகை நன்று."

என்று உணர்த்துகிறது. இதைப் பல உவமை கூறி விளக்குகின்றது அந்நாலடி.

> "சாதல்
> வினியா வருநோயின் நன்றால்—அளிய
> இகழ்தலிற் கோறல் இனிதே மற்(று)இல்ல
> புகழ்தலின் வைதலே நன்று."

ஈண்டு நீங்காத கொடிய நோயும், மனம் புண்பட இகழ்தலும், இல்லாத குணங்களை உளவாகப் புகழ் தலும் தெளிவில்லாத நட்புக்கு உவமையாய், அதன் இன்னாமை விளக்கி நின்றன. சாதலும், கொல்லலும், வைதலும் பகைக்குவமையாம். சாதலும், கொல்ல லும், வைதலும் வெளிப்படையாய்க் கேட்டைத் தந்தடங்கல் போலப், பகையும் வெளிப்படையாய்க் கேட்டைத்தந் தடங்கும். நீங்காத கொடிய நோய் ஒருவன்மாட்டு நிலைத்து நின்று துன்பம் பயக்கின்றது. மனம் புண்பட இகழ்ந்த இகழ்ச்சி, ஒருவன் உள் ளத்தே அவன் இறக்கும்வரை வடுப்போன்று நிலை

பெற்றுக் கனன்றெழுவதற்குக் காரணமாகின்றது. இல்லனவற்றைப் புகழ்ந்த புகழ்ச்சி, ஒருவனை மேலும் தன் தன்மையறிய வொட்டாவாறு தடுத்து, முடிவில் அடியோடு அவன் கெட்டொழிவதற்கும் காரணமாகிறது. இவை போன்றே தெளிவற்ற நட்பு எக்கணத்தும் துன்பம் வருவதற்குக் காரணமாய் நிற்கின்றது.

நண்பர் தன்மை

இனி, நண்பர் தன்மை என்ன வென்பதை நாலடி கூறுமாற்றைக் காண்பாம் :

" நறுமலர்த் தண்கோதாய் நட்டார்க்கு நட்டார்
மறுமையும் செய்வதொன் றுண்டோ—இறுமளவும்
இன்புறுவ இன்புற்(று)எழீஇ அவரோடு
துன்புறுவ துன்புறுக் கால்.''

நண்பர் ஒருவர் மற்றையாரது இன்பங் கண்டுழித் தாமும் இன்புற்றுச் சிறந்து, அவர் துன்புற்றவழித் தாமும் துன்புற்று ஆவன செய்யவேண்டும் என்று குறிப்பிடப்படுகிறது. இங்ஙன மாகாவிடத்து நட்பின் பயன்தான் என்ன? மனங்கலந்த நட்பு இங்ஙன மாதற் கிழுக்கென்னை? கூடி உரையாடிப் பழகுவோ ரெல்லாம் இங்ஙன மாவரோ? ஆகவே, உண்மை நட்பு என்பது இச்செய்கையாலேயே உணரப்படும் என்பது தெளிவிக்கப்பட்டது. நண்பன் வருத்தத்தைப் பகிர்ந்து கொண்டு நுகரும் நண்ப னியற்கையைச் சிறந்த ஓர் உவமை மூலம் உணர்த்துகின்றது நாலடி.

" வயாவும் வருத்தமும் ஈன்றக்கால் நோவும்
கவாஅன் மகற்கண்டு தாய்மறந் தாஅங்(கு)
அசாஅத்தான் உற்ற வருத்தம் உசாஅத்தன்
கேளிரைக் காணக் கெடும்.''

கருவாய்த்தவள் அது வாய்க்கப்பெற்றுழி மசக்கை நோயடைந்தும், பின் சுமந்து வருந்தியும், கடைசியாகப் பெறுங்காலும் பெரியதொரு துன்பத்தை யெய்தினும், பிள்ளையைக் கண்டவுடனே அத்துயரமனைத்தும் மறந்து இன்புறுகின்றாள். ஒருவன் ஏதேனும்பெருந் துன்ப முற்றுத் தனியே வருந்தியவழி, அவன் நலனை யறிய விழைந்து வினவும் நண்பனைக் காண்பானாயின், கண்ட அவனும் துயர் கெடப்பெற்று, நடுக்கடலில் புணை பெற்றவன்போல் இன்புறுகின்றான். பிள்ளையைக் கண்டவழித் துன்பமுற்றும் இல்லையா யொழிவது போல, நண்பனைக் கண்டவழி மற்றையோன் துன்பமும் இல்லையா யொழியும்; துன்பத்தை யுணரும் உற்ற நண்பனைக் கண்முன் பெற்றுவைத் திருத்தலின். தாயும் சேயும் கைம்மாறு கருதாது உதவிக் கொள்வதுபோல், மனம் ஒத்த நண்பரும் தமக்குள் கைம்மாறு கருதாத உதவிபுரிந்து வாழ்வதும் இயற்கை யன்றே?

இனி, நண்பன் துன்பங் கண்டுழி அது துடைத்தலில் முற்படும் நண்பன் இயல்பைக் கூறுமாறு காண்க:

"முட்டுற்ற போழ்தின் முடுகிஎன் ஆருயிரை
நட்டான் ஒருவன்கை நீட்டேனேல்—நட்டான்
கடிமனை கட்டழித்தான் செல்வுழிச் செல்க
நெடுமொழி வையம் நக.

"என் நண்பனுக்கு முட்டுப்பாடு வந்தபொழுது விரைந்து சென்று அவன் துன்பந் துடைத்தற் காரணமாக, அவனுக்கு ஆவன செய்யவேண்டும் கடமையில் நின்று, அவன்பொருட்டு தன் உயிரைக் கொடுத்தாயினும் வேண்டுவன செய்யேனேல், என் மனங் கலந்த

நண்பனுக்கு உரியளாய் நின்ற மனையாளின் கற்பை உலகம் சிரிக்குமாறு, வலியச் சென்று அழித்தான் செல்லும் தீக்கதியை நான் அடைக'' என்று ஒருவன் கூறுமுகமாக அமைந்த இந்நாலடி நண்பனின் கடமைப்பாட்டைத் தெளிய உணர்த்தியதன்றோ?

**நண்பர்மாட் டாகாத தீக்குணம்**

இனி, நண்பர்மாட்டு அமையக்கூடாத இரு குணங்களை நாலடி குறிப்பிடுகின்றது:

> "செய்யாத செய்தும்நாம் என்றலும் செய்வதனைச்
> செய்யாது தாழ்த்துக்கொண் டோட்டலும்—மெய்யாக
> இன்புறாஉம் பெற்றி இகழ்ந்தார்க்கும் அந்நிலையே
> துன்புறாஉம் பெற்றி தரும்.''

ஒருவர்பொருட்டுச் செய்யக்கூடாத ஒன்றைத் தாம் செய்து விடுவதாகக் கூறுவதும், ஒருவருக்குச் செய்வேனென்று வாக்களித்ததைச் செய்யாமல் காலங் கடத்தலும் நண்பரல்லார்க்கும் உணரப்பட்ட பொழுதே மனத்தகத்தே துன்பத்தை யளிக்குமன்றே? அங்ஙனமாக, நண்பர்மாட்டு இவ்விரு செய்கைகளும் துன்பத்தைத் தருதல் சொல்லவும் வேண்டுமோ? ஆதலின், இவ்விரு குணமும் நட்பாளுவார்மாட்டு நிகழலாகாவென் றுணர்க.

இனி ஆராய்ந்து நட்புக்கொண்ட மனமொத்தவராயினும், நண்பரா யொழுகுவோர்மாட்டு நண்பர் பிழை பொறுக்குங் குணம் இருக்கவேண்டும். உலகத்துள்ள மக்களெல்லாரும் ஒரு தன்மையரல்லராதலின், நண்பு கொண்ட ஒரு சிலருள்ளும் சிலர்மாட்டுப் பிழை காணல் இயல்பே. பிழை பொறுக்கும் குணமில்லாவிடத்து நட்பாளுந் தன்மை அவர்மாட்டு இல்லை

யென்றே கொள்ளப்படும். மக்கள் மாட்டுக் குணமும் குற்றமும் கலந்தே யிருக்குமாதலால், நண்பினர் பிழை பொறுக்குங் குணம் இன்றியமையாது வேண்டப்பட்ட தென்க. மக்கள் மாட்டுக் குணம் குற்றம் உள்ளன வாதலை உணர்த்தி நண்பாளும் முறையை நாலடி கூறு மாற்றைக் காண்க :

"நல்லா ரெனத்தாம் நனிவிரும்பிக் கொண்டாரை
அல்லா ரெனினு மடக்கிக் கொளல்வேண்டும்
நெல்லுக் குமியுண்டு நீர்க்கு நுரையுண்டு
புல்லிதழ் பூவிற்கு முண்டு."

மேலும் குணம் குற்றம் ஆராய்தல் நண்பு பூண் பதற்கு முன்னன்றிப் பின்னன்றாம்.

"குற்றமும் ஏனைக் குணமும் ஒருவனை
நட்டபின் நாடித் திரிவேனேல்—நட்டான்
மறைகாவா விட்டவன் செல்வுழிச் செல்க
அறைகடல்சூழ் வையம் நக."

என்பது காண்க.

"குணம் குற்றங்களை நட்டபின் நாடி உணர்ந்து ஒழுகினால், நண்பன் தன்னை உரியநண்பனாகக் கருதிப் பலரும் அறியக்கூடாத அரிய மறைப்பொருள்கள் (இரகசியங்கள்) தனித்துக் கூறியவற்றைப் பலருக்கும் அறிவித்த ஒருவன் எய்தும் கேட்டை யான் அடைவேனாக" என்று ஒருவன் கூற்றாகவைத்து இந் நாலடி கூறியது.

மேலும், நட்புத்தானும் வளர்ந்து மேம்படுவது பொறையுளதாய வழியேயாம் என்பதை "ஒருவர் பொறை இருவர் நட்பு" என்னும் பழமொழியும் விளக்கும்.

“ இறப்பவே தீய செயினும்தம் நட்டார்
பொறுத்தல் தகுவதொன் றன்றோ—நிறக்கோங்(கு)
உருவவண் டார்க்கும் உயர்வரை நாட
ஒருவர் பொறைஇருவர் நட்பு.”

என்றது நாலடி.

மேலும் நண்பர் செய்த குற்றந்தானும், தம்மாட்டு அன்புடையார் செய்த குற்றமாதலின், அவ்வன்புடைமையை நோக்க, அக்குற்றந் தோன்றல் இயற்கையன்றாம் என்க.

“ஏதிலார் செய்த திறப்பவே தீதெனினும்
நோதக்க தென்னுண்டாம் நோக்குங்கால்—காதல்
கழுமியார் செய்த கறங்கருவி நாட
விழுமிதாம் நெஞ்சத்துள் நின்று ”

என்று கூறுமாறு காண்க. ஆகவே, அவ்வன்புடையார் செய்த குற்றம் வாயால் சொல்லவும் தகா தென்பதும், அது நெஞ்சத்துள் கொண்டு அவர் அன்புடைமை நோக்கி அமைக்கப்படும் என்பதும் குறிக்கப்பட்டன.

இனி, நண்பரிருவருள் அறிவு சற்றே குறைந்தார் பிழைசெய்யின், மற்றையோர் அறிவு சான்றவராயின், அவர்மாட்டுப் பிழைகண்டு அத்தீமையை எடுத்துரைத்து அவரோடு தாமும் அறிவு குறைந்தவராய் ஒழுகல் கூடாது. இவர் அறிவின் மேம்பாட்டினராதற் கேற்பப் பொறுத்து மேம்படல் வேண்டுமென்க.

“ சால்பிற்குக் கட்டளை யாதெனில் தோல்வி
துலையல்லார் கண்ணும் கொளல்.”

என்றனர் வள்ளுவர்.

“ இலங்குநீர்த் தண்சேர்ப்ப இன்னு செயினும்
கலந்து பழிகாணுர் சான்றேர்—கலந்தபின்
தீமை எடுத்துரைக்குந் திண்ணறி வில்லாதார்
தாமும் அவரிற் கடை.”

என்றதும் காண்க. முன்னவர் அறிவின்மையாற் செய்ததைக் கண்டும், பின்னர் அறிவுடைய இவரும் தீமையெடுத்துரைப்பின், அறிவின்மையாற் செய்த அவர் பிழையினும், அறிவுடையார் செய்த, தீமையெடுத்துரைக்கும் பிழை பெரிதாகலின், அறிவு குறைந்த அவரினும் அறிவு நிறைந்த இவர் கடையர் என்க

இனி, நண்பர் பிழையைப் பொறுக்கவேண்டுமென்பதை வலியுறுத்தக் கூறப்படும் உவமைகள் பெரிதும் பொருத்தமாயமைந்து கழிபேரின்பம் பயக்கின்றன.

நீரை நிலங்களுக்குப் பாய்ச்சவேண்டி, அந்நீரை அணைகட்டித் தடுக்கும் உழவர், அங்ஙனம் அணைகட்டுங்காலத்து நீர் மிகுந்து வந்து அணையையழிப்பினும், அது நோக்கி அவர் நீரின்மேல் சினந்து அணைகட்டாமல் போய்விடுவரோ? மீண்டுமீண்டு வந்து அழித்தாலும் அணையை முயன்றே கட்டி முடிப்பர் அன்றே?

தீ ஒருவனது வீட்டையும் வீட்டிலுள்ள பல பொருள்களையும் அழித்து விடுகின்றது. அங்ஙனம் அழித்தமை நோக்கி, அத்தீயை வெறுத்துத் தீ வேண்டாம் என்று நீக்கும் மக்களும் உண்டோ? மற்று, நாள்தோறும் அத்தீயை விரும்பிக் கொண்டே உணவு சமைத்து உண்டு இன்புறுவரன்றே?

ஒருவன் ஒரு செயலில் மனமொன்றுபட்டு ஈடுபட்டு முயன்றுகொண்டிருக்கும் பொழுது, தவறுத

லால் அவன் கை கண்ணிற் பட்டுக் கண்ணுக்கு நோயைக் கொடுத்து விடுதலும் உண்டன்றே? அது காரணமாக, அவன் அக் கை வேண்டாமென்று சினந்து நீக்கிவிடுவனோ?

i. "செறுத்தோ றுடைப்பினும் செம்புனலோ டூடார்
மறுத்தும் சிறைசெய்வர் நீர்நசைஇ வாழ்நர்."

ii. "நல்லிற் சிதைத்ததீ நாடொறும் நாடித்தம்
இல்லத்தி லாக்குத லால்."

iii. "விண்குத்து நீள்வரை வெற்ப களைபவோ
கண்குத்திற் றென்றுதங் கை."

என்பன காண்க.

இம் மக்கள் போன்றே ஒருவன் தன் நண்பனிடம் தவறு கண்டவிடத்துப் பொறுத்து நண்புரிமைக்குப் பழுது வராமல் நட்பை வளர்க்கவேண்டும் என்க.

மூவகை நண்பர்

இனி, நண்பருள் மூவகையர் உள்ளாராக நாலடி கூறுகிறது; எந்நாளும் உதவிசெய்து கொண்டிருந்தாலே நண்பராவோர், இடையிடையே உதவிசெய்ய நண்பரா யமைவோர், ஒருகால் உதவிசெய்யினும் நண்பரா யொழுகுவோர் என.

"கடையாயார் நட்பில் கமுகனையர் ஏனை
இடையாயார் தெங்கின் அனையர்—தலையாயார்
எண்ணரும் பெண்ணைபோன்(று) இட்டஞான் றிட்டதே
தொன்மை யுடையார் தொடர்பு."

கமுகு நாடோறும் நீர்விட்டுப் பாதுகாத்தாலே பயன் கொடுப்பதும், தென்னை இடையிடையே நீர் பாய்ச்சப் பயனளிப்பதும், பனைவிதை ஊன்றும்

காலத்துப் பதம்பெற ஊன்ற வேண்டுவதன்றிப் பின் ஏதோருதவியும் பெருமலே பயன்கொடுப்பதும் உணர் தற்குரியன.

நல்ல நட்பும் தீய நட்பும்

ஆராய்ந்து நட்புக்கொண்டபின் தோன்றிய அந் நட்பு எக்காலமும் குறைதலாகாது. நட்புப் பெருகிப் பின் குறைதல் நட்பாளும் அறிவோரிடம் காணப் படாது; அவர் ஆராய்ந்தே நட்புக்கொள்வா ராதலின். மிகுந்து குறைதல் நட்பின் இயற்கை யன்றெனக. நட்பென்பது தோன்றிய காலத்து இயற்கையினின்றும் குறையாது மேன்மேலும் வளர்ந்து செல்லும் தன் மைத்து. இதையொரு நாலடி குறிக்குமாற்றைக் காண்க:

"கோட்டுப்பூப் போல மலர்ந்துபின் கூம்பாது
வேட்டதே வேட்டதாம் நட்பாட்சி."

மரத்திற் பூக்கும் பூக்களெல்லாம் பூத்தபின் கீழே உதிரும்வரை கூம்பாமலே இருந்தொழிகின்றன. இதே போன்று இருவர்மாட்டு நட்பு மலர்ந்து விளக்கமுற்ற தாயின், அந்நட்பு அவர் இறக்கும்வரை கூம்பலாகாது. இதுவே உண்மை நட்பாம் என்றுணர்த்தப்படுகின்றது. மற்றுச் சிறியோர் பலர் நண்பர்போன் றொழுகிப் பின் நட்புக் குறையப்பெறுகின்றனர். அஃது நட்பாகாது. மேற்கூறிய நாலடிச் செய்யுள், தாமரை அல்லி முதலிய நீர்ப்பூக்களை அந்நட்புக்கு உவமை கூறுகின்றது.

"தோட்ட
கயப்பூப்போல் முன்மலர்ந்து பின்கூம்பு வாரை
நயப்பாரும் நட்பாரும் இல்."

தாமரை அல்லி முதலிய நீர்ப்பூக்கள் முதலில் மலர்ந்து பின் முறையே இரவு வரவும், பகல் வரவும்

குவிகின்றனவன்றே? இங்ஙனம் நட்புரிமை பூண்டோர் போன்றொழுகிச் சுருங்குவோர் உலகில் சிறந்த நண்பரைப் பெறுவதும் இல்லை என்று அந்நாலடி கூறுகிறது. ஆகவே, நட்பு தோன்றிய இயற்கையினின்றும் குறையாது மேன்மேலும் வளர்ந்துகொண்டுபோகும் இயல்பிற்றும் என்பதை ஒருவன் உணரவேண்டும்.

இருவர் ஓரிடத்திருந்து கூடிப் பழகலாலேயே நட்பமையாதாகையால், பலரையும் தாங்கும் நல்லியல்பே இயற்கையாக வாய்க்கப்பெற்ற பெரியோர் சேய்மையி லிருப்பினும் அவர் நட்பைப்பெற்றுப் பயனடைய வேண்டுமேயொழிய, நெருங்கி யிருப்பினும் கீழோர் நட்புக் கொள்ளத்தக்கதன்றும் என்க.

> " நாய்க்கால் சிறுவிரல்போல் நன்கணிய ராயினும்
> ஈக்கால் துணையும் உதவாதார் நட்பென்னும்
> சேய்த்தானும் சென்று கொளல்வேண்டும் செய்விளைக்கும்
> வாய்க்கால் அனையார் தொடர்பு.''

ஈண்டுத் தன்னோடுடனுறையும் கீழோர் "நாய்க்கால் சிறுவிரல்போல் நன்கணியர்'' என்று கூறப்படுகின்றார். உவமையின் தன்மையை நோக்குக. நாயின் காலில் விரல்கள் இடைவெளியின்றி அமைந்திருக்கும். ஒரே ஊரில் உள்ள கீழோரும் மிக நெருங்கிப் பழகத் தக்கவராகவன்றோ அமைகின்றார்? தொலைவிலுள்ள மேலோர்க்கு வாய்க்கால் உவமை கூறப்படுகிறது. வாய்க்கால்தொலைவிலிருந்தாலும் அது தன்மாட்டுள்ள நிறைநீரைப் பல சிறு கால்வாய்களுக்கும் சென்று கொடுத்து அதன் மூலம் பல விளை நிலங்களைக் காப்பாற்றுகின்றது. மேலோரும் தொலைவிலிருந்தாலும் தாமே விரும்பிச்சென்று பலர்க்கும் உதவுவாரென்க. அங்ஙனமாக, நண்பராயமைந்தோர் அம்மேலோரால்

பயனடைதலைச் சொல்லவும் வேண்டுமோ? வாய்க்கால் தன்னிடத்திலுள்ள எல்லா நீரையும் நிலங்களுக்குக் கொடுத்துதவுதல் போலப், பெரியோர் தம்மாட்டுள்ள பொருளை வரையாது கொடுக்கக், கீழோரோவெனின், ஈயின் காலவ்வளவு சிறு பொருளையுந் தானும் பிறர்க்குக் கொடுக்க முற்படார் என்க.

இனி, நல்லோர் நட்பையும் அல்லோர் நட்பையும் சிறந்தெடுத்து விளக்கும் உவமைகள் பல. அவற்றுள் இரண்டை ஈண்டுக் காண்க:

i. "நளிகடல் தண்சேர்ப்ப நாள்நிழல் போல
விளியும் சிறியவர் கேண்மை—விளிவின்றி
அல்கு நிழல்போல் அகன்றகன் றோடுமே
தொல்புக ழாளர் தொடர்பு."
(நாள்நிழல்=காலைநிழல். அல்குநிழல்=மாலைநிழல்)

ii. "கருத்துணர்ந்து கற்றறிந்தார் கேண்மைஎஞ் ஞான்றும்
குருத்திற் கரும்புதின் றற்றே—குருத்திற்(கு)
எதிர்செலத் தின்றன்ன தகைத்தரோ என்றும்
மதுர மிலாளர் தொடர்பு."

நண்பரோ டுண்டல்

நண்பர் வீட்டில் அவரோடு மனங்கலந் துண்ணும் இன்பம் பல நாலடியில் சிறக்கக் காட்டப்படுகின்றது:

i. "உப்பிலிப் புற்கை உயிர்போல் கிளைஞர்மாட்(டு)
எக்கலத் தானும் இனிது,"

ii. "அபராணப் போழ்தின் அடகிடுவ ரேனும்
தமராயார் மாட்டே இனிது,"

iii. "தன்போல்வார் இல்லுள் தயங்குநீர்த் தண்புற்கை
என்போ டியைந்த அமிழ்து."

என்பன காண்க.

(புற்கை-காஞ்சி; கலம்-ஏனம்; அபராணம்-பிற்பகல்; அடகு-கீரை)

## கங. உலகியல் உரைத்தல்

மக்கள் அறவாழ்க்கையே மேற்கொண்டு வாழ வேண்டுமென்று கூறிச்செல்லும் நாலடி, பலவிடங்களில் உலகியல் ஒழுக்கத்தையும் எடுத்துக் கூறிச் செல்கின்றது. மற்றெவ்வகைச் சிறப்பெய்தினும் உலகியல் அறியாமை பொருந்தின், அது பெரியதொரு பழியாம் என்று கூறுகின்றது நாலடி.

**உலகிய லறிவு**

> " குலந்தவங் கல்வி குடிமைமூப் பைந்தும்
> விலங்காமல் எய்தியக் கண்ணும்—நலஞ்சான்ற
> மையறு தொல்சீர் உலக மறியாமை
> நெய்யிலாப் பாற்சோற்றி னேர்."

என்று உணர்த்துமாறு காண்க. ஒருவன் உயர் குலத்திற் பிறந்தவனாயினும், மேலான தவவழியில் நிற்பவனாயினும், கற்றுவல்ல அறிஞனாயினும், பிறந்த உயர் குலத்துக் கேற்ப நல்லொழுக்கம் பொருந்தியவனாயினும், வயது முதிர்ந்த பெரியோனாயினும், அவன் உலகியல் அறிந்து உலகத்தோடொட்ட ஒழுகும் சிறந்த அறிவைப் பெறானாயின், அவன் உலகத்துக்குப் புறம்பானவனாகக் கருதப்படுவான். உலகியலறிவற்ற மற்றை நலங்கள் நெய்யற்ற பாற்சோற்றுக்கு ஒப்பாகக் கூறப்படுகின்றன. (பால்சோறு = பாயசம்)

**உலகியற்கை**

இனிப் பொதுவான உலகியற்கையை ஒரு நாலடி எடுத்துக் காட்டுமாறு:

> " உடைப்பெருஞ் செல்வரும் சான்றோருங் கெட்டுப்
> புடைப்பெண்டிர் மக்களும் கீழும் பெருகிக்
> கடைக்கால் தலைக்கண்ண தாகிக் குடைக்கால்போல்
> கீழ்மேலாய் நிற்கு முலகு."

'உலகில் செல்வப்பயன் பெற்ற மேலோரும் அறிவாலும் குணத்தாலும் மாட்சிமைப்பட்ட பெரியோரும் தாழ்மையுறலும், யார்க்கும் பெண்டிராய் உரிமை பூண்டு நிற்கும் பரத்தையரும், கீழோரும் உயர்ச்சியுறலும் உண்டு என்பதை யொருவன் உணர வேண்டும் என்று உணர்த்துகிறது இந்நாலடி. ஈண்டுக் கூறப்படும் உவமை குடைக் காம்பு. குடையை விரியாமே கையிற் கொண்டு நடந்துசெல்லுங்கால், அக்குடையின் காம்பாகிய மூங்கிற்றண்டின் அடி, கைப்பக்கத்தே பொருந்த, நுனி தரையிற் பொருந்துவதே இயற்கை. இனி, அக்குடையை விரித்துப் பிடிக்குங்கால், கீழிருந்த நுனிப்பக்கம் நந்தலைக்கு மேற்சென்று மேலிடத்தைப் பெற்றுவிடுகிறது. இக்குடைக் காம்பு, மேலோர் தாழக் கீழோர் உயரும் உலகிற்கு உவமையாயமைந்தது பொருத்தமேயன்றோ?

இனி, உலகில் மற்றோர் இயற்கையும் எடுத்துக் காட்டப்படுகிறது. உலகில் மக்கள் பலர் தம் மனத்தில் ஒன்றை வைத்து, அம் மனத் தன்மை வெளிப்படாவாறு அம் மனத்துக்கு நேர் எதிர்மாறான பல செயல்களைச் செய்து நடிக்கின்றனர்.

> " யாஅர் ஒருவர் ஒருவர்தம் உள்ளத்தைத்
> தேரும் துணைமை யுடையவர்—சாரல்
> கனமணி நின்றிமைக்கும் நாடகேள் மக்கள்
> மனம் வேறு செய்கையும் வேறு.''

ஒருவர் மற்றவர் மனத்தை அவரது வெளிப்பகட்டான செயல் கொண்டே தெளியாமல், அவர் மனத்தைப் பலவகையிலும் நுண்ணிதின் ஆராய்ந்து தெளிய வேண்டுமென்றும், அங்ஙனம் ஆராயினும், தெளிதல் அரிது என்றும் உணர்த்தப்பட்டது காண்க. இங்ஙனம்

தம்மைச் சூழ்ந்துள்ளாரை நுண்ணிதின் ஆராய்ந்து தெளிந்தாலே, அவர் உலகியலில் பலரிடையில் மேன்மையுறல் முடியும் என்க.

பலரோடு பழகுமுறை

அங்ஙனம் தம்மைச் சூழ்ந்தார் பலரையும் உண்மையா யுணர்ந்தவழி, அவ்வவர் மனநிலைக்குத் தக ஒருவன் நடக்கவேண்டும்.

> " மெல்லிய நல்லாருள் மென்மை அதுவிறந்து
> ஒன்ஞருள் கூற்றுட்கு முட்குடைமை—எல்லாம்
> சலவருள் சாலச் சலமே நலவருள்
> நன்மை வரம்பாய் விடல்.''

மெல்லியல்பு வாய்ந்த மாதர்களிடம் ஒருவன் வன்மை காட்டாது மெல்லியல்பு காட்டியே ஒழுக வேண்டும். தமக்குப் பகையாயினுர் மாட்டு யமனும் அஞ்சத்தக்க வன்மையொடு மேற்பட வேண்டும். வஞ்சகரிடத்துத் தாமும் கரவாய் ஒழுகல்வேண்டும். நல்லோர்மாட்டுத் தானும் நன்மையையே புரிந்து ஒழுகல் வேண்டும். மகளிர், பகைவர், வஞ்சகர், நல்லோர் என்ற இந் நால்வரிடத்தும், மென்மை, வன்மை, வஞ்சகம் நன்மை என்ற நான்கும் இருத்தலின், இந் நான்கு குணங்களிலும் அவரின் மேம்பட்ட மென்மையும், மேம்பட்ட வன்மையும், மேம்பட்ட கரவும், மேம்பட்ட நன்மையும் தான்கொண்டொழுகல் வேண்டும் என்றுணர்த்தப்பட்டவாறும். அந்நான்கு குணங்களிலும் நிறைவைக் கொண்டு அக் குணங்களில் அவரினும் மிகுந்து தோன்றவேண்டுமென்றுணர்த்தவே 'வரம்பாய் விடல்' என்று கூறப்பட்டதென்க.

இக் கருத்தைக் கொண்டன்றோ மற்றொரு நாலடி,

" ஒக்கிய ஒள்வாள்தன் ஒன்னார்கைப் பட்டக்கால்
ஊக்க மழிப்பதூஉம் மெய்யாகும்—ஆக்கம்
இருமையும் சென்று சுடுதலால் நல்ல
கருமமே கல்லார்கண் தீர்வு."

என்று கற்றறியாக் கயவராம் தீயோர்க்கு ஆக்கத்திற்கான உதவியாம் நன்மை செய்யலாகா தென்கிறது. போர்க்களத்தே மாற்றாரோடு பொருகின்றானொருவன், அங்ஙனம் பொருகிற விடத்துத், தன் பகைஞனை அழித்தற்குத் தான் ஓங்கிய வாளானது, தான் நெகிழ்ந்தமை காரணமாகத் தன் பகைவன் கைக்குப் போய் விட்டால், அவ்வாளே தன் ஊக்கத்தையும் உயிரையும் அழிக்குமன்றே? இங்ஙனமே கற்றறிவில்லாக் கயவர்க்கு அவர் ஆக்கத்திற்கான உதவியை ஒருவன் செய்யின், அவ்வாக்கம்பெற்ற அக்கயவர் மேலும் தீமையே மிகுத்தலின், அவர்க்கு உதவி செய்தார்க்கு இம்மையில் பழியும் மறுமையில் துன்பமும் எய்துதலின், இருமையிலும் தீமைதரும் என்று உணர்த்தப் பட்டது.

ஆதலின், தான் புரிவது நல்லதே யாயினும் அதையும் இடம் நோக்கிப் புரியவேண்டும் என்றும், தீயோர்க்கு நன்மை கூடாதென்றும் உணர்த்தப் பட்டன. இது நோக்கி யன்றோ வள்ளுவரும்,

" நன்றாற்ற லுள்ளும் தவறுண்(டு) அவரவர்
பண்பறிந் தாற்றாக் கடை."

என்று கூறிப், பிறர் தகுதியறிந்து செய்யாவிட்டால் நன்மை செய்தாலும் தவற்றின்பாற் படும் என்று கூறினர்.

இங்ஙனம் உபாயத்துடன் வாழ்தலே தக்கதாம் என்றுணர்த்தி மற்றொரு நாலடி,

> "யாஅர் உலகத்தோர் சொல்லில்லார் தேருங்கால்
> யாஅர் உபாயத்தின் வாழாதார்—யாஅர்
> இடையாக இன்னாத தெய்தாதார் யாஅர்
> கடைபோகச் செல்வமுய்த் தார்."

என்று கூறுவதாயிற்று. எவ்வகைப்பட்ட நற்குணம் பொருந்திய மேலோரையும் குறை கூறுவோரும் உலகில் இருக்கின்றனர். எவ்வகைப்பட்ட செல்வம் பொருந்திய மேலோரும் இடையிடையே துன்பத்தால் வருந்தாமலிருத்தல் இல்லை. எவரும் முற்றச் செல்வத்தை ஈட்டியோராதல் இல்லை. உலகியல் இங்ஙனமாதலின், பிறர் கூறும் பொய்ம்மொழிக்கு அஞ்சாமலும், உபாயத்தை மேற்கொண்டும், வருந் துன்பத்திற்கு அஞ்சாமலும், அளவுகடந்த அவாவே கொண்டு அலையாமல், முயன்று செல்வத்தை ஈட்டி, மனமமைந்து வாழவேண்டு மென்பது குறிக்கப்பட்டது.

இனிப் பலரோடும் பழகுமிடத்துக் கைக்கொள்ள வேண்டும் சில இயற்கைகளை நாலடி கூறுகிறது. தம்மை விரும்பும் மக்களைக் கண்டால், தாம் அவரினும் முற்பட்டு அவரைக் கெழுதகைமையுடன் விரும்பிப் பாராட்டிக் கலந்து நண்புபூண் டொழுகவேண்டுமென்றும், தம்மை இகழ்ந்தொதுக்குவாரைக் கண்டால், தாம் அவரினும் முற்பட்டு அவரை இகழ்ந்தொதுக்கி மேம்பட்டுச் சிறக்க வேண்டு மென்றும் எடுத்துக் கூறுகின்றது நாலடி.

தம்மை விரும்பியோரைத் தாமும் முற்பட்டு விரும்ப வேண்டும் என்ற சிறந்த நல்லியல்பை, அதன் எதிர்மறை இயல்பின் கொடுமையை எடுத்துக்காட்டி உணர்த்துகிறது.

" விழைந்தொருவர் தம்மை வியப்ப ஒருவர்
விழைந்நிலேம் என்றிருக்கும் கேண்மை - தழங்குகுரல்
பாய்திரைசூழ் வையம் பயப்பினும் இன்னாதே
ஆய்நல மில்லாதார் மாட்டு."

வியத்தலாவது பெரியோராகக் கொண்டு மேம்பாடு செய்து ஒழுகல். அங்ஙனம் தம்மை உயர்ந்தோராகக் கருதி அன்பும் பணிவும் பூண்டு ஒழுகுவோரிடத்தில், அங்ஙனமே தாமும் அன்புபூண் டொழுகாமல், தம்மைத்தாமே வியந்து, பிறரை ஒருபொருளாகக் கருதாதுவிடின், அவர் உலக நலங்களை நுனித்தறிந்து பயன்கொள்ளாப் பேதையரே யாவர் என்பது கூறப்பட்டது. ஆதலின், "ஆய் நல மில்லார்" என்று கூறப்பட்டனர். உலகமே வருவதாயிருந்தாலும், பிறரை ஒருபொருளாகக் கருதாது தன்மதிப்பே கொண்டு திரியும் உலகியலறியா இக்கயவரைச் சேரா தொழிக என்று கூறப்பட்டது அத்தகைய நட்பைக் கொள்வோன் மகனுந்தன்மை கெட்டொழிந்தவனே யாவனன்றோ?

இனித், தம்மை இகழ்வாரைத் தாமும் இகழ்ந் தொதுக்கி நடக்கும் இயல்பினை வற்புறுத்தும் நாலடியைக் காண்க:

" தம்மை இகழ்வாரைத் தாம் அவரின் முன்இகழ்க
என்னை அவரோடு பட்டது—புன்னை
விறற்பூங் கமழ்கானல் வீங்குநீர்த் தண்சேர்ப்ப
உறற்பால யார்க்கும் உறும்."

உலகில் பலதிறப்பட்ட மனநிலையுடையோரும் உளராதலால், சிலர் மதியாது வெறுத் தொதுக்கலும் உண்டன்றே? அவ்விடங்களில் 'அவரினும் முற்பட்டு அவரை வெறுத்தொதுக்கி மேம்படுக' எனக் கூறிய

வாரும். 'உனக்கும் அவர்க்கும் உள்ள தொடர்புதான் யாது?' என்று கேட்கின்றது. அவ்வவர்க்கு வரவேண்டு வன வந்தே தீருமாதலால், ஒருவர் தம்மை அங்ஙனம் இகழ்ந்தொதுக்கினால், 'நாம் எளியேமாதலால் நம்மை இகழ்ந்தொதுக்கும் இவ்விழிவைப் பொருட்படுத்தாது பொருந்தி வாழ்தலே முறை என்று கருதற்க' என்று குறிப்பிடுகின்றமையை ஓர்க. அவரிடம் பொருந்தி யொழுகி மகனாந் தன்மை அழிந்து நிற்றல் கூடாதென் பது வலியுறுத்தப்பட்டது. மேலும், இகழ்வாரைச் சேர்ந்தொழுகின், மேலும் எளியனாக நினைக்கப்பட்டு, மேலும் மேலும் இகழ்ந்தொதுக்கவே இடந்தரு மன்றோ?

இனி, நண்பராயொழுகியோர் மனம் மாறுபட்டு நட்பு மாறி ஒழுகுவராயின், அவரை வெறுத்து நீங்காது அந்நண்பானிடத்து நட்புக் கெட்டமையை வெளிக் காட்டாமல் மனத்தகத்தே கரந்து வைத்து, அவரை நண்பரைப்போலவே கொண்டொழுகவேண்டும் என்று கூறுகிறது நாலடி. இதுவே நிறையுடை மனத் தோர் செயலாகும். அங்ஙனமாகாது, தாமும் மனம் மாறுபட்டு நட்புக்கெட்டமையை வெளிக்காட்டி யொழுகின், இவரும் அவரைப் போன்றே அறிவற்ற வரே யாவரன்றோ? நட்புப் பூண்டு பின் பிரிதல் உல கியற்கை யன்றென்க. அது உலகியல் அறியா, நட்பா ளும் தன்மையறியா மடவோர் செயலாமென்க. அந் நாலடி வருமாறு:

> "தமரென்று தாங்கொள்ளப் பட்டவர் தம்மைத்
> தமரன்மை தாமறிந்தா ராயின்—அவரைத்
> தமரினும் நன்கு மதித்துத் தமரன்மை
> தம்முள் அடக்கிக் கொளல்."

'நண்பு மாறியவர்களை நண்பரினும் சிறக்கக் கலந்து பழகி, நட்பு வேறுபட்டமையை மனத்தகத்தே மறைத்து வைக்க' எனக் கூறியவாறு காண்க. இதுவே சிறந்த உலகியலறிவென்க.

இனிக் கற்றறியா மாக்கள் செல்வமும் பிறவலியும் பெற்றிருப்பின், சில தொழில் பொருட்டு அவர் பின் சென்று காரியத்தை முடித்துக்கோடல் உலகியல் உணர்ந்த உரவோர்தம் அறிவுடைச் செயலாம்.

"கரும வரிசையால் கல்லாதார் பின்னும்
பெருமை யுடையாரும் சேறல்—அருமரபின்
ஓத மறந்றும் ஒலிகடல் தண்சேர்ப்ப
பேதைமை யன்(று)அ (து)அறிவு."

பெரியோர் அங்ஙனம் கற்றறியார் பின் சென்று நிற்றலும் சில காரியத்தின் பொருட்டே யென்றுணர்த் தப்பட்டமை காண்க. கற்றறியா மாக்களின் உதவி தாம் மேற்கொண்ட சிறந்த காரியத்திற்குத் துணையா யமையின், கற்றறியாக் கீழோரைத் தாமடுத்தல் தமக்கு மானக் கேடாமென்று கருதிச், சிறந்த காரியத்தின் பயனை யடையாது விடுத்தல் அறிவுடைமை யன் றன்றே? இதை வலியுறுத்தவே எதிர்மறை முகத் தானும் உடன்பாட்டு முகத்தானும் "பேதைமை யன்று; அது அறிவு" என்று கூறப்பட்டதென்க. மானத்தையே அளவுகடந்து முடிந்தபயனாகக்கொண்டு அரும்பெரும் நற்காரியங்களை நெகிழவிடல் கூடா தன்றே? இக் கருத்தே கொண்டு மற்றொரு நாலடியும்,

"உறுபுலி ஊன்இரை இன்றி ஒருநாள்
சிறுதேரை பற்றியும் தின்னும்—அறிவினால்
கால்தொழி லென்று கருதற்க கையினால்
மேல்தொழிலும் ஆங்கே மிகும்."

என்று கூறுமாறு காண்க.

பெரியோர் தமக்குச் சிறு தொழில் கிடைத்தாலும், 'இது நமக்கேற்ற பெருந்தொழி லன்மையின் வேண்டுவ தன்று' என்று ஒழிந்து சோம்பியிராது, அச்சிறு தொழிலையும் மேற்கொண்டு செய்யின், காலப்போக்கில் அச்சிறு தொழிலாலும் அவர் மேன்மை வெளிப்பட்டு, மேல் அரும்பெருந் தொழில் செய்தற்கு வாய்ப்பு ஏற் படுமன்றே? அங்ஙனமாகாது வாளாவிருப்பின், அவர் பெருமை வெளிப்படாமலும், அவர் பல தொழில் களில் பயிற்சிபெற்று முதிராமலும், வீணே யொழிந்த வராவரன்றே? ஈண்டுக் காட்டப்பெற்ற உவமையுங் காண்க. பசி பெருகிய புலி, 'நாம் பெரிய விலங்கு களைக் கொன்று தின்னவேண்டுமே யொழிய, இங்குக் காணப்படும் புல்லிய தேரைகளைப் பற்றித் தின்னல் நமக்குத் தகா'தென்று நினைப்பின், அது உயிர்துறந்து மடிந்தொழிய வேண்டுவதேயன்றே? அதைப் பாராட் டாது அப்புலி அப்பொழுது தான் கண்ட தேரையை யேனும் பற்றித் தின்பதாலேயே, இறவாதிருந்து, பின் பெரிய விலங்குகளையும் பற்றித் தின்று பலநாள் வாழ் தல் இயலுகின்றது. சிறு தொழிலை இகழ்கின்றமை யைக் குறிக்கவேண்டி, அது "கால்தொழில்" (காலால் செய்யத்தகும் சிறுவேலை) என்று குறிப்பிக்கப்பட்டது.

இனி, உலகில் பலரொடுங் கலந்து வாழும் கடப் பாடு பூண்ட மக்கட்குக் கூடாத இரு குணங்களை ஒரு நாலடி கூறுகின்றது.

> "செய்யாத செய்துநாம் என்றலும் செய்வதனைச்
> செய்யாது தாழ்த்துக்கொண் டோட்டலும்—மெய்யாக
> இன்புறூஉம் பெற்றி இகழ்ந்தார்க்கும் அந்நிலையே
> துன்புறூஉம் பெற்றி தரும்."

உலகில் பலர் தம்மால் செய்ய இயலாதவற்றைப் பிறருக்காகத் தாம் மேற்கொண்டு செய்து முடிப்பதாகச் சொல்லளவில் கூறிப் பிறரை இன்புறுத்திப் பின் தமக்கியலாமையின், அதைச் செய்யாது ஒழிகின்றனர். மற்றுஞ் சிலர், தம்மால் இயலுங் காரியங்களைப் பிறர்க்குச் செய்வதாக உறுதிகூறி, அங்ஙனம் கூறிய காரியத்தைத் தாங்கூறியவாறு காலத்தில் செய்து உதவாது, நெகிழ்ந்த மனத்தினராய், அக்காரியம் செய்து முடித்தற்குக் காலங் கடத்துகின்றனர். இவ்விரு வகையாரையும் உலகம் விரும்பிக்கொள்ளாது வெறுத்து நீக்கும் என்பது கூறப்படுகிறது. ஆதலின், செய்ய இயலாதவற்றைச் செய்வதாகக் கூறலும், செய்வதாகக் கூறியதைச் செய்யாது காலந்தாழ்த்தலும் உலகில் பலராலும் நண்பராக விரும்பப்பட நினைப்பவன் செய்யலாகாதன என்று உணர்த்தப்பட்டன.

பலரோடுங் கலந்து வாழும் இயற்கைக்கு ஆகாத மற்றொரு தீக்குணத்தையும் நாலடி குறிப்பிடுகிறது.

> "இசையா ஒருபொருள் இல்என்றல் யார்க்கும்
> வசையன்று வையத் தியற்கை—நசை அழுங்க
> நின்றோடிப் பொய்த்தல் நிரைதொடீஇ செய்ந்நன்றி
> கொன்றாரில் குற்ற முடைத்து."

தம்மிடத்து ஒரு பொருளை ஒருவன் கேட்பானாயின், அதைத் தாம் கொடுக்கமுடியாதவிடத்து "இல்லை" என்று சொல்லிவிடுதல் இயற்கையாம். இதனால் கொடாத அவருக்கு வருவதொரு பழியும் இல்லையாம். மற்று, ஒருவன் ஒரு பொருளைக் கேட்டபொழுது, "தருகிறேன்" என்று சொல்லிப், பின் உரிய காலத்தில் கொடாது, "நாளை, நாளை" என்று கூறியே

நாளைக் கடத்திக்கொண்டு, முடிவில் தம்மால் இயலாமையாலோ பிற காரணங்களாலோ "இல்லை" என்று கூறிப் பொய்த்தல் பெரியதொரு பழியாம் என்க. இப் பழியின் மிகுதி தோன்றவே "செய்ந்நன்றி கொன்றாரிற் குற்றமுடைத்து" என்று கூறப்பட்டதென்க.

"எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு."

என்றபடி, செய்ந்நன்றி கோறலே எவ்வகைப்பட்ட தீவினையினும் கொடிய தீவினையாகவே, நின்றோடிப் பொய்த்தலும் அத்தீவினையோடு ஒத்த கொடுமையதாயிற்று. "செய்ந்நன்றி கோறலும்" "நின்றோடிப் பொய்த்தலும்" தோன்றுவது ஒரே வகைப்பட்ட மனப்பாங்குடையவரிடத்தேயாம் என்க. ஒருவன் தம்மிடம் வந்து ஒரு பொருளைக் கேட்டபின் "இல்லை" என்று சொல்லின், பிறன் மனம் வருந்துமே என்ற போலிக் கண்ணோட்டமே கருதாது, அது தம்மால் இயலுமா இயலாதா வென ஆராய்ந்து, இயலாதாயின் "இல்லை" என்று சொல்லி விடுவதே அறிவுடையார் செயலாம் என்று குறிக்கப்பட்டதென்க.

இங்ஙனம் கூறியவாறு உலகியலில் பலருடனும் கலந்து வாழும் கட்டுப்பாட்டினை மறந்து, பலர்க்கும் பகையே பூண்டு நிற்போர் மக்கட்பண்பற்ற கயவரேயாவர்.

"உளநாள் சிலவால் உயிர்க்(கு) ஏமம் இன்றால்
பலர்மன்னும் தூற்றும் பழியால்—பலருள்ளும்
கண்டாரொ டெல்லாம் நகாது எவனொருவன்
தண்டித் தனிப்பகை கோள்."

மக்கள் வாழ்நாளோ சிலவே என்று சொல்லத் தகுமாறு குறைந்த தன்மையதாகவே இருக்கின்றது.

மக்கள் வாழ்நாளாக எண்ணக்கூடிய அந்த எல்லேவரை உலகில் ஒருதலேயாக வாழ்ந்திருக்கலாம் என்ற துணிவும் இல்லே. வாழ்கின்ற சிறுகாலத்திலும் ஏதும் செய்யாதிருப்பினும், உலகத்தவர் பலர் காரணமின்றியே கூறும் பழிச் சொற்களுக்கோ அளவில்லே. உலகியல் இங்ஙனமிருக்கவும், தாம் உளராம் காலமளவும் கண்டாரோ டெல்லாம் மகிழ்ந் துரையாடி நண்பு பாராட்டி இனிமையே யொழுகலே மறந்து, கண்டாரொடெல்லாம் பகையே பூண்டு, தனித்திருந்து வருந்தி நிற்பது எப்பயன் கருதியோ என்று உலகியலறியாப் பேதையரை நோக்கி வியந்தவாறும் இந்நாலடி.

**செல்வம்**

இனி, உலகியற்கின்றியமையாச் செல்வத்தின் சிறப்பை நாலடி பலபடியாக எடுத்துக்காட்டுமாற்றைக் காண்பாம்:

**செல்வச் சிறப்பு**

> " வடுவிலா வையத்து மன்னிய மூன்றில்
> நடுவண தெய்த இருதலேயும் எய்தும்
> நடுவண தெய்தாதான் எய்தும் உலேப்பெய்(து)
> அடுவது போலும் துயர் "

என்று கூறுகிறது நாலடி. மன்னிய மூன்றென்பன அறம் பொருள் இன்பம் என்னும் மூன்றுமாம். இம்மூன்றுள் நடுவணதாகிய பொருளே ஒருவன் அடையின், அவன் அறமும் இன்பமும் சிறக்க அடைதற்கு, அப்பொருளே காரணமாயமையும் என்பது சொல்லப்பட்டது. அறத்தையும் இன்பத்தையும் அளிக்கும் இம்மேன்மையை யுணர்ந்து அச்செல்வத்தை வருந்தியீட்டாது வறிஞனுய் நிற்போன், பலவகை இடுக்

கனுக்கே ஆளாகும் இயற்கையும் உடன் உணர்த்தப் பட்டது. 'ஆமை முதலிய சிற்றுயிர்களை உலையிலிட்டு எரிகின்ற அடுப்பின்மீது வைத்து வேவ வைக்கும் காலத்து உண்டாம் துன்பத்தை ஒத்ததொரு துன் பத்தை வறிஞன் அடைவான்' என்று சொல்லப் பட்டது காண்க. செல்வம் பெற்றவர் அச்செல்வத் தால் மேலும் மேலும் பல சிறப்புக்களைப் பெற்று உயர்வதும், வறுமையுற்றோர் அவ்வறுமையால் மேலும் மேலும் துன்பத்துக்கே ஆளாகி அத்துன்பத்து ஆழ்வதும் உலகியற்கை யாதலின், நாழியாக ஆக மேலும் மேலும் அடும் உலை, பொருந்திய உவமையா யிற்றன்றோ? முடிவில் உலை பெய்யப்பெற்ற பொருள் தன்மை திரிந்து அழிந்தொழிதல் போல, வறிஞனும் வறுமைத் துன்பத்தால் அடப்பட்டு அழிந்தொழிவான் என்பதும் குறிக்கப்படும்.

வறுமையின் கொடுமை

இனிச் செல்வத்தின் சிறப்பை யுணர்த்து முறை யில், வறுமையின் கொடுமையை மேலும் சிறந்தெடுத்து உணர்த்துமாற்றைக் காண்க.

> " நீர்மையே யன்றி நிரம்ப எழுந்ததம்
> கூர்மையும் எல்லாம் ஒருங்கிழப்பர்—கூர்மையின்
> முல்லை அலைக்கும் எயிற்றாய் நிரப்பென்னும்
> அல்லல் அடையப்பட் டார்.''

நீர்மையாவது ஒருவரது இயற்கையான நல் லியல்பு. கூர்மையாவது அறிவுக்கூர்மை. வறுமை புகுந்தவழி, இவை அழிதல் இயற்கையே யன்றோ? இக்கொடிய வறுமையால் ஒருவன் நிலைதளரும் இயற் கையை மற்றொரு நாலடி கூறுமாறு:—

"பிறந்த குலம்மாயும் பேராண்மை மாயும்
சிறந்ததம் கல்வியும் மாயும்—கறங் கருவி
கல்மேல் கழூஉம் கணமலை நன்னாட
இன்மை தழுவப்பட் டார்க்கு."

வறுமை புகுந்தவழி, ஒருவன் குலப்பெருமையும் பலரால் புறக்கணிக்கப்படுகிறது. பேராண்மை யுடையோன் வறுமைப்பட்டவழிச் செய்யப்புகும் அரும் பெருஞ் செயல்களில் பொருள் முட்டுப்பாடுற்று ஆண்மை விளங்கித் தோன்றுமல் குன்றப் பெறுகின்றுன். கற்றேனும் வறுமையால் மனம் மடியப் பெற்று அறிவின் விளக்கம் குன்றப் பெறுகின்றுன்.

**செல்வரைச் சாரும் உலகம்**

இனி, உலகோரியல்பு எடுத்துக்காட்டியும் செல்வச் சிறப்பு உணர்த்தப்படுகின்றது. உலகில் பலரும் செல்வரை விரும்பி யடைகின்றனரே யன்றிச், செல்வமற்றவரைக் காணின், அவரை ஒரு பொருளாகக் கருதாது இகழ்ந்து நடக்கின்றனர். இதைச் சிறந்த ஓர் உவமைகொண்டு உணர்த்துகின்றது நாலடி.

"ஆர்த்த பொறிய அணிகிளர் வண்டினம்
பூத்தொழி கொம்பின்மேற் செல்லாவாம்—நீர்த்தருவி
தாழா உயர்சிறப்பின் தண்குன்ற நாட
வாழாதார்க் கில்லைத் தமர்."

தேனை நாடியே திரியும் இயற்கை வாய்ந்த வண்டுகள், பூக்கள் பொலிவு பெற்ற மரங்களை நாடிச்செல்லுமல்லாமல், பூத்தொழிந்து வெறும் பச்சிலையேயாய் நிற்கும் மரங்களை நாடிச் செல்லுமோ? செல்லாவன்றே? அங்ஙனமே உலக இன்பத்துக்குக் காரணமான செல்வத்தை யுடையோரை உலக மக்கள் சூழ்

வரேயன்றி, அஃதற்றவரைக் கண்ணெடுத்தும் பாரா ரென்க. இதே கருத்தை மற்ருெரு நாலடி,

" கல்லோங் குயர்வரைமேல் காந்தள் மலராக்கால்
செல்லாவாம் செம்பொறி வண்டினம்—கொல்லேக்
கலாஅல் கிளிகடியும் கானக நாட
இலாஅஅர்க் கில்லேத் தமர்.''

என்று கூறுகிறது. மலே எவ்வளவு பெருந் தோற்றத்த தாயினும், அது தன்னிடத்தே காந்தள் முதலிய பூ மலராவிடத்து, அதனிடத்து வண்டுக்கூட்டங்கள் விரும்பிச் செல்வதில்லே. அங்ஙனமே, எத்தகைப் பெரியோராயினும், அவரிடம் செல்வமில்லேயாயின், அவர்மாட்டு மக்கள் விரும்பி அடைய மாட்டார்கள். உயர்ந்த மலேக்குக் காந்தள் மேலும் விளக்கத்தைக் கொடுப்பதுபோல், மேலோர்க்குச் செல்வம் மேலும் விளக்கத்தைக் கொடுப்பது ஈண்டுக் குறிக்கப்படும்.

இங்ஙனம் செல்வக் காலத்துப் பலரும் அவரிடம் உறவினர்போன் ருெழுகுவர்; அஃதற்ற காலத்து அவரிடம் தொடர்பு விடுத்துக்கொண்டு போவர். இவ்வியற்கையைச் சிறக்க மற்ருெரு நாலடி கூறுமாறு :—

" காலாடு போழ்தில் கழிகிளேஞர் வானத்து
மேலாடு மீனிற் பலராவர்—ஏலா
இடர்ஒருவர் உற்றக்கால் ஈர்ங்குன்ற நாட
தொடர்புடையேம் என்பார் சிலர்.''

'காலாடு போழ்'தாவது பல திசைக்கண்ணும் சென்று ஊடாடித் தொழில்புரியும் செல்வக் காலம். அக் காலத்து அச் செல்வரிடம் உறவினர் போன்று ஒழுகுவோர் வான மீனினும் பலராவர் என்று எண்ணின் மிகுதியைக் குறிப்பிட்டவாறு காண்க.

காலாடு போழ்து சிறப்பாகச் செல்வக் காலத்தைக் குறிக்க, இடர் உற்ற காலம் சிறப்பாக வறுமைத்துன்ப மடைந்த காலத்தைக் குறிக்கும். வான் மீனினம் போன்று எண்ணற்றுச் சேர்ந்தொழுகிய மக்களுள் வறுமைக் காலத்து நீங்குவோர் பலர். மிகச் சிலரே அவ்வறுமைக்காலத்துத் தொடர்பறுது நிற்பார். இதைத் 'தொடர்புடையேம் என்பார் சிலர்' என்று குறிக்கப்பட்டவாறு காண்க. இதே கருத்தை மற்றொரு நாலடியும்,

" உண்டாய போழ்தின் உடைந்துழிக் காகம்போல்
தொண்டா யிரவர் தொகுபவே—வண்டாய்த்
திரிதருங் காலத்துத் தீதிலிரோ என்பார்
ஒருவரும் இவ்வுலகத் தில்.''

என்று கூறுகிறது.

செல்வக்காலத்துப் பலரும் செல்வரைச் சூழ்தல் அவர் மாட் டிருக்கும் செல்வப்பயனைத் தாமடைதற்கே என்று குறிக்க ஏற்ற உவமை அமைக்கப்பட்டிருக்கிறது. 'பிணங் கண்டவிடத்துக் காக்கைக் கூட்டங்கள் சூழல்போல்' என்ற உவமையை நோக்குக. காக்கைகள் பிணத்தைப் பிடுங்கித் தின்னற்கே அதைச் சூழல்போல், உலக மக்களும் செல்வனைச் சார்ந்து அவனிடம் பிடுங்கித் தின்னற்கே சூழல் காட்டப்படுகிறது. அச் செல்வரே ஒரு காலத்து வறுமையுற்றுப் பொருள் முட்டுப்பாட்டால் தங்குறை முடிக்கப் பல விடத்தும் ஓடியாடி வருந்துங் காலம், வண்டாய்த் திரிதரும் காலம் என்று சொல்லப்படுகிறது. பண்டு பழகிய தொடர்புண்மை காரணமாக, மக்கள் வறிஞராயினரைக், கண்டுழி நலம் விசாரித்தலும் இல்லை

என்பதை யுணர்த்தியே "தீதிலிரோ என்பார் ஒருவரும் இவ்வுலகத் தில்'' என்று கூறுகிறது.

செல்வம் பெற்ற ஒருவன் ஈயாத உலோபியே யாயினும் அவன்மாட்டும் எவ்வகையிலாயினும் பயன டைய வேண்டும் என்ற குறிக்கோளே கொண்டு மக்கள் சிலர் ஒழுகுகின்றனர். இத்தன்மையை மற்றொரு நாலடி,

"ஆசா தெனினும் அகத்துநெய் உண்டாகில்
போகா தெறும்பு புறஞ்சுற்றும்—யாதும்
கொடாஅ ரெனினும் உடையாரைப் பற்றி
விடாஅர் உலகத் தவர்.''

என்று கூறுகிறது.

இறுக மூடிப் பொதியப்பெற்ற ஓர் ஏனத்திலே நெய் உளதாயின், அந்நெய்மணம் பெற்ற எறும்புகள், அதன் உள்ளே புகக் கூடாதுபோயினும், அவ் வேனத்தை விட்டு நீங்க மனமற்றனவாய், எவ்வாறே னும் அதனுள் புகவேண்டி அவ் வேனத்தின் நாலு பக்கங்களிலும் ஓடியாடி உள் நுழைய வாய்ந்த இடம் பார்த்தலிலேயே மனம் விரும்பி அலேகின்றன வன்றே? இங்ஙனமே செல்வம் பெற்றவர் பிறர்க்குக் கொடாத உலோபியா யிருப்பினும், எங்ஙனமேனும் அவர்மாட் டுப் பயன் பெறலாம் என்ற நோக்கமே கொண்டு, சிலர் அச் செல்வரை விட்டு நீங்காமல் மேலும் மேலும் அவரையே சூழ்ந்து திரிகின்றனரன்றே ?

செல்வ மொன்றை மட்டுமே கருதிப் பிறரை மதிக்கும் மக்களியற்கையை ஒரு நாலடி கூறுமாறு :

"அத்திட்ட கூறை அரைச்சுற்றி வாழினும்
பத்தெட் டுடைமை பலருள்ளும் பாடெய்தும்
ஒத்த குடிப்பிறந்தக் கண்ணும்ஒன் றில்லாதான்
செத்த பிணத்திற் கடை.''

ஒருவன் செல்வப்பயன் உணராதவனாய்த் தானே யும் தான் ஈட்டிய பொருள்கொண்டு இன்புறாது, பொருளை நிறைய ஈட்டிவைத்தல் ஒன்றே கொண்டு, தான் உடுப்பது தையலிடப்பட்ட கந்தையேயாய், நடைப்பிணமாய், மகனாந் தன்மை கெட்டு வாழினும், அவன் செல்வ முடைமை ஒன்றையே குறிக்கொண்டு, அவனைப் பெருமைப் படுத்துகின்றார்கள் பல மக்கள். மற்றொருவன் உயர்குடிப் பிறந்து நற்குணக் குன்றனை யனாய்த் திகழினும், செல்வம் என்ற ஒன்று அவன் மாட்டு இல்லாவிட்டால், அவனைச் செத்த பிணத்தி னும் இழிவாகக் கருதிப் புறக்கணிக்கின்றனர்.

இனிச் செல்வர் அறிவற்றவராயினும் அவர் சொல் உலகத்து மதிக்கப் பெறுகின்றது. வறிஞர் சிறந்த அறிஞராயினும், அவர்சொல் சிலர் காதிடத்தும் புகப் பெறாது கழிகின்றது. இதை நாலடி உணர்த்துமாறு:

> "நல்லாவின் கன்றாயின் நாகும் விலைபெறூஉம்
> கல்லாரே யாயினும் செல்வர்வாய்ச் சொல்செல்லும்
> புல்லீரப் போழ்தின் உழவேபோல் மீதாடிச்
> செல்லாவாம் நல்கூர்ந்தார் சொல்."

பால்தரும் நல்ல உயர்சாதிப் பசுங்கன்றானது மிக இளம்பருவத்த தாயினும், அதை நல்ல விலைகொடுத்து வாங்குகின்றார்கள் மக்கள். இதேபோன்று பெரும் பயனையளிக்கவல்ல மேலான செல்வத்தைப் பெற்று வைத்த செல்வர், அறிவற்ற கீழோராயினும், அவர் சொல் பலராலும் மதித்துக் கொள்ளப்படுகிறது. இனிச்சிறிதே மழை பெற்ற நிலத்தில் உழவு ஆழ்ந்து செல்லாது மேலோட்டமாகச் செல்வதுபோல், பய னுடைச்செல்வத்தைப் பெற்றிராத வறுமையாளரான

நல்லறிஞர் சொல்லும் பிறர் செவியில் ஊன்றப் பெறாது வீணே கழிகின்றது.

இத்தகைச் சிறந்த செல்வந்தானும் பயனுடைய தாவது அறம்புரிந்த வழியேயாம் என்று நாலடி பல படியாகக் காட்டிய தன்மையை முன் கண்டோம். அறம்புரிந்து பயன் கொள்ளாமல் தாமே ஐம்புலனும் ஆர நுகர்ந்து செல்வச் செருக்குற்றுத் திரியும் கீழோர் இயல்பையும், தாமேயும் நுகர்ந்து பயன் கொள்ளாத உலோபியர் இயல்பையும் பலபடியாகக் காட்டிச் செல்கிறது நாலடி. அவற்றை ஈண்டுக் காண்பாம். செல்வச் செருக்குற்றோரைப்பற்றிக் கூறும் நாலடியைக் காண்க.

செருக்குற்ற செல்வர்

"யாமாயின் எம்மில்லம் காட்டுதும் தாமாயின்
காணவே கற்பழியும் என்பார்போல்—நாணிப்
புறங்கடை வைத்தீவர் சோறும் அதனால்
மறந்திடுக செல்வர் தொடர்பு.''

செல்வர், ஒருவர் வீட்டுக்குப் புதியராய் வந்தால், அவர் அச்செல்வரை வீட்டினுள் அழைத்துச் சென்று, தம் வீடு முழுவதையுங் காட்டி உபசாரம் செய்வர். மற்று அச்செல்வச் செருக்குற்றோர் வீட்டிற்கு எளியார் ஒருவர் சென்றால், அவர் ஒத்த குடிப்பிறப் புடையவராயினும், அவரது ஏழ்மை நிலை கருதி அவரை இழித்து நோக்கி, அவர் தம் வீட்டுட்புறத்தைக் காணின், வீட்டின் பெருமை யழியும் என்று கருதுவாராய், அவரைத் தம் வீட்டிற்குள்ளும் அழைத்துச் செல்லாது, வீட்டின் வெளிப்புறத்தேயே வைத்துச் சோறீவர் என்க.

இச் செல்வர் பிறரை எள்ளி நோக்கும் தன்மையை உணர்த்துமாறு:

> "நம்மாலே யாவர் இந் நல்கூர்ந்தார் எஞ்ஞான்றும்
> தம்மாலே ஆக்கம் இலரென்று—தம்மை
> மருண்ட மனத்தார்பின் செல்பவோ தாமும்
> தெருண்ட அறிவி னவர்.''

செல்வச் செருக்குற்றோர், பிறரை 'இவர் தம் வாழ்க்கையில் மேம்படுதல் தம்மாலில்லை; நாம் உதவியாலே இவர் வாழ்க்கையை முட்டுப்பெறாமல் நடத்துவார்' என்றெண்ணுகின்றனர். அங்ஙனம் எண்ணுவோர் தம் பெருமையே கருதும் உண்மையறியா மயக்க மனத்தை யுடையவரென்க. 'தெளிந்த அறிவினையுடையார் அத்தகைச் செருக்குற்ற செல்வரைச் சாரார்' என்று கூறப்படுமாறு காண்க.

செல்வச் செருக்குற்றோர் எள்ளும் இயற்கையும் அவ்வெள்ளுதலைப் பெற்ற மேலோர் மனம் படும் பாட்டையும் கீழே காண்க.

> "நல்லர் பெரிதளியர் நல்கூர்ந்தார் என்றெள்ளிச்
> செல்வர் சிறுநோக்கு நோக்குங்கால்—கொல்லன்
> உலையூதுந் தீயேபோல் உள்கனலுங் கொல்லோ
> தலையாய சான்றோர் மனம்''

''உலகினர் நல்லோர் எனச் சொல்லும் இவர், நம்மால்தான் உதவி பெற்று வாழ்பவர்; வறுமைப்பட்ட கீழோரே'' என்று செல்வச் செருக்குற்றோர் எள்ளி நினைத்து மேலோரை இழித்துப் பார்க்கின்றார்கள். அக்காலை, அம் மேலோர் மனம் கனலுவதன் மேம்பாட்டைக் கொல்லன் உலைக்களத்தே துருத்தி கொண்டு ஊதப்பெறும் உலைத்தீயை உவமை கூறி உணர்த்தியது பெரிதும் பொருந்தியதன்றோ.

செல்வச் செருக்குற்றோர் இங்ஙனம் எள்ளுதற் கண் அன்றித் தம் செல்வ வலியால் செய்யும் வரம்பு கடந்த செயலைக் கண்டவிடத்துப் பெரியோர் மனம் படும்பாட்டையும் ஒரு நாலடி கூறுகிறது :

" திருமதுகை யாகத் திறனிலார் செய்யும்
பெருமிதங் கண்டக் கடைத்தும்—எரிமண்டிக்
கானந் தலைப்பட்ட தீப்போல் கனலுமே
மான முடையார் மனம்.''

செல்வ வலியொன்றே யுடையராதலைத் தெரிவிக் கத் ''திருமதுகையாக'' என்று குறித்துச் சொல்லப் பட்டது. (மதுகை-வலி.) மற்றுத் தாம் இயற்கையே ஒரு சிறிதும் வலிமையிலார் என்பதைத் "திறனிலார்" என்பது தெரிவிக்கின்றதென்க. வரம்புகடந்த செய்கை "பெருமிதம்'' என்ற சொல்லால் குறிக்கப்பட்டது. ஈண்டுப் பெரியோருடைய மனம் கனலுவதற்கு மரஞ் செறிந்த காட்டிற் பற்றிய தீ உவமையாயமைந்தது காண்க. அத்தீ முறுகியெழுவதன் மேம்பாட்டைச் சொல்லவும் கூடுமோ ?

**உலோபியர்**

இனிப், பொருள் நிறையப் பெற்றுவைத்தும் ஈயாத உலோபியரின் இழிவைச் சில உவமை கொண்டு நாலடி எடுத்துக் கூறுவதைமட்டும் காண்பாம். உவமைகளில் ஒன்று விளாமரம்.

" அருகல தாகிப் பலபழுத்தக் கண்ணும்
பொரிதாள் விளவினை வாவல் குறுகா
பெரிதணிய ராயினும் பீடிலார் செல்வம்
கருதுங் கடப்பாட்ட தன்று.''

விளாமரம் தன் கிளையெங்கும் 'பழம் இல்லாத இடம் இல்லை' என்று சொல்லும்படி பல பழங்கள்

பழுக்கப்பெற்றிருந்தாலும், அம்மரத்தை நோக்கிப் பழமுண்ணும் இயற்கையுடைய ஒரு வௌவாலும் சென்றடைவதில்லை, ஏன்? வௌவால் நுகரவொண்ணுதபடி பழம் வலிய ஓடு பொருந்தி யிருக்கிறது. இங்ஙனமே, உலோபியர் தம்மாட்டு உடனுறைந்தாலும், அவரை நாடி மக்கள் செல்லாமல் பழுமரங்கள் போன்ற வள்ளல்களையே நாடிச் செல்கின்றனர். மற்றொரு நாலடியில் அவ்வுலோபியர்க்குக் கள்ளி உவமை கூறப்படுகிறது.

" அள்ளிக்கொள் வன்ன குறுமுகிழ வாயினும்
கள்ளிமேல் கைந்நீட்டார் சூடும்பூ வன்மையால்
செல்வம் பெரிதுடைய ராயினும் கீழ்களை
நள்ளா ரறிவுடை யார்."

கள்ளி, கைந்நிறையக் கொள்ளலாம் என்று விரும்பத் தக்கனவான சிறிய மெல்லிய மஞ்சள் நிறமான இதழ்களையுடைய பூவைப் பெற்றிருந்தாலும், அப்பூ, மக்கள் சூடத்தக்க பூ வன்மையின், அக்கள்ளிப் பூவை மக்கள் மனங்கொண்டு பறிக்க முற்படுகின்றார்கள் இல்லையன்றே? அங்ஙனமே உலோபியர், பெருஞ் செல்வம் பெற்றிருந்தாராயினும், அவரைப் பொருள் கருதிச் சேரார் மக்கள்; வள்ளல்களைச் சேர்வர் என்பதாம்.

இவ்வுலோபியருக்கு மற்றோருவமை கடல்.

" மல்கு திரைய கடற்கோட் டிருப்பினும்
வல்லூற் றுவரில் கிணற்றின்கண் சென்றுண்பர்
செல்வம் பெரிதுடைய ராயினும் சேட்சென்று
நல்குவார் கட்டே நசை."

ஒருவன் அலை கொழிக்கும் நீரே நிறைந்த கடற்கரைக்கண்ணே யிருந்தாலும், நீர் வேட்கை தோன்

றின், அக்கடல் நீரை மொண்டு பருகுவதில்லை. மற்று, அவன் நன்னீர் ஊற்று ஏதேனும் தொலைவில் இருப்பினும், அது தேடிச் சென்று நீர் பருகி வேட்கை தணியப்பெறுகின்றான். இங்ஙனமே, உலோபியரிடத்துப் பெருஞ்செல்வமிருந்தாலும், அவை விரும்பியடையாமல் மக்கள் அருள் நிறைந்த செல்வர் தொலைவிலிருந்தாலும் அவரையே தேடிச் சென்று தங்குறை முடிக்கப்பெறுகின்றனர்.

இதே உவமையை மற்றொரு நாலடி கூறுமாறு :—

" ஏறிநீர்ப் பெருங்கடல் எய்தி யிருந்தும்
அறுநீர்ச் சிறுகிணற்(று) ஊறல்பார்த் துண்பர்
மறுமை யறியாதா ராக்கத்தில் சான்றோர்
கழிநல் குரவே தலை.''

---

## கூசு நாலடியிற் சில சிறந்த போக்கு

துறவையே பெருநெறியாகக்கொண்ட சமண சமயச் சார்புற்ற பெருந் தமிழ்ப் புலவோர்களால் செய்யப்பட்ட நாலடி, அச்சமணசமயத்தவர் தம் உள்ளப் பாங்கினைத் தெளிய உணர்த்தும் முறையில் சில பொருள்பற்றி வலியுறுத்திக் கூறிச் செல்வது பெரிதும் அறிந்துணர்ந்து மகிழத்தக்கதாம்.

### உலோபியர் இழிபுரைத்தல்

செல்வ நிலையாமையைப் பலவிடங்களிலும் வலியுறுத்திக் கூறி, அச்செல்வம் பெற்றபொழுதே அறத்தை மறவாது கடைப்பிடித்தொழுகி அச்செல்வப்பயனை அடைந்தே விடுக என்று பலவிடத்தும்

வலியுறுத்திக் கூறிச் செல்லும் சமண் தமிழ்ப் புலவோர், அங்ஙனம் சிறந்த பயனடையத்தக்க செல்வத்தைப் பெற்று வைத்தும் அறப்பயன் கொள்ளாதும், தாமேயும் நுகர்ந்து இன்புறாதும் அறிவின்றி வீணே கழியும் உலோபியரைப் பார்க்கப் பெரிதும் மனக்கொதிப் படைகின்றனர். இவ்வுலோபியரைக் குறித்து இடையிடையே வரும் பல நாலடிச் செய்யுட்கள் அவ்வுலோபியரின் கீழ்மை மிகுதியும் புலப்படுமாறு மனங்கொள உரைத்துச் செல்வது நாலடியின் ஒரு சிறந்த போக்காகும்.

"எனதென தென்றிருக்கும் ஏழை பொருளை
எனதென தென்றிருப்பன் யானும்—தனதாயின்
தானும் அதனை வழங்கான் பயன்துவ்வான்
யானும் அதனை அது."

ஈயாத உலோபியின் செல்வத்தை "எம்செல்வம்" என்று கூறுகின்றார் புலவர். உலோபி செல்வத்தைப் பெற்று வைத்திருந்தானாயினும், அவன் அதை வறியோர்க்கீந்து அறத்தை ஈட்டிக்கொள்ளாமலும், தானும் ஐம்புலனும் ஆர நுகராமலும் இருந்து, அச் செல்வப்பய னடையாமல் "என்னுடைய செல்வம் இது" என்று சொல்லிச், சொல்லளவில் மட்டுமன்றே இன்புறுகின்றான். புலவரும் அவ்வுலோபியின்மாட்டுள்ள செல்வத்தை வறியோர்க் கீயவில்லை. அவை கொண்டு தாமும் இன்புறவில்லை. 'அச்செல்வம் எமது' என்று சொல்லளவில் சொல்லிக்கொள்கின்றார். இருவர்க்கும் எவ்வகை வேறுபாடும் இல்லையன்றே? இதனால் பொருளைப் பெற்றுவைத்தும் அதன் பயனடையாப் பேதைமையை விளக்கினார் புலவர்.

உலோபியைப்பற்றிய மற்ருெரு நாலடி காண்க :

" தனதாகத் தான்கொடான் தாயத் தவரும்
தமதாய போழ்தே கொடாஅர்—தனதாக
முன்னே கொடுப்பின் அவர்கடியார் தான்கடியான்
பின்னை அவர்கொடுக்கும் போழ்து.''

உலோபி ஒருவன் தான் வருந்தி ஈட்டிய செல்வத்தைத் தான் மயதுமுதிர்ந்து செயலற்ற காலத்துத் தாயத்தாருக்கு (தனக்குப் பின் உரிமையாளராய்த் திகழ்வாருக்கு)க் கொடுத்து விடுகின்ருன். பொருள் தன்மாட்டிருந்த காலத்து அப்பொருளை அத்தாயத்தாருக்கும் கொடாது வைத்திருந்தான். இப்பொழுது அத்தாயத்தார் அப்பொருளை அவ் வுலோபிக்கும் கொடாது வைத்திருக்கின்றனர். தன்னிடம் அப்பொருள் இருந்தகாலத்து அவ்வுலோபி செல்வத்தை எவர்க்குக் கொடுப்பினும் அத்தாயத்தார் வந்து தடுப்பா ரல்லர். இப்பொழுது அத்தாயத்தார் தாம் பெற்ற செல்வத்தைத் தம் மனம் விரும்பியவாறு ஒருவர்க்குக் கொடுக்கும்பொழுது அவ்வுலோபிதானும் தடுக்க வலியற்றவனுய் இருக்கின்ருன். இவ்வகையில் செல்வத்தை வருந்தி யீட்டிய அவ்வுலோபியினும் மற்றையோரே அச்செல்வப் பயனை அடைகின்றன ரன்றே?

இங்ஙனம் பயனடையத் தக்க செல்வத்தைப் பயனடையாது கழிதலின், அவ்வுலோபி 'செல்வத்தைத் தான் நுகரத்தக்க நன்மனைவியாகக் கருதாது, பிறனொருவனுக்கே உரிமைப்படுத்தற்குத் தான் போற்றி வளர்க்கும் பெண்ணாகவே கருதினன்' என்று கூறி, அவனது இழிதகவைப் புலப்படுத்துகின்ருர் புலவர்,

" கொடுத்தலும் துய்த்தலும் தேற்ரு இடுக்குடை
உள்ளத்தான் பெற்ற பெருஞ்செல்வம் இல்லத்(து)
உருவுடைக் கன்னியரைப் போலப் பருவத்தால்
ஏதிலான் துய்க்கப் படும்."

ஒருவன் தன் பெண்ணைப் போற்றிவளர்த்துத் தகுந்த பருவம் வந்த காலத்துப் பிறனொருவனுக்கு உரிமைப்படுத்தல்போல், உலோபியும் தான் ஈட்டி வளர்த்த செல்வத்தைக் காலம் வர, ஒருவனுக் குரிமைப்படுத்தலின் "பருவத்தால் ஏதிலான் துய்க்கப் படும்" என்று கூறினர் புலவர்.

இரத்தலின் இழிவு

செல்வப்பயன் கொள்ளாத இவ்வுலோபியரின் பேதைமையைக் கண்டு மனங் கொதித்தமைபோலவே, செல்வம் பெருத மக்கள், தம் இயல்புக்கேற்ப முயன்று அறவழியில் நிற்பதேயல்லாமல், அச்செல்வம் வேண்டி ஈதல் குணமற்ற செல்வரைச் சென்று இரத்தலின் இழிவைக் கண்டு மனங் கொதித்துக் கூறியும் செல்கின்றனர். இவையும் நாலடியில் தனிச்சிறப் புடையனவாய் விளங்குகின்றன

வறுமை காரணமாகச் செல்வனொருவனை இரக்கத் துணிகின்ற ஒருவனை நோக்கி, 'வறுமைத் துன்பத்தைப் பொறுக்குமாறு உன் மனத்தையே இரக்கலாகாதா' என்று கேட்கின்ருர் புலவர்.

" இன்னு இயைக இனிய ஒழிகென்று
தன்னையே தான்இரப்பத் தீர்வதற்(கு)—என்னைகொல்
காதல் கவற்றும் மனத்தினல் கண்பாழ்பட்(டு)
ஏதி லவரை இரவு."

ஒருவன் 'ஏ மனமே, நீ துன்பத்தை ஏற்பாய்; இன்பம் நீங்கட்டும்' என்று தன் மனத்தை நோக்கிக்

கூறி இரப்ப, அவன் துன்பம் தாங்கும் மனவலி பெறுவானன்றே? 'செல்வத்தின் மாட்டே அளவுகடந்த பற்றுவைத்தல் எதற்கு? ஒருவன் தன்னை மதிக்கும் மதிப்பைப் பாழ்படுத்திக் கொள்வதெதற்கு? தனக்கயலானிடம் போகவேண்டுவ தெதற்கு' என்று கேட்கின்றார் புலவர்.

இனி, வறுமை காரணமாகப் பசிப்பிணி வாட்டுவதாயினும், அதனால் தன் உயிர் போவதாயினும், அவையும் இழிவல்ல; இரத்தலே இழிவு என்று கூறுகின்றார் புலவர்.

" இழித்தக்க செய்தொருவன் ஆர உணலின்
பழித்தக்க செய்யான் பசித்தல் தவறன்று
விழித்திமைக்கும் மாத்திரை அன்றோ ஒருவன்
அழித்துப் பிறக்கும் பிறப்பு "

'இரத்தலாகிய பிறர் பழிக்கும் இழிதொழில் செய்து ஒருவன் வயிறுநிறைய உண்டு மகிழ்தலின், பிறர் பழிப்புக்கு இடமாகாமல் பசித்திருத்தல் நல்லதன்றோ' என்று கேட்கின்றார் புலவர். அங்ஙனமாயின், இறத்தல் நேரிடுமே எனின், 'இறத்தலும் பிறத்தலும் உறங்குதலும் விழித்தலும் போலாம்' என்ற உண்மையை உணர்த்தி 'இவ்வுண்மையை உணர்ந்து மனங் கலங்கப் பெறாமை வேண்டும்' என்று கூறுகின்றார்.

இங்ஙனம் இரத்தலின் இழிவை யுணர்த்தியதோடு மேலோராயிருப்போர் எவ்வகையினும் இரத்தற்கு முற்படார் என்றுங் கூறுகின்றார் சமண் புலவர்.

" திருத்தன்னை நீப்பினும் தெய்வம் செறினும்
உருத்த மனத்தொ(டு) உயர்(வு) உள்ளின் அல்லால்
அருத்தம் செறிக்கும் அறிவிலார் பின்சென்(று)
எருத்(து) இறைஞ்சி நில்லாதாம் மேல்."

'தம்மாட்டிருக்கும் திருமகள் அடியோடு ஒழிவதா யிருந்தாலும், "நீ இரவா விட்டால் நான் உன்னை அழிப் பேன்" என்று தெய்வமே வெகுண்டெழுந்தாலும், ஒரு நிலையே பதிந்த மனத்தோடு, தமக்கு இழிவு வராதவாறு உயர்வையே கருதுவதல்லாமல், செல்வம் தொகுத்தும் ஈந்து பயனறியாத மடவோர்பின்னே போய்ப் பொருள் வேண்டித் தலைவணங்கி நில்லார்கள் மேலோர்' என்று மேலோர் மன இயற்கையைத் தெளியக் காட்டியவாறு காண்க.

நல்லோர் வறுமையும் தீயோர் செல்வமும்

இனி, நல்லோர் பலர் வறுமையால் வாடலும், கீழோர் பலர் செல்வத்தால் சிறப்புற்று வாழ்தலும் உலகில் காணல் இயற்கை யன்றே? பல நற்பயனையும் விளைக்கவல்ல செல்வம் மேலோரை நீங்கியும், கீழோரை யடைந்தும் நிற்கின்றமை கண்டு மனங் கொதிக்கின் றனர் சமண் புலவர் :

" நயவார்கண் நல்குரவு நாணின்று கொல்லோ
பயவார்கண் செல்வம் பரம்பப் பயின்கொல்
வியவாய்காண் வேற்கண்ணாய் இவ்விரண்டும் ஆங்கே
நயவாது நிற்கும் நிலை "

நற்குணமமைந்த மேலோரிடத்து வறுமை தங்கிய வழி, அவ்வறுமைத் துன்பத்தைக் கண்டு மனமழியா மல், அவர்தம் அறிவுடைமையால் அத்துன்பத்தை இகழ்ந் தொதுக்கி மேம்படுகின்றன ரன்றே? ஆகலின், அம்மேலோரை அடைந்த இவ்வறுமை முழுவலிமையும் அழிந்தொழியும் தன் நிலையைக் கண்டு 'நாணி அவரை விட்டு நீங்காதோ' என்று கேட்கின்றார் புலவர். அறம் புரிந்து நற்பயனை யடையாத கீழோனிடத்துள்ள

செல்வம், தன்பயனை அவன் அடையாமையின், வெறுத்து அவனைவிட்டு நீங்குதல் ஏற்றதன்றோ? அங்ஙனமாகவும், செல்வம் அக்கீழோனிடத்து நிலைபெற்றிருக்கின்ற அத்தன்மையைக் காணின், 'அச்செல்வம் பற்றிய ஒன்றைவிட்டு நீங்கும் இயற்கை யற்ற ஒரு வகைப் பிசினோ' என்று வியந்தனர். இங்ஙனம் கூறி நல்லோரிடத்து வறுமையும் கீழோரிடத்துச் செல்வமும் கண்டு தம் மனம் கனலுவதைக் குறிப்பித்தாரென்க.

கீழோனிடத்துத் திருமகள் நிலைபெற்றிருக்குந் தன்மையைக் கண்டு சமண் புலவர் வெகுண்டு கூறுமாற்றைக் காண்க:

" நாளுத் தகடேபோல் நன்மலர்மேல் பொற்பாவாய்
நீறாய் நிலத்து விளியரோ—வேறாய
புன்மக்கள் பக்கம் புகுவாய்நீ பொன்போலும்
நன்மக்கள் பக்கம் துறந்து.''

'திருமகளே! நீ பொன்போலும் சிறந்த நன்மக்களிடத்து நிலைபெறாமல் போய்விடுகின்றாய். கீழோரிடத்து நிலைபெறுகின்றாய். இயற்கைக்கு மாறான தீக்குணத்தைக் கொண்டிருக்கின்ற நீ, இருந்த இடமும் தெரியாதவாறு நீறுபட் டழிவாயாக' என்று தம் மனத்தகத்தே வெறுப்பு மிகுதி தோன்றக் கூறினார் புலவர். 'அழகும் மணமும் நிறைந்து சிறந்த செந்தாமரை மலரில் வீற்றிருந்தும், சிறந்த இடத்திற்கேற்பச் சிறந்த குணம் வாய்க்கப் பெறாமல், அம்மலரோடொன்றுபட்டிருந்தும் அம்மலரின் புறத்தே அமைந்திருக்கும் புறவிதழ், நன்னிறமும் நன்மணமும் பெறாதொழிந்திருப்பதுபோல, அம் மலரின் அகத்தே ஒன்று

பட்டிருக்கும் நீயும், நல்லறிவும், நற்குணமும் பொருந்தா திருக்கின்றாய்' என்றும் குறிப்பித்தனர்.

இனி, அறிவுடைமை செல்வமுடைமையின் காரணத்தை ஆராய்வாம்.

அறிவு உயிரோடு ஒன்றுபட்டது. உயிர் பல பிறவிகளிலும் உழன்று உழன்று அறியாமை தேயப்பெற்று, அறிவு விளக்கம் பெறுகிறது; ஆதலின், ஒரு பிறப்பில் அறிவு மேம்பாடுடையார் முற்பிறப்புக்களில் அறிவுத் துறையில் மிகவும் முயன்றிருந்தோராதல் வேண்டும். அறிவுத்துறையில் மிகுதியும் முயலாதோர் குறைந்த அறிவினராய்க் காணப்படுவர். ஆதலின் இவ்வறிவுடைமை, ஒவ்வொரு பிறப்பிலும் மேன்மேலும் வளர்ச்சி (விளக்கம்) அடைந்துகொண்டு போகும் இயல்பினதன்றிக், குறைந்தும் வளர்ந்தும், நிலை கெட்டுக்கொண்டிருப்பதன்று என்பதுணரத்தக்கது. ஆதலின், ஒரு பிறப்பில் ஒரு நிலைப்பட்ட அறிவுடையவன் மற்றும் பல பிறப்புக்களில் அறிவுவளர்ச்சி பெற்று அறிவுத் துறையில் மேல்நோக்கியே சென்று கொண்டிருப்பான் என்று உணர்க.

இனி, ஒருவன் செய்யும் நல்வினை ஒருவனுக்கு செல்வப்பேற்றையும் பிற இன்ப நுகர்ச்சிகளையும், அவன் செய்த தீவினை அவனுக்கு வறுமையையும் பிற துன்பத்தையும் கொடுக்கும். ஆதலின், ஒருவன் நல்வினைப் பயன் உலவாதிருக்கும்வரை அவன் செல்வத்தையும் இன்பத்தையும் நுகர்வன். பின் அவன் செய்த தீமையும் உளவாதலின், அவை வந்து வறுமையையும் துன்பத்தையும் எய்துவிக்கும். இங்ஙனம் ஒருவன் எண்ணில் பிறவிகளில் செய்த நல்வினையும் தீவினையும்

ஒன்றன்பின் ஒன்ருகவும் கலப்புற்றும் வந்து இன்ப துன்பங்களை எய்துவிக்கும்

இங்ஙனம் கூறியவாற்ருல், ஒருவனது அறிவின் மேம்பாட்டுக்கும் குறைவுக்கும் அவன் பல பிறவிகளிலும் மேற்கொண்டிருந்த அறிவுத்துறைப் பயிற்சியின் மேன்மையும் தாழ்மையுமே காரணமென்பதும், அவ்வறிவு பிறவிதோறும் வளர்ந்துகொண்டு போகுமன்றிக் குறையப் பெருதென்பதும், ஒருவனது செல்வ நிலைக்கும் வறுமை நிலைக்கும் காரணம் அவன் செய்த நல்வினை தீவினைகளே என்பதும், செல்வம் குறைந்தும் நிறைந்தும் மாறுபட்டுக் கொண்டிருக்கும் இயல் புடையதென்பதும் உணரப்பட்டன. மேலும் அறிவு பல பிறப்புக்களிலும் தொடர்ந்து கொண்டுவரச் செல்வம் அவ்வப்பிறப்புக்களில் தோன்றியும் அழிந்தும் போகின்றன என்பதும் நினைவிருத்தத் தக்கது.

ஆதலின், பல பிறப்புக்களினும் நிறைவும் குறைவுமான மாறுபாடின்றி ஒரே படித்தாக வளர்ந்துசெல்லும் அறிவுடையானைவிடத் தனக்குப் புறம்பான தாய்ப் பிறவிதோறும் தன்னை வந்து அடைந்து கூடியும் குறைந்தும் நிற்கும் இயற்கையதான செல்வத்தையுடையான் பலவகையிலும் கீழ்ப்பட்டவனே என்பது எவ்வகையானும் துணியப்படுமன்றே! செல்வந்தானும் பயனுடைத்தாவது நல்லறிவுபெற்ற வழியேயாதலை நோக்கவும், செல்வ முடைமையினும் அறிவுடைமையின் மேன்மை புலப்படும்.

அறிவின் உயர்வு தாழ்வுக்குக் காரணம் முற்பிறப்புக்களில் மேற்கொண்டிருந்த அறிவுத்துறைப் பயிற்சியே யாதலும், செல்வ உயர்ச்சி தாழ்ச்சிக்குக்

காரணம் முற்பிறப்புக்களில் செய்த நல்வினை தீவினைகளே யாதலும் உணர்த்திச் சமண்புலவர் கூறுமாற்றைக் காண்க.

" புணர்கடல்சூழ் வையத்துப் புண்ணியமோ வேறே
உணர்வ துடையார் இருப்ப—உணர்விலா
வட்டும் வழுதுணையும் போல்வாரும் வாழ்வரே
பட்டும் துகிலும் உடுத்து."

அறிவுடையார் வறுமையால் வாடியிருக்க, அறிவற்ற கீழோர் மட்டும் நல்லுடை உடுத்துச் செல்வச் சிறப்புற்று வாழ்கின்றார்கள். "(அறிவுடையார் தம் அறிவுடைமைக்குக் காரணமாக முற்பிறப்புக்களில் செய்த அறிவுத்துறைப் பயிற்சியும் வேறு;) செல்வர் தாம் செல்வ முடைமைக்குக் காரணமாகச் செய்த புண்ணியமும் வேறு" என்று குறித்தார் புலவர். அறிவுடைமைக்கும் செல்வமுடைமைக்குமான காரணங்கள் இருவேறு வகைப்பட்டன என்பது தெளிவுறுத்தப்பட்டதன்றே?

" இருவே றுலகத் தியற்கை திருவேறு
தெள்ளிய ராதலும் வேறு."

என்று வள்ளுவரும் மொழிந்தமை காண்க. புண்ணியத்தினும் அறிவுத்துறைப் பயிற்சியே மேம்பட்டதாகும். அறிவுத்துறைப் பயிற்சியே பிறப்பை யறுக்கும். புண்ணியம் இன்பத்தையே கொடுக்கும் என்க. இதனாலேயே பாவ புண்ணியங்களை இரும்பு விலங்காகவும், பொன் விலங்காகவும் கூறுவர் ஆன்றோர்; இவை பிறப்பிலேயே செலுத்தலின்.

## கரு. குறளும் நாலடியும்

"நாலும் இரண்டும் சொல்லுக் குறுதி" என்பது தமிழ்நாட்டில் பயிலப்பெறுமொரு பழமொழியாகும். நாலடியாரும் திருக்குறளும் கற்பவனைச் சொல்லாற்றல் வாய்ந்தவனுகச் செய்யும் என்பதுஇதன் கருத்து. அவ்விரு நூலும் தாம் சொல்லப் புகுந்த பொருள்களைத் தெளிவும் உறுதியும் தோன்ற வலியுறுத்திக் கூறிச் செல்லலின், அந்நூற் பொருளைக் கற்ருரும் சொல்லாற்றல் பொருந்தப் பெற்று மேம்படுதல் இயற்கையன்றே? அவ்வகையில் இவ்விரண்டும்சிறந்த வேனும், அவைதமக்குள்ளும் சிறப்பியல்பும் உண்டு. திருக்குறள் பலபொருள்களையும் பரந்துபட்டுக் கூறிச் செல்ல, நாலடி மக்களுக்கு இன்றியமையாத சிறந்த சில பொருள்பற்றியே கூறிச்செல்கிறது. திருக்குறள் அஃகியகன்று சொற் சுருக்கமும் பொருட் பெருக்கமுங் கொண்டு திகழ, நாலடி சொற் சுருக்கமே கருதாது, எளிய முறையில் யாவர்க்கும் விளங்குமாறு உலகியலோடு பெரிதும் ஒட்டியும், பலப்பல உவமைகளைக் கொண்டு விளக்கியும் கூறிச்செல்கிறது. இவைகளை நோக்கின், திருக்குறளினும் நாலடியே முதலாவதாக ஒருவனுல் கற்கத்தக்கது என்பது புலப்படும். நாலடியின் இச்சிறப்பு நோக்கியே "நாலும் இரண்டும் சொல்லுக் குறுதி" என்னுமிடத்து நாலடி முதற்கண் கூறப்பட்டதென்க. குறளின் சிறந்த கருத்துக்களைத் தன் சிறப்பான போக்கில் எடுத்துச் சொல்லும் நாலடிச் செய்யுளும் உள. அந்நாலடிச் செய்யுளையும் ஒத்த குறட்பாக்களையும் ஒப்புநோக்கி உணர, அவ்விரண்டு நூலின் சிறப்பியல்புகள் தெற்றெனப் புலப்படும். அவற்றுள் சில ஈண்டுக் காணப்புகுவாம்.

பொறுமையின் மேம்பாட்டைக் கூறப்புகுந்த ஒரு குறள்,

“ திறனல்ல தற்பிறர் செய்யினும் நோநொந்(து)
அறனல்ல செய்யாமை நன்று.”

என்பது. ‘தகாத செயல்களைத் தனக்கு ஒருவர் செய்தாராயின், தனக்குத் தீமை செய்ததால் அவருக்கு அத் தீவினைப் பயன் வரவிருத்தலை நோக்கி, அவர் மாட்டு மனமிரங்கி, அவருக்குத் தான் எதிர்செயல் செய்யாதிருப்பதே தக்கதாம்’ என்று கூறுகிறது இக் குறள்.

இக்குறட்கு விளக்க உரைபோல் கூறிச் செல்லும் நாலடியைக் காண்க ;

“ தம்மை இகழ்ந்தமை தாம்பொறுப்ப தன்றிமற்(று)
எம்மை இகழ்ந்த வினைப்பயத்தால்—உம்மை
எரிவாய் நிரயத்து வீழ்வர்கொல் என்று
பரிவதூஉம் சான்றோர் கடன்.”

மேற்குறளில் “நோநொந்து” என்று சுருங்கிய முறையில் நிறைந்த பொருளை அடக்கிநின்ற தொடருக்கு விளக்கவுரை கூறி அமைந்திருக்கிறது இந்நாலடி. ‘எம்மை இகழ்ந்து செய்த இத் தீச்செயலால் மறுமையில் நரகத் துன்பத்தை அடைவரோ’ என்று சான்றோர் மனம் பதைத்தல் ஈண்டுத் தெளிய எடுத்துக் காட்டியமை காண்க. அவர் அங்ஙனம் வீழ்தல் துணிவான செயலாயினும், அது தமக்குப் பெரியதொரு மனத் துணுக்கத்தைத் தரலின் ‘வீழ்வர் கொல்’ (வீழ்வரோ) என்று ஐயப்பாடு தோன்ற மொழிகின்றனர் மேலோர்.

பிறர்மனை நயத்தலின் கொடுமையைக் கூறுமொரு குறள்,

" பகைபாவம் அச்சம் பழியென நான்கும்
இகவாவாம் இல்லிறப்பான் கண்."

என்பது. பகை முதலிய நான்கும் பிறர்மனை நயப் போனை விட்டு நீங்கா என்று கூறப்படுகிறது.

இதை விரிந்த முறையில் வலியுறுத்தி யுரைக்கும் நாலடியைக் காண்க :

" அறம்புகழ் கேண்மை பெருமைஇந் நான்கும்
பிறன்தாரம் நச்சுவார்ச் சேரா—பிறன்தாரம்
நச்சுவார்ச் சேரும் பகைபழி பாவமென்(று)
அச்சத்தோ டிந்நாற் பொருள்."

உலகத்து மகனாய்ப் பிறந்த ஒருவன், அறம் புகழ் கேண்மை பெருமை என இவை சிறக்க வாழ்வதே வாழ்க்கையாம். இந்நான்கும் அவனை யடையா வென் றுணர்த்தி, இவற்றை யடையாமை யொருபுறமிருக்க, இதற்கு மாருகப், பாவம், பழி, பகை, அச்சம் என்ப வற்றையும் எய்தி நிற்கின்றான், என்று அக்குறட் கருத்துக்குச் சிறந்த விளக்க உரையாக இந்நாலடி கூறிச்செல்கின்றது.

உலக இயல்பைக் கூறுமொரு குறள்,

" இருவே(று) உலகத் தியற்கை; திருவேறு
தெள்ளிய ராதலும் வேறு."

என்பது. 'உலக இயற்கை இருவகைப்பட்டு நிற்கிறது. செல்வத்தால் படிப்படியாக மேம்பாடுற்றவரும் ஒரு பக்கத்தே காணப்படுவர். அறிவால் படிப்படியாக மேம்பாடுற்றவரும் ஒருபக்கத்தே காணப்படுவர். இரு வகைப்பட்ட இவ் வுலக இயற்கைகளுக்கான காரணங் களும் தனித் தனியேயாம். ஒன்றோடொன்று தொடர் புடையதன்று' என்று கூறுகிறது இக்குறள். செல்வ

முடைமைக்குக் காரணம் முற்பிறப்பிற் செய்த புண்ணியமும் அறிவுடைமைக்குக் காரணம் அப்பிறப் பில் மேற்கொண்டிருந்த அறிவுத் துறைப் பயிற்சியுமே யாம் என்பது குறித்தவாறும்.

உலகத்தே காணப்படும் இவ்வியற்கையையும், அதை எடுத்துக்காட்டிய திருக்குறளையும், அக்குறட் கருத்தைக் கூறும் நாலடியையும் முன்னும் கண்டோம்.

> "புணர்கடல்சூழ் வையத்துப் புண்ணியமோ வேறே
> உணர்வ துடையார் இருப்ப—உணர்விலா
> வட்டும் வழுதுணையும் போல்வாரும் வாழ்வரே
> பட்டும் துகிலும் உடுத்து."

உலகத்தே அறிவற்ற செல்வர் சிலர் தம் செல்வச் சிறப்புத் தோன்றுமாறு வாழ்ந்திருக்கும் இயற்கை ஈண்டுக் காட்டப்படுகிறது. உலகில் மக்கள் பலர் தம் மானங்காத்து வாழ்தற்கும் போதிய உடையின்றி வருந்தியிருக்கச், செல்வர் பலர் பட்டாடைகளையும் விலையுயர்ந்த பிற உடைகளையும் அணிந்து செருக்கித் திரிதல் காட்டப்படுகிறது. 'வறியோர் பலர் அழிபசி தீர்த்தற்கும் வேண்டிய உணவுபெறாது துன்புறச், செல்வர் பலர் தின்று கொழுத்து மழ மழவென்றிருப் பது பார்க்கத் திரண்ட முள்ளிக்காயும் வழுதுணங் காயும் போலக் காட்சி யளிக்கிறார்கள்' என்றும் சொல்லப்படுகிறது. அறிவோர் பலர் நிறை செல்வம் பெறாது இருக்க, அறிவிலார் இங்ஙனம் செல்வச்சிறப் புற்றமைக்குக் காரணம், அவர் செய்த புண்ணியமும் வேறு; (அறிவோர் மேற்கொண்டிருந்த அறிவுத் துறைப் பயிற்சியும் வேறு) என்று குறிக்கப்பட்டமை காண்க.

இனி, நட்பின் இயல்பினைக் கூறுமொரு குறள்,

> "புணர்ச்சி பழகுதல் வேண்டா; உணர்ச்சிதான்
> நட்பாம் கிழமை தரும்."

என்பது.

ஒருவரோடு ஒருவர் ஓரே இடத்தில் பலநாள் வாழ்ந்திருத்தலும், ஒருவரோடு ஒருவர் பலநாள் பழகுதலும் நட்பை உண்டாக்கா. இருவர் மன இயற்கை ஒத்தவழி நட்புத் தோன்றும் எனக் கூறுகிறது இக் குறள்.

இக்கருத்துத் தெளிந்து விளங்கும் முறையில் எளிமையாகக் கூறிச்செல்லும் நாலடியைக் காண்க:

> "பலநாளும் பக்கத்தா ராயினும் நெஞ்சில்
> சிலநாளும் ஒட்டாரோ டொட்டார்—பலநாளும்
> நீத்தார் எனக்கை விடல்உண்டோ தந்நெஞ்சத்(து)
> யாத்தாரோ(டு) யாத்த தொடர்பு."

நெஞ்சொடு நெஞ்சு ஒட்டியவர்; நெஞ்சை நெஞ்சால் யாத்தவர் (கட்டியவர்) என்று கூறி மன உணர்ச்சி ஒன்றுபட்டமை தெளிய விளங்குமாறு குறிக்கப்பட்டது 'ஒருவர் நெஞ்சை மற்றவர் நெஞ்சால் கட்டிய, உணர்ச்சி யொத்த இருவருள், ஒருவர் ஒருவரைப் பிரிந்து வெவ்வேறிடங்களில் வாழ்ந்தாராயினும், அந்நட்பு ஒரு சிறிதும் மாறாது' என்று கூறி, முன்னிரண்டடிகளில் கூறியது மற்றைய இரண்டடிகளில் எதிர்மறை முகத்தாலும் வற்புறுத்தப்பட்டது

உலகில் செயல் மேம்பாட்டுடன் வாழ நினைக்கும் ஒருவனுக்கு அறிவுறுக்கும் ஒரு குறள்,

> "நன்றாற்ற லுள்ளும் தவறுண்(டு) அவரவர்
> பண்பறிந் தாற்றாக் கடை."

என்பது. 'நன்மை செயல் மேற்கொள்வதிலும் தவறு நேருவது உண்டு; உலகில் பலதிறப்பட்ட மக்களுள் அவ்வவர் தகுதியறிந்து ஏற்றதைச் செய்யாவிடத்து' என்று கூறுகிறது இக்குறள். இன்சொற் கூறலும், கொடுத்தலும் நல்லவாயினும், நன்மையறியாக் கயவரிடத்து இவை பயனின்றி யொழிதலும் உண்டன்றே?

" சொல்லப் பயன்படுவர் சான்றோர்; கரும்புபோல்
கொல்லப் பயன்படும் கீழ்.''

அன்றோ?

சுருங்கிய முறையில் கூறிய அவ் அருங் கருத்தைச் சிறந்த உவமைகொண்டு தெளிய விளக்கிச் செல்லும் நாலடியைக் காண்க:

" ஒக்கிய ஒள்வாள்தன் ஒன்னார்கைப் பட்டக்கால்
ஊக்க மழிப்பதூஉம் மெய்யாகும்—ஆக்கம்
இருமையும் சென்று சுடுதலால் நல்ல
கருமமே கல்லார்கண் தீர்வு.''

போர்க்களத்தே போர் செய்கின்றான் ஒருவன் தன் பகைவரை வீழ்த்தற்காகக் கையில் ஓங்கிக் கொண்டிருந்த வாளானது, தன்முன்னே தன்னொடு எதிர் நின்று பொருவான் கையில் போய்விட்டதானால், தனது அவ்வாளே ஊக்கமும் உறுதியும் உடனழிய அவனை அழித்தொழிக்குமன்றே? இங்ஙனமே ஒருவர் நன்மையை அறிவற்ற கயவனுக்குச் செய்யின், அவரிடம் நன்மையைப்பெற்ற அவன், அதனால் கொண்ட வலிமையால் அந்நன்மை செய்தாரையே அழிக்கவும் முற்படுதலோடு, தான் தீச்செயல் புரிதலில் குறைவிலனாய் மேன்மேலும் தீமையே மிகுத்து, அந் நன்மை செய்தோனுக்கும் தீவினைப் பயனை எய்துவிக்கின்றான் என்று கூறப்படுவது காண்க.

இக்கருத்தை, ஒத்த பல பொருளோடு சார்த்தி மேலுமொரு நாலடி கூறுமாறு:

" மெல்லிய நல்லாருள் மென்மை அதுஇறந்து
ஒன்னாருள் கூற்றுட்கும் உட்குடைமை—எல்லாம்
சலவருள் சாலச் சலமே நலவருள்
நன்மை வரம்பாய் விடல்."

மெல்லியல்பு வாய்ந்த பெண்டிர்மாட்டு மென்மையாகப் பழகல் வேண்டும். பகைவரிடம் கூற்றுவனும் அஞ்சுமாறு வன்மையுடன் எதிர்நிற்க வேண்டும். வஞ்சகரிடம் தம் மனத்திடத் துள்ளதையெல்லாம் வெளியிட் டுரையாது கரவாய் ஒழுகல்வேண்டும். நற்குணம் நிறைந்த மேலோரிடத்துத் தாமும் நன்மையில் மேம்பட்டு நிற்க வேண்டும் என்று கூறப்பட்டவாறு காண்க.

'பெரியோர்க்குச் செய்த உதவி பெரும்பயன் அளிக்கும்' என்று கூறப்புகுந்த குறள்,

" உதவி வரைத்தன்(று) உதவி உதவி
செயப்பட்டார் சால்பின் வரைத்து."

என்று குறிக்கிறது. 'செய்யப்பட்ட உதவி, பொருள் கருதச் சிறிதாயிருந்தாலும், அது பெரியோரை யடைந்து பயன்படுதலை நோக்கின், அப்பயன் மிகப் பெரிதாகும்' என்று கூறுகிறது இக்குறள். இச்சிறந்த கருத்தை யாரு முணருமாறு எளிய சிறந்த உவமை கொண்டு உணர்த்தும் நாலடியைக் காண்க:

" உறக்கும் துணையதோர் ஆலம்வித்(து) ஈண்டி
இறப்ப நிழல்பயந் தாஅங் (கு)—அறப்பயனும்
தான்சிறி தாயினும் தக்கார்கைப் பட்டக்கால்
வான்சிறிதாப் போர்த்து விடும்."

ஈண்டுக் கூறப்படும் உவமை ஆலம் விதை. ஆலம் விதை நகநுனியால் பற்றி எடுக்கத் தகுமாறு சிறிதா யிருக்கின்றது. அது மண்ணில் கலந்து முளைத்துச் செடியாகி மரமானபொழுது, திரளான மக்கள் தன் னிடம் வந்து தங்கி யிருக்குமாறு பரந்த நிழலைக் கொடுத்து விரிந்து படர்ந்து நிற்கிறது. பெரியோர்க்குக் கொடுக்கும் பொருள் அளவு நோக்கச் சிறிதாக இருந் தாலும், அது பயன்கொடுக்கும் காலத்து மிகுபயன் கொடுக்கு மென்பதற்கு ஒத்த உவமை யன்றோ? பெரி யோர்க்குச் செய்த அறப்பயனின் மிகுதியை உணர்த்த வேண்டி, விண்ணும் சிறிதாம்படி அது பெருகும் என்று கூறப்பட்டது காண்க.

சான்றோர் குணத்தைக் கூறுமொரு குறள்,

> " இன்னாசெய் தார்க்கும் இனியவே செய்யாக்கால்
> என்ன பயத்ததோ சால்பு."

என்பது. 'தமக்குத் தீமை செய்தோர்க்கும் நன்மை செய்தலே சான்றோர்க்குச் சிறந்த குணமாம்' என்று குறிக்கின்றது இக்குறள்.

இக்கருத்தை இன்னும் ஒருபடி மேலாக எளிய முறையில் உரைக்கும் நாலடியைக் காண்க:

> " உபகாரம் செய்ததனை ஓராதே தங்கண்
> அபகாரம் ஆற்றச் செயினும்—உபகாரம்
> தாம்செய்வ தல்லால் தவற்றினால் தீங்கூக்கல்
> வான்தோய் குடிப்பிறந்தார்க் கில்."

'தாம் ஒருவனுக்கு முன்னேயே உதவிசெய்திருப் பவும், அதையும் நினைந்து பாராது, அவன் தமக்குத் தீங்கையே மிகுதியும் செய்தானாயினும்' என்று கூறி, அவன் செயும் இன்னாச் செயல் மிகுந்து தோன்றுமிடம்

காட்டப்பட்டது. தீங்கு, தவறிய வழியில் செல்லும் கயவர் மனத்தேயே தோன்றுமல்லது, நேரிய வழியில் செல்லும் பரியோர் மனத்தில் தோன்றல் இயல்பன்று என்று உணர்த்தித், "தவற்றிறுல் தீங் கூக்கல்" என்று கூறப்பட்டது காண்க. குறளில் "சால்பு" நிறை குணத்தை உணர்த்த குடிப்பிறப்பின் மிக விழுமிய மேம்பாட்டை "வான்தோய் குடி" என்று கூறி உணர்த்தியது நாலடி.

செய்ந்நன்றி மறவாமையின் விழுமிய மேம்பாட்டை அறிவுறுத்து மொருகுறள்,

> "கொன்றன்ன இன்ஞ செயினும் அவர்செய்த
> ஒன்றுநன் றுள்ளக் கெடும்."

என்பது. 'தம்மைக் கொன்றுலொத்த துன்பத்தை ஒருவன் செய்தாறுயினும், அவன் முன் ஒருகாலத்தில் தமக்குச் செய்த நன்றியை நினைப்பாராயின், அத் துன்பம் தோன்ருது' என்பதாம்.

இக்கருத்தை எளிய முறையில் மற்றொரு வகையாற் கூறும் நாலடியைக் காண்க:

> "ஒருநன்றி செய்தவற்(கு) ஒன்றி எழுந்த
> பிழைநூறும் சான்ரோர் பொறுப்பர்—கயவர்க்கு
> எழுநூறு நன்றிசெய்(து) ஒன்றுதீ தாயின்
> எழுநூறும் தீதாய் விடும்."

குறள், துன்பத்தின் கொடுமை மிகுதியைக் கூற, நாலடி, எண்ணின் மிகுதியைக் கூறி எளிய முறையில் உணர்த்தியது. இங்ஙனம் சான்ரோர்க்குள்ள குணத்தை எடுத்துரைத்து அதற்கு நேர்மாறுன கயவர் குணத்தையும் உடன்உணர்த்திச் சான்ரோர்க்குள்ள குணச் சிறப்பை மேம்படுத்திக் காட்டியது நாலடி.

நன்றி பாராட்டும் அம்மேம்பாடான குணத்தை எடுத்துரைக்கும் மற்றுமொரு குறள்,

> "தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்
> கொள்வர் பயன்தெரி வார்."

என்பது. பொருளளவாகத் தினையளவு நன்மையை ஒருவன் செய்தாலும், அது தனக்குக் கொடுத்த பயன் நோக்கிப் பனையளவாகக் கருதுவர் மேலோர் என்பதாம்.

மேலோரின் சிறந்த இக்குணத்தோடும் கீழோரின் இழிகுணத்தையும் உடன் எடுத்துக்காட்டி, அம் மேலோர் குணத்தைச் சிறப்பிக்கும் நாலடியைக் காண்க :

> "தினையனைத்தே யாயினும் செய்தநன் றுண்டால்
> பனையனைத்தா உள்ளுவர் சான்றோர்—பனையனைத்(து)
> என்றும் செயினும் இலங்கருவி நன்னாட
> நன்றில நன்றறியார் மாட்டு."

'பனையளவினதாகிய நன்மையை ஒருவன் நாடோறும் கீழோனுக்குச் செய்துகொண்டிருந்தாலும்' என்று கூறிக் கீழோனது கீழ்மையின் மிகுதியைக் குறித்து, முதலிரண்டடியில் கூறிய சான்றோரது மேம்பாடு தோன்றச் செய்தமை காண்க.

---

## ௧௬. உவமை

நாலடியுள் அமைந்த உவமை நயத்தை மேலே சில இடங்களில் கண்டோம். நாலடி உவமைகளை ஈண்டுத் தொகுத்துக் காண்பாம்.

### ௧. இயற்கைக் காட்சிகள்

பண்டைத் தமிழ்ப் புலவோர், இயற்கையோடுறைந்து இயற்கையை நுகர்ந்து, இயற்கை வாழ்வு நடத்தினோராதலின், அவர்கள் பல இடங்களில் தாங்கண்ட இயற்கைக் காட்சிகளையே உவமையாக அமைத்திருக்கின்றனர். அக்கால உலகம் செயற்கையிற் பெரிதும் புகாமல் இயற்கை யெழில்கொண்டு திகழ்ந்திருந்தது. குறிஞ்சியும், முல்லையும் தம் இயற்கையழகு கெடாது பொலிவுடன் விளங்கின.

குறிஞ்சி நிலத்தே பெருந்தோற்றத்துடன் விளங்கும் மலைமேல், வெண்ணிலவை வீசும் நிறைநிலா வந்தமைந்து காட்சியளிக்கும் தோற்றத்தைக் கண்டு மகிழ்ந்த புலவர் அத்தோற்றத்தை உவமையாக அமைக்கின்றனர்.

**மலைமிசைத் தோன்றும் மதியம்**

"மலைமிசைத் தோன்றும் மதியம்போல் யானைத்
தலைமிசைக் கொண்ட குடையர்."

பெருஞ் சிறப்பினதாகிய யானைமீது வரும் அரசனின் முடிமீது நிழற்றும் வெண்கொற்றக்குடைக்கு அக் காட்சியை உவமையாக அமைத்தனர்.

**மலையாடு மஞ்சு**

மற்றோரிடத்துப், பெருமைபெற விளங்கும் மலைமீது நீருண்ட மேகம் அழகுடன் உலவிநிற்க, அவ்வழகிய தோற்றத்தைக் கண்ட புலவர்,

" மலையாடு மஞ்சுபோல் தோன்றிமற் றாங்கே
நிலையாது நீத்து விடும்."

என்று கூறுகின்றனர். பரந்த இவ்வுலகத்தே பெருமையுடன் உளர்போல் காணப்பட்டுத் திடீரென இறந்தொழியும் மக்கள் உடலுக்கு அம்மேகத்தை உவமையாக அமைத்தனர். மலைமே லுலாவும் மேகம் அம்மலைமேல் நிலைபேறுடையதுபோல் காணப்பட்டு, அழகுடன் விளங்கிச், சின்னேரத்தில் மழையாகப் பெய்தோ, மேற்சென்றோ விடுகிறதன்றோ? பரந்த இவ்வுலகத்தில் ஒருவன் உடலும் ஓடியாடித்திரியுங்கால் சிறந்து விளங்கிச் சின்னாளில் அழிந்தொழிவதை இவ்வுவமையால் விளங்கவைத்தனர் புலவர்.

### விண்மீன் கூட்டம்

இருள்செறிந்த இராக் காலத்தே பரந்த வானிடத்தே ஒளிர்ந்து விளங்கி அழகுசெய்யும் விண்மீனின் கூட்டத்தைக் கண்டுகளித்த புலவர்,

" காலாடு போழ்தின் கழிகிளைஞர் வானத்து
மேலாடு மீனிற் பலராவர்."

என்று கூறி, அதை உவமையாக அமைத்தனர். ஒருவன் உடல்வலியும் செல்வவலியும் பெற்று உலகத்தே ஓடியாடி முயன்று சிறந்து விளங்கும்பொழுது சொந்தம் பாராட்டி அவனோடு கலந்து மகிழ்ந்தொழுகும் மக்கள், இராக்காலத்தே வானத்தே ஒளிர்ந்து விளங்கும் விண்மீன்களினும் பலராவர் என்றார் புலவர்.

### வானூர் மதியம்

அவ்வழகிய வானத்திடத்தே விண்மீன் கூட்டங்களை வென்று விளங்கும் வெண்ணிலவின் இன்பம்

நுகர்ந்த புலவர் மற்றோரிடத்து அதை உவமையாக அமைத்து,

> " வானூர் மதியம்போல் வைகலும் தேயுமே
> தானே சிறியார் தொடர்பு."

என்று கூறுகின்றனர்.

பரந்த வானத்திடத்தே விளங்கிச் செல்கின்ற நிறைநிலாவானது நாடோறும் குறைந்து தேய்தல் போல், சிறியோரிடத்துக் கொண்ட நட்பும் நாளாக ஆகத் தேய்ந்தொழியும் என்று குறித்தனர். இதற்கு மாறாகப் பெரியோர்மாட்டுக் கொண்ட நட்பு நாடோறும் வளர்ந்து பெருகும் என்று கூறி,

> " பெரியவர் கேண்மை பிறைபோல நாளும்
> வரிசை வரிசையா நந்தும்."

என்று வானத்தே தோன்றும் பிறை நிலவை உவமையாக அமைத்தனர்.

உலகம் முழுதுக்கும் வெண்ணிலவைக் கொடுத்துத் தானும் தனிச் சிறப்புடன் விளங்கிநிற்கும் இவ்வெண்ணிலவானது, உலகோரனைவர்க்கும் நன்மையே மிகுத்துத் தனிச் சிறப்புடன் விளங்கும் பெரியோர்க்கு உவமையாகக் கூறப்படுகிறது.

> " அங்கண் விசும்பின் அகல்நிலாப் பாரிக்கும்
> திங்களும் சான்றோரும் ஒப்பர்மன்—திங்கள்
> மறுவாற்றும் சான்றோர்அஃ தாற்றார் தெருமந்து
> தேய்வர் ஒருமா சுறின்."

ஈண்டு வெண்ணிலவினும் மேம்பட்டோராகப் பெரியோரைக் குறித்தனர்; வெண்ணிலா மறுவிளங்கி நிற்பச், சான்றோர் தம்மாட்டு மறுத்தோன்றின் உயிர் விட்டு ஒழிவாராதலின்.

## உ. பண்டைமக்கள் வழக்கங்கள் சில

நாலடியின் உவமைகள் பல பண்டைமக்கள் வழக்கங்களைப் புலப்படுத்தி நிற்கின்றன.

### குகைகளில் செல்வம் பொதிந்துவைத்தல்

"உடைய
பிலந்தலைப் பட்டது போலாதே நல்ல
குலந்தலைப் பட்ட விடத்து."

உடைய பிலமாவது பொன், வெள்ளி முதலிய செல்வங்கள் பொதியப்பெற்ற மலைக்குகை. அக்காலத்துச் செல்வங்களை மலைக்குகையுள் பொதிந்து வைக்கப் பட்ட செய்கை ஈண்டுக் காட்டப்படுகிறது. அம் மலைக்குகை, பல குணங்களும் நிறையப்பெற்ற மேலோர்க்கு உவமையாக வந்தது.

### குறிஞ்சி நில வாழ்க்கை

"சிலநாள் அடிப்படின்
கல்வரையும் உண்டாம் நெறி."

என்னும் உவமை மக்கள் குறிஞ்சிநில வாழ்க்கை மேற்கொண்டிருந்த தன்மையைக் குறித்து நிற்பதாகும். சிலநாள் நடப்பின் மலையிலும் பாட்டை தோன்றும் என்பது, சிலநாள் பழகினலேயே சிறியோர் பிறரிடம் அன்பு பாராட்டுவர் என்பதற் குவமையாக வந்துள்ளது.

### காடு கெடுத்துப் புனமாக்கல்

"புனத்து
வெறிகமழ் சந்தனமும் வேங்கையும் வேமே
எறிபுனம் தீப்பட்டக் கால்."

என்ற உவமை முற்காலத்து மக்கள் காடு கெடுத்துப் புனமாக்கிய செயலைக் குறிப்பித்து நிற்கிறது. பிற

மரங்கள் நடுவேநின்ற உயர்ந்த சந்தனமரமும் வேங்கை மரமுங்கூட அம்மரங்களோடு உடன் வெட்டப்பட்டு எரிக்கப்படுதல் காட்டப்படுகிறது. தீயோரைச் சேர்ந்த நல்லோரும் கேட்டைவர் என்பதற்கிஃதுவமை யாக வந்ததாகும்.

வெறியாடல்

" வெறியயர் வெங்களத்து வேல்மகன் பாணி
முறியார் நறுங்கண்ணி முன்னர்த் தயங்க
மறிகுள குண்டன்ன மன்னு மகிழ்ச்சி
அறிவுடை யாளர்கண் இல்."

என்றவிடத்துக் குறிஞ்சிநிலக் கடவுளாகிய முருகனை வழிபட வேண்டி, வேல் கைக்கொண்ட வேலன் என் போன், ஆட்டைப் பலிகொடுத்து வெறியாட்டெடுத் தல் காட்டப்படுகிறது. பலியூட்டப்பெறும் ஆட்டின் கழுத்தில் இடுதற்காக, இலை இடை யிடையே வைத்துக் கட்டப்பட்ட பூமாலையை வேலன் கையில் கொண்டிருப்பதும், அவ்விலையைப் பலியூட்டப் பெறு வதற்கு வந்துநின்ற ஆடு கண்டு மகிழ்ந்து, அது நல்லுணவாமென்று கொண்டு தின்னப் புகும் இயல் பும் ஈண்டுக் காட்டப்படுகின்றன. உலகமக்களும் உலகப் பொருள்களை நிலையான இன்பமாகக் கொண்டு நுகர்கின்றார்கள் என்பதற்கு இஃது உவமையாக வந்ததாகும்.

வாள்கூத் தியற்றல்

" வாளாடு கூத்தியர் கண்போல் தடுமாறும்
தாளாளர்க் குண்டோ தவறு."

என்ற உவமை அக்காலத்துச் சில பெண்கள் வாள் கைக்கொண்டு சுழற்றிக் கூத்தியற்றி வயிறு வளர்த்து

வந்த தன்மையைப் புலப்படுத்தி நிற்பதாகும். அவர் அங்ஙனம் கூத்தியற்றுங்கால் அவர் கண்கள் நாற் புறமும் சுழன்று தொழில் புரியும் இயற்கை ஈண்டுக் காட்டப்படுகிறது. தொழின் முயற்சியுடையார் ஒருவர் அதனினின்று நீங்காது குறிக்கொண்டு முயலும் இயல் புக்கு அப்பெண்டிர் கண்கள் உவமையாக வந்தன வாகும்.

பன்றிக்குத் தொட்டியிடல்

*" பன்றிக்கூழ்ப் பத்தரில் தேமா வடித்தற்றால்*
*நன்றறியா மாந்தர்க்(கு) அறத்தா றுரைக்குங்கால்."*

என்பது பன்றி வளர்ப்போர் அதற்குத் தொட்டியிட்டு அதில் கூழூற்றி அதனை வளர்த்தலைத் தெரிவித்து நிற்கிறது. பன்றிக்குக் கூழூற்றும் அத்தொட்டியில் தேமாம்பழத்தின் சாற்றைப் பிழிவது நன்மையறியாக் கயவருக்கு அறவுரையை மேலோர் சொல்லுதற்கு உவமையாய் வந்தது.

வேப்பிலையுள் வாழை பழுக்கப்போடல்

*" வேம்பின் இலையுள் கனியினும் வாழைதன்*
*தீஞ்சுவை யாதும் திரியாதாம்."*

என்ற இடத்து, முற்றிய வாழைக்காயை வேப்பிலையுள் பழுக்கப்போடல் சொல்லப்படுகிறது. இஃதக்காலத்து வழக்கம்போலும். நல்லோர் தீயோர் நடு விருப்பினும் மனம் மாறுபடார் என்பதற் குவமையாக இது வந் துள்ளது. வேப்பிலையுள் கனியினும் வாழை தன் இனிய சுவை கெடாதன்றே?

புது மட்பாண்டத்தில் பாதிரிப்பூ இட்டுவைத்தல்

*" ஒண்ணிறப் பாதிரிப்பூச் சேர்தலால் புத்தோடு*
*தண்ணீர்க்குத் தான்பயந் தாங்கு."*

என்பது பாதிரிப்பூவைத் தன்னகத்தே பெற்றுவைத்திருந்த புதிய மட்பாண்டம், பின் தன்னைச் சேர்ந்த நீருக்கும் அப்பூவின் மணத்தைக் கொடுக்கும் என்று சொல்கிறது. இதனால் அக்காலத்து மக்கள் புதிய மட்பாண்டத்தில் பாதிரிப்பூவை இட்டு வைத்திருந்து, பின் அப்பாண்டத்தில் நீர் நிறைப்பர் என்பதும், அப்பாண்டத்துள்ள நீர் அப்புதிய பாண்டத்தின் சுடு நாற்றம் நீங்கி நன்மணம் கமழ்ந்து கொண்டிருக்குமென்பதும் பெறப்படுகின்றன. கல்வியறிவற்றவரும் கற்ற பெரியோரைச் சேரின் நல்லறிவு பெறுவர் என்பதற்கு இஃதுவமையாக வந்ததாகும்.

**ஆமையை வேவவைத்தல்**

"கொல்லனர் உலைஏற்றித் தீமடுப்ப ஆமை
நிலையறியா(து) அந்நீர்ப் படிந்தாடி யற்றே."

என்ற உவமை அக்காலத்து ஊனுண்போர் ஆமையைப் பற்றிக் கொணர்ந்து, அதை உலையிலிட்டு வேவவைத்துண்ணும் வழக்கத்தைக் காட்டி நிற்கிறது. அவ்வாமை, தான் எரிகின்ற அடுப்பின்மீதுள்ள உலைநீரில் இருப்பதை யுணராது, அந்நிறைநீருள் மூழ்கி மூழ்கி விளையாடும் இயல்பும் ஈண்டுக் காட்டப்படுகிறது. உலக மக்கள் தாம் எக்கணத்தும் இறக்க நிற்கும் நிலையை மறந்து, உலகத் தொடர்பில் கரையற்ற பற்று வைத்து அதையே நிலைத்த இன்பமாகக் கருதியொழுகும் பேதைமைக்கு இஃதுவமையாக வந்ததாம்.

## ௫. சில உண்மைகள்

இனிச் சில உவமைகள், பொருள்களின் மாட்டமைந்த சில அரிய உண்மைகளைப் புலப்படுத்தி நிற்கின்றன. அவற்றைக் காண்க:

விரியனோடு சேர்ந்த நாகம் இறக்கும்

"தெரிவுடையார் தீயினத்த ராகுதல் நாகம்
விரிபெடையோ டாடிவிட் டற்று."

என்பது நாகம் விரியனோடு சேரின் மாண்டொழியும் என்ற உண்மையைப் புலப்படுத்தி நிற்கிறது. நல்லோர் தீயோரைச் சேரின் கெட்டொழிவர் என்பதற் கிஃது உவமையாக வந்ததாகும்.

இடியொலி கேட்ட நாகம் அஞ்சும்

"விரிகிற நாகம் விடருள தேனும்
உருமின் கடுஞ்சினம் சேணின்றும் உட்கும்."

என்ற உவமை இடியொலியைக் கேட்டு நாகம் நடுங்கும் என்னும் உண்மையைப் புலப்படுத்தி நிற்கிறது. இடியொலி மிகுந்த தொலைக்கப்பால் தோன்றினும், நாகம் மலை முழைஞ்சுள் வாழினும், அந் நாகம் அஞ்சும் தன்மை வலியோரைச் சேர்ந்திருப்பினும் மேலோர் வெகுண்டால் சிறியோர் அழிவர் என்பதற் குவமையாக வந்துள்ளது.

நீறு மந்திரித்திடின் நாகம் நஞ்சவியும்

"இடுநீற்றால் பையவிந்த நாகம்போல்."

என்ற உவமை மந்திரித்து நீறிடப் பெறின், நாகம் நஞ்சவியும் என்ற உண்மையைப் புலப்படுத்துகிறது. மந்திரித்து நீறிட்டமை காரணமாக நாகம் நஞ்சவியல், மேலோர் தம் உயர்குடிப் பிறப்புண்மை காரணமாகப் பிறர்கூறும் தீமொழிகளைக் கேட்பினும் வெகுளாது பொறுமை மேற்கொண் டொழுகற்கு உவமையாயிற்று.

வேங்கை இடம்பட வீழின் உண்ணாது

"கடமா தொலைச்சிய கானுறை வேங்கை
இடம்வீழ்ந்த துண்ணா திறக்கும்."

என்னும் உவமை, புலியானது யானை முதலிய எதிர்ப் பட்ட விலங்குகளை வலப்புறமாக அடித்து வீழ்த்தி யுண்ணும் என்றும், அவை இடப்புறமாக வீழின் அவற்றை யுண்ணாது கழியுமென்றும் குறிப்பிடுகின் றது. பெரியோரும் மானத்தோடு தொழில் புரிந்து வாழ்வரே யன்றி, மான மழியப் பெற்றுப் பெரும் பயன் வருவதாயிருந்தாலும், அதை விரும்பார் என் பதற்கிஃது உவமையாயிற்று.

## ச. பொருளியல்புகள்

### சிறுசெடிகள்

சிறு செடிகளில் முள்ளி, வழுதுணை, சுரை, குவளை, அல்லி, நெட்டி என்பன சில உவமைகளாய் வந்துள்ளன.

### முள்ளியும் வழுதுணையும்

இவற்றின் காய் திரட்சி பொருந்த இருக்கும் தன்மை காட்டப்படுகிறது.

"வட்டும் வழுதுணையும் போல்வாரும் வாழ்வாரே
பட்டும் துகிலும் உடுத்து."

அறிவற்ற செல்வர் சிலர் உலகில் எல்லா நலனும் எய்தப் பெற்று ஒரு குறையுமின்றித் தின்று பெருத்து உடல் மெலிவின்றி மழமழவென் றிருத்தலை நம் கண் முன் எடுத்துக்காட்ட, இக் காய்களின் திரட்சியை உவமையாக எடுத்துக்காட்டினர் புலவர்.

### சுரை

சுரையின் விதை வெண்ணிறத்ததாய், பல்லின் வடிவினதாய் விளங்கும் இயற்கையை ஒரு நாலடி குறிப்பிடுகிறது:

" வென்றிப் பொருட்டால் விலங்கொத்து மெய்கொள்ளார்
கன்றிக் கருத்தெழுந்து காய்வாரோ(டு)—ஒன்றி
உரைவித் தகமெழுவார் காண்பவே கையுள்
சுரைவித்துப் போலும்தம் பல்."

சுரைவிதை வாயில் விளங்கும் அழகிய பல்லுக்கு உவமையாகாது, வாயினின் றுதிர்ந்து கையிற் பெற்று வைத்த பல்லுக்கு உவமையா யமைவது பெரிதும் பொருந்தியதாம்.

**பேய்ச்சுரை**—இதன் காய் கைக்கும் இயல்பு சொல்லப் படுகிறது.

" உப்பொடு நெய்பால் தயிர்காயம் பெய்தடினும்
கைப்பறு பேய்ச்சுரையின் காய்."

ஆகவே, அது உணவுக்காகாதென்பதும் பெறப் படும். இன்சுவை மிகுக்கும் பல பொருள்களைக் கூட்டிச் சமைத்தாலும் பேய்ச்சுரை தன் கைக்கும் தன்மை திரியாதென்று சொல்லப்படுகிறது. பரந்து பட்ட அறிவு நூற்பொருள்கள் முழுதையும் கற்று லும் இயற்கையே செருக்கித் திரியும் கீழோர் அடக்கம் பூண்டு பணிவு இலராவர் என்பதற் குவமையாக இது வந்ததாகும்.

**குவளையும் ஆம்பலும்**

குவளை செங்கழுநீர் என்றும், ஆம்பல் அல்லி யென்றும் கூறப்பெறும். செங்கழுநீர் மணமுள்ள தென்றும் அல்லி சிறந்த மணமற்றதென்றும் குறிக்கப் படுகின்றன.

" விரிநீர்க் குவளையை ஆம்பல்ஒக் கல்லா
பெருநீரார் கேண்மை கொளினும்நீ ரல்லார்
கருமங்கள் வேறு படும்."

பெரியோர் நட்பைப் பெற்ருலும் சிறியோர் தம் மியல்பு குன்ருர் என்பதற் குவமையாக இவை வந்தமைகாண்க.

நெட்டி

" நீருட் பிறந்து நிறம்பசிய தாயினும்
ஈரம் கிடையகத்(து) இல்லாகும்.''

என்னும் உவமை, நெட்டி அகத்தே ஈரமற்று (பசையற்று) வறண்ட தன்மையதாய் இருக்கும் இயல்பைக் கூறி நிற்கிறது. இதனுலேயே இது இலேசாக மிதக்குந் தன்மை வாய்ந்ததாயிற்று. இது நீர் நடுவே நின்றும், மேற்புறம் நீர்ச் சேர்க்கையால் பசுமைபெற்று விளங்கினும், உள் ஈர மற்ற தன்மை பெரிதும் உணரத்தக்கது. அன்பு பெருகப் பலர்க்கும் உதவி வாழத்தக்க சிறந்த செல்வத்தைப் பெற்றுவைத்திருந்தும், அச்செல்வத்தை அவ்வகையில் பயன்படுத்தி வாழ்ந்து மேம்படாது, அருள் இரக்கமற்ற வன்கணுளராய்ப் பெரும்பயனின்றியே கழியும் கீழோர்க்கு உவமையாக இது வந்ததாகும்.

நீர்ப்பூவும் நிலப்பூவும்

மரத்தில் அரும்பாகி மொட்டாகிப் பூக்கும் பூக்களெல்லாம் மறுபடியும் குவிவதில்லை. நீரில் அரும்பி மொட்டாகிப் பூக்கும் பூக்கள் பின் குவிகின்றன என்னும் இயல்பை ஓர் உவமையாகக் கூறுகிருர். மகிழம்பூ பன்னீர்ப்பூ முதலியன மரத்திற் பூப்பன. நீர்ப்பூக்கள் தாமரை அல்லி முதலியன. மகிழம்பூ பன்னீர்ப்பூ முதலியன பூத்தபின் கூம்பாதே உளநாள் வரை நிலைபெற்றுப் பின் வாடி வீழ்தலும், தாமரை அல்லி முதலியன பூத்தபின் இரவு வரவும் பகல் வரவும்

கூம்பிப் பின் வாடுதலும் இயற்கையாம். இருவர் நண்பு பாராட்டிப் பழகியபின் அந் நட்பு மாறுபட்டொழுகுதல் கூடாதென்றுணர்த்த இவ்விரண்டும் உவமையாக வந்தனவாகும்.

" கோட்டுப்பூப் போல மலர்ந்துபின் கூம்பாது
வேட்டதே வேட்டதாம் நட்பாட்சி—தோட்ட
கயப்பூப்போல் முன்மலர்ந்து பின்கூம்பு வாரை
நயப்பாரும் நட்பாரும் இல் ''

கரும்பு

கரும்பு பல இடங்களில் உவமையாக வந்துள்ளது. கரும்பு இன்சுவையிற் சிறந்தமைகொண்டு அது உவமையாக ஆளப்படுகிறது.

" கனைகடல் தண்சேர்ப்ப கற்றறிந்தார் கேண்மை
நுனியின் கரும்புதின் றற்றே.''

என்று கூறுகிறது ஒரு நாலடி. கரும்பு அடிநோக்கித் தின்றுகொண்டு செல்ல மேன்மேலும் இன்சுவை முதிர்ச்சியுற்று அடிப்புறம் மிக இன்சுவை பொருந்தியிருப்பதைக் காட்டுகின்றது இந் நாலடி.

இதே கருத்தை மற்றொரு நாலடி,

" கருத்துணர்ந்து கற்றறிந்தார் கேண்மைஎஞ் ஞான்றும்
குருத்திற் கரும்புதின் றற்றே.''

என்று கூறுகிறது.

கரும்பைத் தரையிலடித்தும் வாயில்வைத்துக் கடித்தும் இன்சுவை நுகரும் மக்களியற்கையை யமைத்து ஒருநாலடி,

" கடித்துக் கரும்பினைக் கண்தகர நூறி
இடித்துநீர் கொள்ளினும் இன்சுவைத்தே யாகும்

வடுப்பட வைதிறந்தக் கண்ணும் குடிப்பிறந்தார்
கூறுர்தம் வாயிற் சிதைந்து.''

என்று கூறுகிறது.

பெரியோர்தம் உளம் நையுமாறு கொடுஞ்சொல் வழங்கினுலும், அவர் தம் இனிய பான்மையில் மாருது நிற்கும் இயற்கையை விளக்கவந்த இவ்வுவமை மிகப் பொருந்தியது.

கரும்பை ஆலேயிலிட்டு ஆட்டிக் கோது வேருக்கி வெல்லமெடுக்கு மியற்கையை உவமையாக அமைக்கின்றது ஒரு நாலடி:

" கரும்பாட்டிக் கட்டி சிறுகாலேக் கொண்டார்
துரும்பெழுந்து வேங்கால் துயராண் டுழவார்
வருந்தி உடம்பின் பயன்கொண்டார் கூற்றம்
வருங்கால் பரிவ திலர்.''

உடம்பின் பயன் கொண்டபின் உடம்பு கழிக்கத் தகுந்தது என்ற உண்மையை இவ்வுவமைமூலம் நன்கு தெளித்தமை காண்க.

இதே கருத்தை மற்ருெரு நாலடி கூறுமாறு:

" கரும்பூர்ந்த
சாறுபோல் சாலவும் பின்னுதவி மற்றதன்
கோதுபோல் போகு முடம்பு.''

இக் கருப்பங்கோதையும் உவமையாக அமைக்கின்றது ஒரு நாலடி.

" கல்லாதார்
சேதனம் என்னும்அச் சேறகத் துண்மையால்
கோதென்று கொள்ளாதாம் கூற்று.''

இத்தகைச் சிறந்த கரும்பின் பூ மணமற்ற தன்மையை எடுத்துக்காட்டி அதை உவமையாக அமைக்கின்றது ஒரு நாலடி.

"ஈங்கரும் பீன்ற திரள்கால் உழையலரி
தேங்கமழ் நாற்றம் இழந்தாஅங்(கு)—ஓங்கும்
உயர்குடி யுட்பிறப்பின் என்னும் பெயர்பொறிக்கும்
பேராண்மை இல்லாக் கடை."

உயர்குடியுட் பிறந்தோன்மாட்டு ஆண்மையற்ற தன்மை யமைந்தவழி அது இனிய கரும்பின்பூ மணமற்ற தன்மையைப் பெற்றது போலாம் என்று கூறி உவமை கொண்டது காண்க.

**மரங்கள்**

இனி, மரங்களில் கமுகு, தெங்கு, பனை, ஆல், காஞ்சிரை என்பன உவமையாய் அமைந்துள்ளன.

**கமுகு, தெங்கு, பனை**

இம்மூன்றின் இயல்பையும் உவமையாக அமைத்து ஒரு நாலடி கூறுகிறது. கமுகு தவறாமல் நாடோறும் நீர் இறைக்கப் பயன் கொடுக்கும் என்று குறிக்கப்படுகிறது. தென்னை நாடோறும் நீர் இறைக்க வேண்டுவதன்றி, இடையிடையே நீர் இறைக்கவே பயன்கொடுக்கும் என்று சொல்லப்படுகிறது. பனை, எந்நாளும் நீரிறைக்க வேண்டுவதன்றிப், பதம்பெற ஊன்றுங்காலத்து மட்டும் நீர்பெற்றுப் பயனளிக்கும் தன்மைத்தென்று கூறப்படுகிறது. இவை மூன்றும் தவறாது நன்மை செய்துகொண்டிருப்ப நண்பு பாராட்டும் கடையாய கீழோர்க்கும், இடையிடையே நன்மை செய்ய நண்புபா ராட்டும் இடையாய மக்கட்கும், ஒரு நன்றி செயினும் அதையே நினைந்து என்னும் நண்பு பாராட்டும் தலையாய மேலோர்க்கும் உவமையாக வந்துள்ளன.

"கடையாயார் நட்பிற் கமுகனையர் ஏனை
இடையாயார் தெங்கின் அனையர்—தலையாயார்
எண்ணரும் பெண்ணைபோன்(று) இட்டஞான்(று)இட்டதே
தொன்மை யுடையார் தொடர்பு."

ஆல்

ஆலின் இயற்கை பெரிதும் வியத்தற்குரியதா யிருக்கின்றது. பெரு மக்கட் கூட்டமே தன்னிழல் மாட்டு வந்து தங்கியிருக்குமாறு மிகுந்த நிழலைக் கொடுத்துத் தான் ஒன்றேயாயினும் பரந்துபட்டு உயர்ந்து பெருமரமாய் வளரும். ஆல மரமானது முளைத்தற்குக் காரணமாயிருக்கின்ற அதன் விதை நகநுனியால் கிள்ளியெடுக்கத்தக்க நுண்மையதாயிருத் தலை நோக்கப், பெரிதும் வியப்பை விளக்குமொன் றன்றே? இச்சிறந்த இயற்கையை உவமையா யமைக் கின்றது நாலடி.

"உறக்கும் துணையதோர் ஆலம்வித்(து) ஈண்டி
இறப்ப நிழற்பயந் தாஅங்(கு)—அறப்பயனும்
தான்சிறி தாயினும் தக்கார்கைப் பட்டக்கால்
வான்சிறிதாப் போர்த்து விடும்."

பெரியோர் ஒருவர்க்குச் செய்யும் அறச்செய லானது பொருளளவு காரணமாகச் சிறிதாயிருந் தாலும், அதனால் பெரியோர் பயனடைந்தமையின், அச்சிறிய அறச்செயலின் பயன் செய்தானை யடையும் போது, மிகப் பெரிதாக வளர்ந்து நிற்கும் என்பது இவ்வுவமைகொண்டு விளக்கப்பட்டவாறு காண்க.

எட்டி

இது காஞ்சிரை என்று சொல்லப்படும். இதன் காயின் சிறந்த இயற்கையான கைக்கும் இயல்பு காட்டப்படுகிறது.

" குய்த்துவையார் வெண்சோறே யாயினும் மேவாதார்
கைத்துண்டல் காஞ்சிரங் காய்.''

சிற்றுயிர்கள்

இனிச், சிற்றுயிர்களில் ஈயின் இயல்பு பலவிடத்து உவமையாக ஆளப்படுகிறது. ஈ கண்ணிற்குத் தெரியும் சிற்றுயிர்களில் கடைப்பட்டதென்ற கருத்தால் ஒரு நாலடி உவமையாய் அமைகின்றது

" மதித்திறப் பாரும் இறக்க மதியா
மிதித்திறப் பாரும் இறக்க—மிதித்தேறி
ஈயும் தலைமேல் இருத்தலால் அஃதறிவார்
காயும் கதமின்மை நன்று.''

பெரியோரின் மாண்புணராத கீழோர்களுக்கு ஈயை உவமையாக அமைத்தமை காண்க. அக்கீழோரைச் சிற்றுயிரான ஈயை யொப்ப மதித்து, அவர் மாட்டுச் சினங் கொள்ளாமையே அறிவுடைமையாம் என்பது குறிக்கப்பட்டதாம்.

ஈ இழிந்ததையே விரும்பும் இயற்கையை எடுத்துக் காட்டி, அவ்வியல்பை உவமையாக அமைக்கின்றது ஒரு நாலடி.

" பொழிந்(து) இனிது நாறினும் பூமிசைதல் செல்லா(து)
இழிந்தவை காமுறூஉம் ஈப்போல்—இழிந்தவை
தாங்கலந்த நெஞ்சினார்க்(கு) என்னுகும் தக்கார்வாய்த்
தேன்கலந்த தேற்றச்சொல் தேர்வு.''

இனிய பூவை விடுத்து இழிந்த பொருள்களையே சூழ்ந்து மொய்க்கும் ஈ, நல்லோரின் மேலான அறிவுரையைக் கேளாது, தம் மனம் விரும்பியவாறொழுகும் கீழோர்க்கு உவமையா யமைந்தது.

இவ்வீயின் சிறகு மென்மைக்கு எடுத்துக்காட்டாகக் காட்டப்படுகிறது.

"ஈச்சிற கன்னதோர் தோலறினும் வேண்டுமே
காக்கை கடிவதோர் கோல்."

நம் உடல்மீதுள்ள ஈச்சிறகன்ன மென்மையான மேந்தோல் கெட்டாலும், புண்ணுண்டாகி ஊறு செய்வதை யுணர்த்தவேண்டி, அப்புண் காக்கையாலும் கொத்தியுண்ண விரும்பத் தகுந்ததென்று அதன் இழிவு மேம்படுத்துரைக்கப்பட்டதாம்.

நுண்மைக்கு எடுத்துக்காட்டாக ஈயின் கால் சொல்லப்படுகிறது.

"ஈக்கால் துணையும் உதவாதார் நட்பென்னும்."

"ஈக்காலளவு பொருள்தானும் தன்னொடு பழகியார்க்குக் கொடாதவர் நட்புத்தான் என்ன நட்போ" என்று கூறியவாறு காண்க.

தேனீயும் தேன்வண்டும்

தேனீ, தான் ஈட்டிவைத்த தேனை மக்கள் கொள்ளத், தான் வருந்தி முயன்றதன் பயன் பெறுதுபோம் சிறந்த இயற்கை உவமையா யமைக்கப்படுகிறது.

"உடாஅதும் உண்ணுதும் தம்முடம்பு செற்றும்
கெடாஅத நல்லறமும் செய்யார்—கொடாஅது
வைத்தீட்டி னாரிழப்பர் வான்தோய் மலைநாட
உய்த்தீட்டும் தேனீக் கரி."

செல்வத்தை ஈட்டுதலையே செய்து அதன் பயன் கொள்ளாத கீழோர்க்குச் சிறந்த உவமையே யன்றோ? தேன்வண்டு பூக்களை நாடியே செல்லும் இயற்கையைப் புலப்படுத்தி,

"ஆர்த்த பொறிய அணிகிளர் வண்டினம்
பூத்தொழி கொம்பின்மேற் செல்லாவாம்."

என்று வருமாறும் காண்க.

செல்வந் தொகுத்து வைத்திருக்கும் செல்வரையே சுற்றித் திரியும் உலக மக்கட்கு இத்தேன் வண்டுகள் பொருந்திய உவமையாயின.

இத்தேன் வண்டுகள் ஓய்வொழிவில்லாமல் சுறு சுறுப்பாகப் பல பூக்கள்தோறும் விரைந்து சென்று தேனுண்டு சுற்றித் திரியும் இயற்கையைக் காட்டி ஓருவமை,

> " வண்டாய்த்
> திரிதருங் காலத்துத் தீதிலிரோ என்பார்
> ஒருவரும் இவ்வுலகத் தில்.''

என்று வருமாறும் காண்க.

வறுமைக் காலத்துச் சென்ற இடமெல்லாம் முட்டுப்பாடுற்றுத் தன்குறை முடிக்க ஓடியாடிச் சுற்றித் திரியும் ஒருவனுக்குத் தேனை நாடித் திரிந்து கொண்டேயிருக்கும் இவ்வண்டு சிறந்த உவமையா யிற்று.

எறும்பு

> " ஆகா தெனினும் அகத்துநெய் உண்டாகில்
> போகா தெறும்பு புறம்சுற்றும்.''

என்னும் உவமை எறும்பின் இயற்கையைக் காட்டி நிற்கிறது. நெய் நிறைந்த ஏனம் இறுக மூடப்பெற்றுப் பாதுகாவலாக வைக்கப்பட்டிருந்தாலும், மோந்துண ரும் உணர்ச்சியில் மேம்பட்ட எறும்புகள் மணத்தால் அவ்வேனத்துள் நெய் உளதாவதை யுணர்ந்து, அதனுள் புகக் கூடாது போயினும், அந்நெய்ம் மணத் தால் இழுக்கப்பட்ட பேருணர்ச்சியால், அவ்வே னத்தை விட்டு நீங்காமல், அதனுள் நுழைவதற்கு நாற்புறமும் ஓடியாடிச் சூழும் இயற்கை ஈண்டுக்

கூறப்படுமாறு காண்க. உலகத்துச் செல்வர் சிலர் ஈயாத உலோபியாயினும், அவர்மாட்டு எங்ஙன மேனும் பொருள்பெறுதல் கருதியே மக்கள் பலர் சூழ்ந்து திரியும் இயற்கைக்கு இது பொருந்திய உவமை யாய் வந்தது.

தேரை

"செழும்பெரும் பொய்கையுள் வாழினும் என்றும்
வழும்பறுக்க கில்லாவாம் தேரை."

என்னும் உவமை, தேரை நீர்நிறைந்த பொய்கை யிடத்தே வாழப்பெறினும், தன்மேற் படியும் பாசியை நீக்கிக்கொள்ளும் இயல்பிற் றன்று என்று புலப்படுத்து கின்றது. அஃகியகன்ற அறிவு நுட்பத்தைப் பெரு தோர் அரும் பெரு நூல்கள் பலவற்றைக் கற்ருலும், அந்நூற்பொருளை உள்ளவாறு முழுமையும் உணர்ந் தறிந்து மேம்படும் வலியற்றவராவர் என்பதற் குவமை யாக இது வந்துள்ளதாகும்.

மலங்கு

இது நீரில் வாழும் ஓர் உயிர்ப் பொருள். இது விலாங்குமீன் என்றும் சொல்லப்படும். இதன் தலை பாம்பின் தலைபோல இருக்கும்.

"பாம்பிற் கொருதலை காட்டி ஒருதலை
தேம்படு தெண்கயத்து மீன்காட்டும்—ஆங்கு
மலங்கன்ன செய்கை."

என்னும் உவமை, விலாங்கு மீன், தான் நீரிலே திரியும்போது பாம்பை எதிர்ப்படின் தன் தலைப் புறத்தைப் பாம்புக்குக் காட்டித் தானும் ஒரு பாம்பு போல் நடித்து அப்பாம்புக்குத் தப்பியும், மீன்களை எதிர்ப்படின், தன் பின்புறத்தைக் காட்டி அம்மீன்க

ளோடு சுற்றித் திரிந்து அம்மீன்களைப் பற்றித் தின்றும் செல்லும் இயல்பினதாவதைத் தெரிவிக்கின்றது. இது பொதுமகளிர் செயலுக்கு உவமையாயிற்று.

**பறவைகள்**

இனிப் பறவைகளைக் காண்பாம். பறவைகளுள் காகம், கழுகு, கோழி, அன்றில், அன்னம் என்பன உவமைகளாய் அமைந்துள்ளன.

**காகம்**

காகம் கூடியுண்ணும் இயற்கை ஓரிடத் துவமை யாக அமைகிறது.

"உண்டாய போழ்தின் உடைந்துழிக் காகம்போல்
தொண்டா யிரவர் தொகுபவே."

'உடைந்துழி' என்றது உயிர்ப் பொருள்கள் உயிர் போயவிடத்து என்றவாறு. பிணங்கண்டவிடத்தே காகம் கூட்டமாய்க் கூடியிருந்துண்ணும் இயற்கை காட்டப்பட்டதாம். செல்வரை மக்கள் சூழ்தற்கு இஃது உவமையாயிற்று.

**கழுகு**

கழுகு பிணத்தையே விரும்பும் இயற்கை சொல்லப் படுகிறது.

"தீத்தொழிலே கன்றித் திரிதந்து எருவைபோல்
போத்தறார் புல்லறிவி னார்."

கீழோர்க்கு இஃது உவமையானது காண்க.

**கோழி**

"கப்பி கடவதாக் காலைத்தன் வாய்ப்பெயினும்
குப்பை கிளைப்போவாக் கோழிபோல்."

என்னும் உவமை கோழியின் இயல்பைத் தெரிவிக்கின்றது. கோழி வளர்ப்போர் நாடோறும் தவருமல் குறித்த நேரத்தில் அரிசி நொய் முதலியவற்றைத் தூவி அவற்றிற்கு உணவாக அளித்தாலும், அவை கொண்டே கோழி மனமமைந்திருக்காமல், தெருப்புறத்தே உள்ள குப்பை மேடுகளிற் போய்த் தன் காலால் சீத்து ஆண்டுப் பெறும் தானிய மணிகளையும் புழுப் பூச்சிகளையும் தம் அலகால் கோதி யுண்பதில் தவறுவதில்லை என்னும் இயல்பு ஈண்டுப் புலப்படுத்தியவாறு காண்க. அறிவுடை மேலோர் கீழோர்க்கு நூற்பொருளை விரித்துரைத்து அறிவு கொளுத்தினும், அக்கீழோர் தாம் மனம் விரும்பியதையே செய்தொழுகுவர் என்பதை விளக்க இஃது உவமையாக வந்தது.

**அன்றில்**

அன்றிற் பறவையுள் ஆணும் பெண்ணும் ஒன்றை விட்டொன்று பிரியாது வாழும் சிறந்த இயற்கை சொல்லப்படுகிறது.

> "பொத்தநூற் கல்லும் புணர்பிரியா அன்றிலும்போல்
> நித்தலும் நம்மைப் பிரியலம் என்றுரைத்த
> பொற்றெருடி."

'உரைத்த பொற்றெருடி' ஈண்டுப் பொதுமகள் என்க.

**அன்னம்**

இப்பறவை இக்காலத்துக் காணப்படாவிடினும் முற்காலத்திருந்தன வென்பது பல்லாற்ருனும் துணியப்படுகின்றது. இக்காலத்தும் கைலைப் பயணம் சென்று வந்தோர் சிலர் ஆண்டுள்ள மானச சரோவர்

என்னும் ஏரியில் அன்னப் பறவைகள் வாழ்வதாகவும், அவை பிற உயிர்களைப் பிடித்துத் தின்னுமல், பாசி இலை முதலியவற்றைத் தின்னும் இயல்பின வென்றும், அவற்றுள் வெண்மை நிறம் சாம்பல்நிறம் முதலிய பல நிறங்கொண்டன இருக்கின்றன வென்றும் கூறு கின்றனர். அன்னமேயன்றி, முற்காலத்து வாழ்ந் திருந்த பல உயிரினங்கள் நிலவுலகின் வெப்ப தட்ப மாறுதலால் பெருக்கமற்று மாண்டொழிந்தன வென் பது அறிஞர் கண்ட உண்மையாகும். அவைகளுள் ஒன்ருக அன்னம் கருதப்படல் பொருந்தியதாம். மாதர் நடைக்குப் பண்டைய புலவர் அன்னத்தின் நடையை உவமை கூறினர். அன்னத்தின் தூவி மிக மென்மையானதாகப் பண்டைத் தமிழிலக்கியங்களில் பலவிடத்தும் பேசப்படுகின்றது.

> " அனிச்சமும் அன்னத்தின் தூவியும் மாதர்
> அடிக்கு நெருஞ்சிப் பழம்."

என்று மென்மையுட் சிறந்தனவாக அனிச்ச மலரை யும் அன்னத்தின் தூவியையும் எடுத்துக்காட்டினுர் வள்ளுவர். இவ்வன்னத்தின் தூவியால் மெத்தை இயற்றியிருந்தனர் பண்டைத் தமிழர்.

> " துணைபுணர் அன்னத் தூவியிற் செறித்த
> இணைஅணை மேம்படத் திருந்துதுயில் பெருது."

என்னும் சிலப்பதிகார அடிகளையும்,

> " இணைபட நிவந்த நீலமென் சேக்கையுள்
> துணைபுணர் அன்னத்தின் தூவிமெல் லணையசைஇ."

என்னும் கலித்தொகையடிகளையும் காண்க.

இவ்வன்னத்திடத் துள்ள சிறந்த குணமாகப் பேசப்படுவது பாலும் நீரும் கலந்தவிடத்து நீரை

நீக்கிப் பாலை யுண்ணும் சிறந்த இயல்பாம். இவ்வியல்பே நாலடியிலும் உவமையாக ஆளப்படுகிறது.

> "ஆராய்ந் தமைவுடைய கற்பவே நீரொழியப்
> பாலுண் குருகிற் றெரிந்து."

**விலங்குகள்**

இனிச் சில விலங்குகளின் சிறந்த இயற்கைகளைக் காட்டி அவைகளை உவமையா யமைத்தலைக் காண்பாம்.

**நாய்**

> "எறிந்தவேல்
> மெய்யதா வால்குழைக்கும் நாய்."

என்ற உவமை நாயின் இயல்பை எடுத்துக்காட்டுகின்றது. ஒருவன் சீராட்டிப் பாராட்டி வ்ளர்த்த நாயை அவன் அறிந்தோ அறியாமலோ வேல்கொண்டு எறிந்தானாயின், அவ்வேல் தைக்கப்பெற்றுக் குருதியொழுக நிற்கும் அந்நாயானது, வேல் எய்தமை நோக்கித் தன் தலைவன்மேல் வெகுண்டு செல்லாது, அவன் அருகே வரின் அன்பு பாராட்டி வால்குழைத்து மனம் மகிழ்கின்ற இயற்கையை இவ்வுவமை கூறுகின்றது. பெரியோர் பிறர் செய்த தீமையை மறந்து அவர் செய்த நன்மையையே நினைப்பரென்றும், அத்தகைய மேலோர் நட்புக் கொள்ளத்தக்க தென்றும் நாலடி கூறுகிறது.

இனி நாயின்மாட் டமைந்த மற்றொரு பிறவிக் குணத்தையும் மற்றோர் உவமை தெரிவித்து வருகின்றது.

> "பொற்கலத் தூட்டிப் புறந்தரினும் நாய்பிறர்
> எச்சிற் கமையாது பார்த்திருக்கும்."

நாயை வளர்ப்போர் அதை நாடோறுங் குளிப்பாட்டிச் சீராட்டி அதற்குச் சிறந்த ஏனத்தில் நாடோறும் உணவு இட்டு வளர்த்துவந்தாலும், அது தெருப்புறத்தே எச்சில் இலை விழுந்தவுடன் அதுநோக்கி ஓடும் இயல்பிற்று என்ற இயற்கையைக் கூறிநிற்கிறது இவ்வுவமை. செல்வம் பொருந்திய கீழோனொருவனை அவ்வூரார் பெரியோனாக மதித்து நடந்தாலும், அக்கீழோன் அவர் நினைவிற்கேற்பத் தன் செல்வத்தால் பல அரும் பெருஞ் செயல்களைச் செய்து மேம்படாது, இழிதொழில் செய்தலிலேயே மனம் விரும்பும் இயல்புக்கு உவமையாக இது வந்ததாம்.

யானை

" யானை
அறிந்தறிந்தும் பாகனையே கொல்லும்.''

என்ற உவமை யானை பிறர் செய்த நன்மையினும் தீமையையே மனத்தகத்து மறவாது வைத்திருந்து, அமயம் நேர்ந்தபொழுது பழிவாங்கும் இயற்கையுடையது என்னும் இயல்பினைக் கூறுகின்றது. இத்தகைய தீயோரும் உலகத்துளரென்றும், அவர் நட்புக் கொள்ளத்தக்க தன்றென்றும் நாலடி உணர்த்துகின்றது.

புலி

" உறுபுலி ஊன்இரை இன்றி ஒருநாள்
சிறுதேரை பற்றியும் தின்னும்.''

என்னும் உவமை கொன்றுண்பதற்கு விலங்கு எதிர்ப்படாதொழியின், புலி பசியால் வருந்தித் தன் முன் காணப்படுவன சிறு தேரைகளேயாயினும், அவற்றையும் பற்றித் தின்று ஒருவாறு பசி தணிக்குமென்று

உணர்த்துகிறது. ஒருவன், 'நான் செய்ய நேருவது மிக எளிமையான காரியமா யிருக்கிறதே; இதை விடுத்து அரிய காரியங்களையே செய்யவேண்டு'மென்று சோம்பி யிருக்காமல், அவ்வெளிய காரியத்தையும் இகழாது மேற்கொண்டு செய்யின், பின் மேம்பாடான காரியங் களும் தாமே வந்து கிட்டும் என்பதற் குவமையாக இது வந்துள்ளதாம்.

## ரு. நுனித்தறிந்த சில பொருளியல்புகள்

பண்டைப் புலவர்கள் சில பொருள்களின் உறுப்பு களின் சிறந்த இயல்புகளை உவமையாக அமைத்திருப் பதை நோக்க, அக்காலப் புலவோர் பொருள்களை நுனித்தறிந்து பொருளியல்புகளைத் தெளிய அறிந் திருந்த தன்மையை அவை புலப்படுத்துகின்றன.

### நாய்க்காற் சிறுவிரல்

நாய்க்கால் சிறுவிரல்கள் இடைவெளியற்று ஒன் றோடொன்று நெருங்கி இருக்கும் இயல்பைக் கூறி, அதை உவமையாக அமைத்திருக்கின்றனர்.

"நாய்க்கால் சிறுவிரல்போல் நன்(கு) அணிய ராயினும்
ஈக்கால் துணையும் உதவாதார் நட்பென்னும்."

நட்பினர் ஒரூரகத்தே இருக்கும் நெருக்கத்துக்கு நாய்க்கால் சிறுவிரலின் நெருக்கம் உவமைகூறப் பட்டது.

### பூனைக் கண்

பூனைக் கண் பளபளப்புடைமை கூறி, அதை உவமையாக ஆள்கின்றனர். சுடச்சுட எண்ணெயில் பொரித்து வைக்கப்பட்ட பாகல் வற்றல் முதலியவற் றின் பொரியலுக்கு இஃது உவமையாக வந்தது.

" விருப்பிலார் இல்லத்து வேறிருந் துண்ணும்
வெருக்குக்கண் வெங்கருணை வேம்பாம்.''

தம்மாட்டு அன்பில்லாதவர் வீட்டில் மனக் கலப்பின்றி உண்பது, பூனைக்கண் போன்று பளபளப்புடன் தோன்றுமாறு பொறித்து வைக்கப்பட்ட சூடு பொருந்திய பொரியலே யாயினும், அது வேம்புபோன்று கைப்பதே யாகும் என்று கூறப்படுகிறது.

செம்மறியாட்டுக்கடாக் கொம்பு

செம்மறியாட்டுக்கடாவின் கொம்பு பின்முறுக்குடையதாதல் கூறி, அஃது உவமையாக அமைக்கப்படுகிறது. பொருளுள்ள காலத்து அன்புடன் ஒழுகுவதாகக் காட்டிய பொதுமகளிர், பொருளற்ற காலத்து மனம் மாறுபட்டுப் பிறபட்டொழுகும் இயல்புக்கு இஃதுவமையாகக் காட்டப்படுகிறது.

" ஏமாந்த போழ்தின் இனியார்போன்(று) இன்னாராய்த்
தாம்ஆர்ந்த போதே தகர்க்கோடாம்.''

தம் இன்பத்துள் ஆழ்ந்து செருக்குற்று மதிமயங்கி இருக்குங் காலத்து வெளிக்கு அவர்களுக்கு இனியார் போன்று காட்டி ஒழுகி, மனத்துக் கொடுமையுடையராய் அவரிடத்துள்ள செல்வம் முழுவதையும் தாம் நுகர்ந்த பின், செம்மறிக்கடாவின் பின்முறுக்குடைய கொம்புபோல் (அவரோடு மனம் மாறுபட்டு) ஒழுகும் (பொதுமகளிர்) என்று கூறப்பட்டவாறும்.

புலிநகம்

புலிநகம் தூய வெண்மையதாதலைக் காட்டி உவமையாக அமைக்கின்றனர்:

" பொற்கலத்துப் பெய்த புலியுகிர் வான்புழுக்கல்.''

புழுக்கல் என்பது சமைக்கப்பட்ட சோறும். வான் புழுக்கல் உயர்ந்தவகை அரிசிச் சோறும். அவ் வுயர்ந்த அரிசிச் சோற்றின் தூய வெண்ணிறத்தைக் காட்டவேண்டிப் 'புலிநகம் போன்று வெண்மையான 'மெல்லிய அரிசிச் சோறு' என்று கூறப்பட்டதென்க.

## சு. நாடோறும் காணும் பொருள்கள்

பல நாலடிச் செய்யுட்கள் வாழ்க்கையில் நாடோறும் காணும் பொருள்களையும் நிகழ்ச்சிகளையும் உவமையாயமைத்துச் சொல்லக் கருதிய பொருளை விளக்கிச் செல்லும் முறை பெரிதும் இன்பந் தருவதொன்றாகும்.

நிழல்

பெரியோர் நட்பு நாடோறும் வளர்தற்கும், சிறியோர் நட்பு நாடோறும் குறைதற்கும், மக்கள் நாடோறும் காணும் மாலை நிழலையும் காலை நிழலையும் உவமையாக அமைத்தனர் புலவர்:

"நளிகடல் தண்சேர்ப்ப நாள்நிழல் போல
விளியும் சிறியவர் கேண்மை—விளிவின்றி
அல்கு நிழல்போல் அகன்றகன் றோடுமே
தொல்புக ழாளர் தொடர்பு."

வெந்நீர்

அடுப்பினின்றும் இறக்கி வைக்கப்பட்ட வெந்நீர் நாழி ஆக ஆகச் சூடு குறைந்து ஆறும் இயல்பு, அற்பர் மிகைசெயல் கண்டவழிக் கொண்ட பெரியோர் சினம், நாழி ஆக ஆகத் தானே அடங்கி யொழிதலுக்கு உவமையாக அமைக்கப்படுகிறது.

"நெடுங்காலம் ஓடினும் நீசர் வெகுளி
கெடுங்காலம் இன்றிப் பரக்கும்—அடுங்காலை
நீர்கொண்ட வெப்பம்போல் தானே தணியுமே
சீர்கொண்ட சான்றோர் சினம்."

உலை நீர்

வறுமையில் மிகுந்த ஒருவன் தான் தொடங்கிய எக்காரியத்தும் முட்டுப்பாடுற்று மேன்மேலும் இடுக்கணே மிகுந்து, முடிவில் தேய்ந்து கெட்டொழியும் தன்மைக்கு, உலைநீரில் பெய்யப் பெற்ற அரிசி முதலிய பொருள்கள் கொதிக்கும் நீரால் அடப்பட்டுத், தன்மை திரிந்து மாறுபடும் இயற்கையை உவமையாக அமைத்தனர் புலவர்.

"வடுவிலா வையத்து மன்னிய மூன்றில்
நடுவண(து) எய்த இருதலையும் எய்தும்
நடுவண(து) எய்தாதான் எய்தும் உலைப்பெய்(து)
அடுவது போலும் துயர்."

மன்னிய மூன்றாவன: அறம் பொருள் இன்பம் என்னும் மூன்றுமாம்.

உருக்கு நெய்

உருக்குநெய் ஓரிடத் துவமையாக ஆளப்படுகிறது. உடலுக்கு நலம் பயக்கும் நற் பொருளாகிய நெய்யை அடுப்பின்மீது வைத்துக் காய்ச்சும்பொழுது, கொதிக்கும் அந் நெய் தவறி உடல்மீது பட்டால், பட்ட இடம் வெந்து பெரும் புண்ணாகுமாறு செய்கின்றது. 'யாரோடும் இனிமையாகப் பழகும் சில மக்களும் கொடிய தீயோரைச் சேரின், தம் மியல்பு திரிந்து அவரை யொத்துக் கொடுஞ் செயல் செயற்கே முற்படுகின்றனர்' என்பதை விளக்க இஃது துவமையாக வந்தது.

"நெருப்பழல் சேர்ந்தக்கால் நெய்போல் வதூஉம்
எரிப்பச்சுட்(டு) எவ்வநோய் ஆக்கும்—பரப்பக்
கொடுவினை யாகுவர் கோடாருங் கோடிக்
கடுவினைய ராகியார்ச் சார்ந்து."

**நெய் ஏனம்**

மணம் பொருந்திய நெய் வைக்கும் ஏனத்தில் அதை நீக்கி நாற்றம் பொருந்திய வேப்ப நெய்யை வைத்தல், அறிவிற் சிறந்த நல்லோர் நட்பை விட்டு, அறிவிலாத் தீயோர் நட்பைக் கொள்ளற்கு உவமை யாகச் சொல்லப்படுகிறது.

"ஆன்படு நெய்பெய் கலனுள் அதுகளைந்து
வேம்படு நெய்பெய் தனைத்தரோ—தேம்படு
நல்வரை நாட நயம்உணர்வார் நண்பொரீஇப்
புல்லறிவி னாரோடு நட்பு."

**நீர் கலந்த பால்**

நீர் கலந்த பால் ஆண்மையற்று அழகனாய்த் திகழும் ஒருவனுக்கு உவமையாக அமைக்கப்படுகிறது. நீர்கலந்த பால் கூர்ந்து நோக்காதவழிச் சிறந்த பாலாகத் தோன்றினும், அது சுவையற்றதாய் உட லுக்குப் பெரும் பயன் கொடுத்தல் அற்றதாய் ஆகின்ற தன்றே? ஆண்மையற்றவன், உருவில் அழகிய மகனாய்த் தோன்றினும் அவன் மக்கட் பண்பில் குறைபட்டவ னாவானன்றே?

"உருவிற் கமைந்தான்கண் ஊராண்மை இன்மை
பருகற் கமைந்தபால் நீரளா யற்றே."

**பால் கலந்த நீர்**

பாலொடு கலந்த நீர் பெரியாரைச் சார்ந்த சிறி யோர்க்கு உவமை கூறப்படுகிறது. பாலொடு கலந்த நீர் பிரித்தறிய முடியாதபடி பாலேயாய்த் தோன்று

கின்றதன்றே? அங்ஙனமே சிறியோர் பெரியோரைச் சார்ந்து வாழின், அச்சிறியோரும் உலகோரால் பெரியாராய் மதிக்கப்படுவர் என்று கூறப்படுகிறது.

"பாலோ டளாயநீர் பாலாகு மல்லது
நீராய் நிறந்தெரிந்து தோன்றாதாம்—தேரின்
சிறியார் சிறுமையும் தோன்றாதாம் நல்ல
பெரியார் பெருமையைச் சார்ந்து."

## உவமைச் செல்வம்

### ஒரு பொருளை விளக்கப் பல உவமைகள்

சமண சமயத்தைச் சார்ந்த நம் பண்டைத் தமிழ்ப் பெரும் புலவோர் குறிப்பிட்ட சில குணங்கள் மாட்டே அழுந்திய மனத்த ராதலின் தம் மனம்பதிந்த அக் குணங்களை விளக்கப் பல உவமைகளை அடுக்கடுக்காகக் கூறிச் செல்கின்றனர். அவைகளை ஒருசேர ஈண்டுக் காட்டுவாம்.

### மக்கள் இயற்கை மாறுபடார்

என்பதை யுணர்த்தப் பல உவமைகள் வருமாற்றைக் கீழே காண்க:

i. "யாவரே தின்னினும் கையாதாம் கைக்குமாம்
தேவரே தின்னினும் வேம்பு."

ii. "உப்பொடு நெய்பால் தயிர்காயம் பெய்தடினும்
கைப்பறா பேய்ச்சுரையின் காய்."

iii. "வேம்பின் இலையுள் கனியினும் வாழைதன்
தீஞ்சுவை யாதும் திரியாதாம்."

iv. "கடல்சார்ந்தும் இன்னீர் பிறக்கும் மலைசார்ந்தும்
உப்பீண் டுவரி பிறத்தலால்."

மேலோர் கீழோரைச் சேரலாகாது
என்பதை விளக்க வரும் உவமைகளைக் காண்க:

i "நெருப்பழல் சேர்ந்தக்கால் நெய்போல்வ தூஉம்
எரிப்பச்சுட்(டு) எவ்வநோய் ஆக்கும்."

ii. "தெரிவுடையார் தீயினத்த ராகுதல் நாகம்
விரிபெடையோ டாடிவிட் டற்று."

iii. "வெறிகமழ் சந்தனமும் வேங்கையும் வேமே
எறிபுனம் தீப்பட்டக் கால்."

iv. "—கலநலத்தைத்
தீவளி சென்று சிதைத்தாங்குச் சான்றாண்மை
தீயினம் சேரக் கெடும்."

கீழோர் மேலோரைச் சாரின் உயர்வு பெறுவர்
என்பதை விளக்க வரும் உவமைகளைக் காண்க:

i. "ஊரங் கணநீர் உரவுநீர்ச் சேர்ந்தக்கால்
பேரும் பிறிதாகித் தீர்த்தமாம்."

ii. "பாலோ டளாயநீர் பாலாகு மல்லது
நீராய் நிறம்தெரிந்து தோன்றாதாம்."

iii. "கொல்லை யிரும்புனத்துக் குற்றி யடைந்தபுல்
ஒல்காவே யாகும் உழவர் உழுபடைக்கு."

iv. "ஒண்கதிர் வான்மதியம் சேர்தலால் ஓங்கிய
அங்கண் விசும்பின் முயலும் தொழப்படும்."

v. "ஒண்ணிறப் பாதிரிப்பூச் சேர்தலால் புத்தோடு
தண்ணீர்க்குத் தான்பயந் தாங்கு."

கீழோர் செவியில் நல்லோர் சொல் ஏறாது
என்பதை உணர்த்தவரும் உவமைகளைக் காண்க:

i "பன்றிக்கூழ்ப் பத்தரில் தேமா வடித்தற்றால்
நன்றறியா மாந்தர்க்(கு) அறத்தா றுரைக்குங்கால்."

ii. "பாலாற் கழீஇப் பலநாள் உணக்கினும்
வாலிதாம் பக்கம் இருந்தைக் கிருந்தன்று."

iii. "கவ்வித்தோல் தின்னும் குணங்கர்நாய் பால்சோற்றின்
செவ்வி கொளல்தேற்று தாங்கு."

iv. "கப்பி கடவதாகக் காலேத்தன் வாய்ப்பெயினும்
குப்பை கிளேப்போவாக் கோழிபோல்."

v. "பொற்கலத் தூட்டிப் புறந்தரினும் நாய்பிறர்
எச்சிற் கமையாது பார்த்திருக்கும்."

vi. "செழும்பெரும் பொய்கையுள் வாழினும் என்றும்
வழும்பறுக்க கில்லாவாம் தேரை."

உலோபியரை எவரும் குறுகார்

என்பதை விளக்க வரும் உவமைகளேக் காண்க:

i. "அருகல தாகிப் பலபழுத்தக் கண்ணும்
பொரிதாள் விளவிளை வாவல் குறுகா."

ii. "அள்ளிக்கொள் வன்ன குறுமுகிழ வாயினும்
கள்ளிமேற் கைநீட்டார் சூடும்பூ அன்மையால்."

iii. "மல்கு திரைய கடற்கோட் டிருப்பினும்
வல்லூற் றுவரில் கிணற்றின்கட் சென்றுண்பர்."

iv. "எறிநீர்ப் பெருங்கடல் எய்தியிருந்தும்
அறுநீர்ச் சிறுகிணற்(று) ஊறல்பார்த் துண்பர்."

கீழோர் செல்வ மெய்தினும் நற்பயனடையார்

என்பதை விளக்கவரும் உவமைகளேக் காண்க:

i. "பொன்னிறச் செந்நெல் பொதியொடு பீள்வாட
மின்ஞெளிர் வானம் கடலுள்ளும் கான்றுகுக்கும்."

ii. "மைதீர் பசும்பொன்மேல் மாண்ட மணியழுத்திச்
செய்ததெனினும் செருப்புத்தன் காற்கேயாம்."

iii. "வயிரம் செறிப்பினும் வாட்கண்ணுய்—கோட்டை புன்றி
செயிர்வேழ மாகுதல் இன்று."

iv. "நீருட் பிறந்து நிறம்பசிய தாயினும்
ஈரங் கிடையகத்(து) இல்லாகும்."

வறுமைக் காலத்தும் மேலோர் வண்மையிற் குன்றார்
என்பதை விளக்கவரும் பல உவமைகளைக் காண்க:

i. "அற்றக் கடைத்தும் அகல்யா(று) அகழ்ந்தக்கால்
தெற்றெனத் தண்ணீர் படும்."

ii. "ஒருபுடை பாம்பு கொளினும் ஒருபுடை
அங்கண்மா ஞாலம் விளக்குறூஉம் திங்கள்போல்."

iii. "செய்கை யழிந்து சிதன்மண்டிற் றாயினும்
பெய்யா ஒருசிறை பேரில் உடைத்தாகும்."

iv. "உறைப்பருங் காலத்தும் ஊற்றுநீர்க் கேணி
இறைத்துணினும் ஊராற்றும் என்பர்."

v. "உறுபுனல் தந்(து) உலகூட்டி அறுமிடத்தும்
கல்லூற் றுழியூறும் ஆறேபோல்"

நண்பர்மாட்டுப் பிழைபொறுக்கவேண்டும்
என்பதை யுணர்த்தும் பல உவமைகளைக் காண்க:

i. "செறுத்தோ றுடைப்பினும் செம்புனலோ டூடார்
மறுத்தும் சிறைசெய்வர் நீர்கசைஇ வாழ்நர்."

"—பொன்னொடு

ii. நல்லில் சிதைத்தநீ காடொறும் நாடித்தன்
இல்லத்தி லாக்குத லால்."

iii. "வின்குத்து நீள்வரை வெற்ப களைபவோ
கண்குத்திற் றென்றுதங் கை."

நல்லோர் நட்பும் தீயோர் நட்பும்
வளர்தலும் குறைதலும் காட்டிவரும் உவமைகளைக்
காண்க:

i. "பெரியவர் கேண்மை பிறைபோல நாளும்
வரிசை வருசையா நந்தும்—வரிசையால்
வானூர் மதியம்போல் வைகலும் தேயுமே
தானே சிறியார் தொடர்பு."

ii. "நளிகடல் தண்சேர்ப்ப நாள்நிழல் போல
விளியும் சிறியவர் கேண்மை—விளிவின்றி
அல்கு நிழல்போல் அகன்றகன் றோடுமே
தொல்புக ழாளர் தொடர்பு."

iii. "கருத்துணர்ந்து கற்றறிந்தார் கேண்மைஎஞ் ஞான்றும்
குருத்திற் கரும்புதின் றற்றே—குருத்திற்(கு)
எதிர்செலத்தின் றன்ன தகைத்தரோ என்றும்
மதுர மிலாளர் தொடர்பு."

iv. "சீரியார் கேண்மை சிறந்த சிறப்பிற்றாய்
மாரிபோல் மாண்ட பயத்ததாம்—மாரி
வறந்தக்கால் போலுமே வாலருவி நாட
சிறந்தக்கால் சீரிலார் நட்பு."

v. "நுண்ணுணர்வி னாரோடு கூடி நுகர்வுடைமை
விண்ணுலகே ஒக்கும் விழைவிற்றால்—நுண்ணூல்
உணர்விலா ராகிய ஊதிய மில்லார்ப்
புணர்தல் நிரையத்துள் ஒன்று."

---

## கூ. நாலடியார் கால நிலை

நாலடிச் செய்யுளை இயற்றிய பழந்தமிழ்ப் புலவர்கள் வாழ்ந்த பண்டைக் காலத்துத் தமிழ் நாட்டின் நிலையினை நாலடிச் செய்யுட்கள் பல காட்டி நிற்கின்றன. அப்பழந் தமிழ்ப் புலவர்கள் இயற்றிய நாலடிச் செய்யுட்களில் பல விடத்தும் இயற்கைக் காட்சிகள் நம் கண்முன் தோற்றமளிக்கின்றன. இவற்றை நோக்கின், அக்காலத் தமிழுலகம் இயற்கை யோடு நெருங்கிச் செயற்கையில் பெரிதும் புகாத நிலையி லிருந்தமை தெளிவாம். இக்காலையோ எங்கும் ஊர்களும் பட்டணங்களும் வயல்வெளிகளும் பல வகைப் பொறித்தொழில்களுமே நிறைந்து, காடுகள்

மிகுதியும் அழிந்து, செயற்கையில் மேம்பட்டு நிற்கிறோம். அக்காலைக் காடுகளே எங்கும் தோற்ற மளித்தன. ஊர்களும் பட்டணங்களும் வயல்வெளி களும் அவற்றின் இடை இடையே காணப்பட்டன.

அவர்கள் இயற்கையோ டுறைந்து இயற்கையை நுகர்ந்து இயற்கை வாழ்க்கையை மேற்கொண்டிருந் தனர். அவர்கள் யாண்டுத் திரும்பினும் இயற்கையே காட்சியளித்தன. நாலடிச் செய்யுளில் குறிஞ்சி நிலம் பலவிடங்களில் தோற்றமளிக்கின்றன.

இயற்கையோடியைந்து இன்புற்ற அவர்கள், தாஞ் செய்த செய்யுட்களில் பலவிடத்தும் இயற்கைக் காட்சிகளை உவமைகளாக அமைத்து விளக்கிய தன்மையை முன்னும் கண்டோம்.

(1) "மலையாடு மஞ்சுபோல் தோன்றி."

(2) "மலைமிசைத் தோன்றும் மதியம் போல்."

(3) "வானத்து மேலாடு மீனிற் பலராவர்."

(4) "கருங்கொண்மூ வாய்திறந்த மின்னுப்போல் தோன்றி."

(5) "வானூர் மதியம் போல்."

இனி, அவர்கள் பல செய்யுட்களில் ஆடூஉ முன் னிலைகளை யமைத்து அரசனை முன்னிலைப் படுத்தி, அவ்வரசனுக் குரிமையான நாட்டின் இயற்கையையும் காட்டிச் செல்கின்றனர். அந்நாடு பெரும்பாலும் குறிஞ்சியும் நெய்தலுமாகவே காணப்படுகின்றன. புலவர் பெரும்பாலும் குறிஞ்சியையும் நெய்தலையுமே விரும்பி நாடுதல் இயற்கையன்றே? புலவர் தாங் கண்ட நாட்டின் இயற்கைத் தோற்றத்தைக் கீழ்க் காணும் முன்னிலைகளில் சிறக்கப் புலப்படுத்துவதைக் காண்க:

(1) "ஒல்லென் அருவி உயர்வரை நன்னாட."
(2) "சாரல் கனமணி நின்றிமைக்கும் நாட."
(3) "வான் தோயும் மைதவழ் வெற்ப."
(4) "ஆர்க்கும் அருவி அணிமலை நன்னாட."
(5) "பொற்கேழ் புனலொழுகப் புள்ளிரியும் பூங்குன்றநாட."
(6) "நிறக்கோங்(கு) உருவ வண்டார்க்கும் உயர்வரைநாட."
(7) "பொங்கருவி தாழும் புனல்வரை நன்னாட."
(8) "மருங்கெல்லாம் சந்தன நீள்சோலைச் சாரல்மலைநாட."
(9) "குன்றின் பரப்பெல்லாம் பொன்னொழுகும் பாயருவி நாட."
(10) "நிரையாமா சேக்கும் நெடுங்குன்ற நாட."
(11) "மணிவரன்றி வீழும்அருவி விறன்மலை நன்னாட."
(12) "கலால் கிளிகடியும் கானக நாட."
(13) "கயப்புலால் புன்னைகடியும் பொருகடல் தண்சேர்ப்ப."
(14) "வளியோடி நெய்தல் நறவுயிர்க்கும் நீள்கடல் தண் சேர்ப்ப."
(15) "கனமணி முத்தோடிமைக்கும் முழங்குவரித் தண் சேர்ப்ப."
(16) "பராஅரைப் புன்னைப் படுகடல் தண்சேர்ப்ப."
(17) "ஓத மரற்றும் ஓலிகடல் தண்சேர்ப்ப."
(18) "நற்றளிர்ப் புன்னை மலரும் கடல் சேர்ப்ப."
(19) "கண்டல் திரையலைக்கும் கானலந் தண்சேர்ப்ப."
(20) "கள்ளுயிர்க்கும் நெய்தல் கனைகடற் றண்சேர்ப்ப."
(21) "வயங்கோதம் நில்லாத் திரையலைக்கும் நீள்கழித் தண் சேர்ப்ப."

மலையில் சேணின்று அருவி பொங்கி விழுந்து ஒலிடுகின்றது. அவ்வரவங் கேட்டு ஆண்டடைந்த புட்கள் வெருவியோடுகின்றன. மலைப்பக்கத்தே சந்தனச் சோலைகள் காட்சியளிக்கின்றன. ஒரு சில இடங்களில்

காடழிக்கப்பெற்றுத் தினை பயிர் செய்யப்பட்டிருக்கிறது. அத்தினைப் புனங்களிலே கவண் கைக்கொண்டு கிளிகடியும் குறப்பெண்களின் குரலோசை இடையிடையே கேட்கிறது.

இனிக் கடலோரக் காட்சியைக் காண்பாம்: கடற்கரை யோரங்களில் பருத்த அரையையுடைய புன்னை மரங்கள் மலர்ந்து, கரையகத்து மீன் புலால் நாற்றத்தையும் ஒழித்து மணம் வீசுகின்றன. அடப்ப மரங்களும் ஆண்டாண்டுத் தோன்றுகின்றன. அம்மரங்களின் மேல் அன்னம் உட்கார்ந்து அடப்பம் பூக்களைத் தம் அலகால் கிழிக்கின்றன. நெய்தல் மலர்களின் மணமும் எங்கும் நிறைந்திருக்கிறது. தாழை கரையருகே செழித்து வளர்ந்திருக்கின்றன. கரையோரங்களில் மணிகளும் முத்துக்களும் கூடத் தென்படுகின்றன.

அக்காலத்தே பல இடங்களில் காடு கெடுத்து நாடாக்கும் தொழிலை மேற்கொண்டிருந்தனர் மக்கள். இச் செய்தி ஓரிடத்தில் உவமையாகக் காட்டப் படுகிறது.

"வெறி கமழ் சந்தனமும் வேங்கையும் வேமே
எறிபுனந் தீப்பட்டக் கால்."

என்று கூறப்படுகிறது. எறிதல் - வெட்டுதல். எறி புனம் என்பது புனமாக்க வேண்டி வெட்டப்பட்ட மரச் செறிவைக் குறிக்கும். காடாய் இருந்த விடத்து மரங்களை வெட்டித் தள்ளித் தீயிட்டுக் கொளுத்தி யழித்துவிட்டு, அவ்விடத்துத் தினை முதலிய தானியங்களைப் பயிர்செய்யத் தொடங்கும் பண்டை மக்கள் செய்கை ஈண்டு விளங்குகின்றது.

மரங்களிற் சிறந்த சந்தன மரமும் வேங்கை மரமும் கூட ஈண்டுத் தீப்படுதல் நோக்கத்தக்கது. எவ்வகைப்பட்ட மரங்களும் காடுகளாய் மிகுந்திருந் தமை இதனால் தெரிகிறது. அதனாலேயே சிறந்த மரங் களையும் கூட மக்கள் போற்றிக் கொண்டாரில்லை என்க.

இங்ஙனம் காடு கெடுத்து நாடாக்கி மக்கள் உழவு தொழிலில் மேம்பட்டிருந்தனர். நாலடிச் செய்யுளில் பலவிடங்களில் உழவுதொழில் உவமை வாயிலாகக் குறிக்கப்படுகிறது.

> " புல்லீரப் போழ்தின் உழவேபோல் மீதாடிச்
> செல்லாவாம் நல்கூர்ந்தார் சொல்.''

என்று சொல்லப்படுகிறது. வறுமையாளர் வாய்ச் சொல் பிறர் செவியில் ஊன்றி ஏறாது என்ற தன்மைக்கு உவமையாக ஈரங்குறைந்த நிலத்தில் உழவு ஆழ்ந்து செல்லாது என்ற இயற்கை சொல்லப்படு கிறது. இனி மற்றோரிடத்தில்,

> " கொல்லை யிரும்புனத்துக் குற்றி யடைந்தபுல்
> ஒல்காவே யாகும் உழவர் உழுபடைக்கு.''

என்று சொல்லப்படுகிறது. தினை முதலிய விதைத் தற்கேற்ற புன்செய் நிலத்தில் நடுவே எல்லையறுக்கும் குறியாகவோ பிறவாறோ ஒரு சிறு மரம் நிற்பின், உழு வோர் மரத்தைச் சேரவும் உழுதுசெல்வ ரன்றே. எங்ஙனம் மரத்தைச் சேர நெருக்கிப் பிடித்தாலும் படைச்சால் மரத்தடியை முட்டிச் செல்லல் இயலாது. மரத்தைச் சுற்றிய சிறு இடம் புல் அறுபடாதே நிற்கும். உழுதொழிலின் இச் செய்தி ஈண்டு உவமை யாக அமைக்கப்பட்டிருக்கிறது. சிறியோர் பெரியா

ரைச் சார்ந்தால் பிறர் சினம் அவரை யொன்றும் செய்ய இயலாதென்பதை விளக்க இவ்வுவமை வந்தது. கொல்லை நடுவே நின்ற மரத்தைச் சார்ந்த புல்லும் உழுபடையால் கேடடையாமல் நிற்கிற தன்றோ?

உழுதொழிலின் இயற்கை இங்ஙனம் பல விடங்களிலும் உவமை வாயிலாக அமைதலின், அக்காலத்து உழுதொழிலாம் இயற்கைத் தொழில் விளக்கத்துடன் பெருகிக்கொண்டிருந்தமை தெரியவரும்.

மேலும், இயற்கையே பெருகிவந்த ஆற்றைத் தடுத்துச் சிறை செய்து தேக்கிப் பல வாய்க்கால்களால் நிலங்களுக்குப் பாய்ச்சிப் புன்செய்யை நன்செய்யாக மாற்றிப் பயன்கொண்ட திறமும் சில இடங்களில் காட்டப்படுகிறது.

"செறுத்தோ றுடைப்பினும் செம்புனலோ டோர்
மறுத்தும் சிறைசெய்வர் நீர் நசைஇ வாழ்நர்."

என்று சொல்லப்படுகிறது. பெருகி வரும் நீரைத் தேக்கி அணைபோடல் ஈண்டுக் குறிப்பிடப்படுகிறது. வருந்தி அணைபோடுந்தோறும் பெருக்கெடுத்து வரும் நீர் அவ்வணையை யழித்தாலும் அதனால் மனம்நொந்து விட்டு விடாமல் மீண்டும் முயன்று அணைபோடும் இயற்கை காட்டப்படுவது காண்க. அணை செய்தற்குக் கட்டிடங்கள் அக்காலைக் கட்டப்பெறவில்லை. நீரைப் பாய்ச்சிச் செய்விளைக்கும் முறையின் தொடக்க காலமாகவே அதைக் கொள்ளவேண்டும். ஆயினும் வாய்க்கால்கள் பலவற்றை அக்காலை வெட்டி நீரை உள்ளிடங்கட்குக் கொண்டு சென்றனர். வாய்க்காலும் உவமையாகக் கூறப்படுகிறது.

" சேய்த்தானும் சென்று கொளல்வேண்டும் செய்விளைக்கும்
வாய்க்கால் அனையார் தொடர்பு.

'சேண் நின்று அருகு வந்து பயிர்களுக்கு நீரைக் கொடுத்து வளர்க்கும் வாய்க்காலைப் போன்றோர் நட்பைக் கொள்ளவேண்டும்' என்று கூறப்படுகிறது.

இங்ஙனம் அணையும் வாய்க்காலும் அமைத்துப் புன்செய்யை நன்செய்யாக மாற்றி வேளாண்மையைப் பெருக்க முற்படத் தொடங்கினர் அக்கால மக்கள். இவையே நாடோறும் அவர் வாழ்க்கையாய் யமைந் தமையின் அன்றே இவை போன்றன பயின்று உவமை யாக அமைக்கப்பட்டன. மற்ருேரிடத்து,

" குளத்தின்கீழ்ப் பைங்கூழ்போல்."

என்று கூறி, உறவினரை யடுத்துத் தாளாண்மை யற்று வாழும் பேடியருக்கு உவமையமைத்தனர். குளத்தின் நீரை நோக்கிப் பக்கத்துள்ள வயலின் பயிர் நிலைத்தல் இயற்கையன்றே? ஈண்டுக் குளத்தில் நீரைத் தேக்கி வைத்தல் காட்டப்பட்டதாம்.

" விளை நிலம் உள்ளும் உழவன்."

என்ருேரிடத்து உவமை யமைந்துள்ளது. உழவன் இராப் பகலாக விளை நிலத்தையே கண்ணும் கருத்து மாக யிருந்து காக்கும் இயற்கை காட்டப்படுகிற தன்ருே? இதனாலும் உழுதொழில் அக்காலத்துச் சிறப்புற்ற நிலையில் அமைந்திருந்தமை யுணரப்படும்.

" நிலநலத்தால் நந்திய நெல்லேபோல்."

என்ருேர் உவமையும் உண்டு. நிலத்தின் வளத்திற் கேற்ப நெல் பெருக்கமுற்று விளையும் தன்மை ஈண்டுக் குறிக்கப்படுகிறது. நெல் முதலிய பலவகைக் கூலங்

களை அக் காலத்து மக்கள் பயிரிட்டு மேன்மையடைந் திருந்தமையை இது காட்டுகிறதன்றோ?

இவ் வுழுதொழிற்கு இன்றியமையா மாடுகளின் இயற்கைகளும் பல இடங்களில் உவமை வாயிலாகக் கூறப்படுகின்றன.

"வையம்பூண் கல்லா சிறுகுண்டை."

"கருநரைமேல் சூடேபோற் றோன்றும்."

"சேமாபோல் குப்புறாஉம் சில்லைக்கண்."

என்ற விடங்களில் உழுதொழிலுக்கு இன்றியமையா மாடுகளின் இயற்கை கூறப்பட்டிருப்பதைக் காண்க. சிறு குண்டை என்பது கறளைமாட்டைக் குறிக்கும். கறளைமாடு பாரவண்டி இழுக்காதென்று குறிக்கப்படு கிறது. மாடு சூடு இடப்பெறும் என்பது இரண்டா வதில் குறிக்கப்படுகிறது. விதை யடிக்கப் பெறாத காளை, வண்டி முதலியவற்றில் பூட்டப்புகின், அதைப் பூணாது குப்புற்று நழுவியோடும் இயற்கை மூன்றாவதில் குறிக்கப்படுகிறது. இங்ஙனமெல்லாம் பலவிடங்களில் வரும் உவமைகள் அக்காலத்து உழு தொழிலே பெருந்தொழிலாய் மக்களால் கொள்ளப் பட்ட தன்மையைப் புலப்படுத்திநிற்கின்றன. உண் ணும் உணவைப் பலர்க்கும் இட்டு உண் என்று கூறப் புகுந்த செய்யுள்,

"பகடு நடந்தகூழ் பல்லரோ டுண்க."

என்று உழுதொழிலை உடன் வைத்துக் கூறிச் சிறப்பித் தமை காண்க.

இவ்வுழுதொழிலே அக்காலத்து மக்கள் பலரா லும் கொள்ளப்பட்டு விளக்கமுற்றிருந்தமைக் கேற்ப,

இவ்வுழுதொழிலுக்கு அங்கமான கொல்தொழிலும் சிறப்புற்றிருந்தமை பல செய்யுட்களின் உவமை வாயிலாக அறியப்படுகின்றது.

"உலையூதுந் தீயேபோல் உள்கனலுங் கொல்லோ."

என்றோரிடத்துக் கொல்லன் உலைக்களமமைத்துத் தொழில் செய்தல் சொல்லப்படுகிறது.

மற்றோரிடத்து,

"முட்டிகைபோல முனியாது வைகலும்
கொட்டியுண் பாரும் குறடுபோல் கைவிடுவர்
சுட்டுக்கோல் போல எரியும் புகுவரே
நட்டார் எனப்படு வார்."

என்று சொல்லப்படுகிறது. இச்செய்யுளில் கொல்லர் உலைக் கருவிகளாக முட்டிகை, குறடு, சுட்டுக்கோல் என்பன குறிக்கப் பெற்றிருக்கின்றமை காண்க. மற்றோரிடத்து,

"உளி நீரர் மாதோ கயவர்."

என்று மரங்கொல் தச்சரின் உளிக் கருவி கூறப்படுகிறது.

மற்றோரிடத்துக் கம்மத் தொழில் செய்வோர் இயற்கையை,

"கம்மஞ்செய் மாக்கள் கருவி யொடுக்கிய
மம்மர்கொள் மாலை."

என்று குறிக்கின்றது. கம்மாளர் தந்தொழிலை இருள் வரத் தொடங்கும் மாலைக் காலத்தே முடிக்கும் இயற்கை ஈண்டுக் காட்டப்படுகிறது.

இவ்வாற்றால் உழவு தொழிலும், கம்மத் தொழிலும் அக்காலைச் சிறப்புற்று விளங்கியமை தெளியப்படு

மன்றோ? பல துணைத் தொழிலையும் பெற்று இவ்வுழவு தொழிலால் மேன்மையுற்ற மக்கள், நாவாய் செலுத்திக் கடல் கடந்தும் வாணிகம் புரிந்தமையும் சில செய்யுட்களில் காணப்படுகின்றது. அவைகளில் ஒரு செய்யுள்,

"கடுவிசை நாவாய் கரையலைக்கும் சேர்ப்ப."

என்று முன்னிலைப்படுத்திச் செல்கிறது. முன்னிலைப் படுத்தப்பட்ட அரசன் பல நாவாய்களை யுடையான் என்பது தெரிகிறதன்றே?

இங்ஙனம் மரக்கலம் செலுத்தித் தம் நாட்டுப் பொருளைக் கொடுத்துப் பிறநாட்டுப் பொருள்களைத் தொகுத்துக்கொண்டு வருகிற தன்மையை,

"பட்டினம் பெற்ற கலம்."

என்ற அடி உணர்த்துகின்றது. அக்கலத்தேயுள்ள பொருளின் நிறைவை யுணர்த்தப் "பட்டினத்தையே பெற்றுக்கொண்டு வந்துவிட்ட கலம்" என்று குறிப்பிக்கப்பட்டதாம்.

அக்கால மரக்கலங்கள், பொறியால் இயக்கப் பெறாமல் காற்றுதவி கொண்டே இயக்கப்பட்டமையின், எக்காலும் இடையூற்றுக் காளாகும் நிலையை எதிர்நோக்கியே இருந்தனவாகும்.

"கலநலத்தைத் தீவளி சென்று சிதைத்தாங்கு."

என்றவிடத்துப் புயற்காற்றால் கலம் அழிவது குறிப்பிடப் படுவது காண்க.

இத்தகைய மரக்கலங்கொண்டு கடல்மீது செல்வோர் பல சமயங்களில் கடலில் வீழ்ந்து வருந்தி இறக்கும் இயல்பும் காட்டப்படுகிறது.

"வந்ததே ஆழ்கலத் தன்ன கலி." (கலி-ஒலி)

என்றவிடத்து மரக்கலம் கடலகத்தே ஆழும்போது, அதன்கண் உள்ள மக்கள் நாற்புறமும் வெருவியோடிக் கூச்சலிட்டு அழும் தன்மை குறிக்கப்படுகின்றமை காண்க.

மரக்கலத்துள்ளோர் இங்ஙனம் நிலையற்ற வாழ்க்கை யுடையவராய் இருப்பரென்பது,

"கல்லாமை யச்சம் கயவர் தொழி லச்சம்
சொல்லாமை யுள்ளுமோர் சோர்வச்சம்—எல்லாம்
இரப்பார்க்கொன் றீயாமை யச்சம் மரத்தார்இம்
மாணாக் குடிப்பிறந் தார்.''

என்றவிடத்து, மரக்கலத்துள்ளோர் அச்சமே குடி கொண்டிருப்பர் என்ற தன்மையை உவமையாக அமைத்துக் கூறியவாற்றால் தெளியப்படும். இங்ஙன மெல்லாம் கூறப்பட்டிருத்தலின், அக்காலை நாவாய் செலுத்தி மக்கள் வாணிகத்தில் மேம்பட்ட தன்மை துணியப்படுகிறதன்றோ?

இனி, அக்கால மக்கள் உணவு குறித்து நாலடிச் செய்யுளினின்று அறியப்படுவனவற்றைக் காண்பாம். மக்களின் பலவகைப்பட்ட உணவுப் பண்டங்கள் கீழ்க் காணப்படும் நாலடியில் குறிக்கப்படுகின்றன :

i "பொற்கலத்துப் பெய்த புலியுகிர் வான் புழுக்கல்
அக்காரம் பாலோ டமரர்கைத் துண்டலின்
உப்பிலிப் புற்கை உயிர்போற் கிளைஞர்மாட்(டு)
எக்கலத் தானு மினிது.''

ii "விருப்பிலார் இல்லத்து வேறிருந் துண்ணும்
வெருக்குக்கண் வெங்கருனை வேம்பாம்—விருப்புடைத்
தன்போல்வார் இல்லுள் தயங்குநீர்த் தண்புற்கை
என்போ டியைந்த அமிழ்து.''

iii “ கழுநீருட் காரட கேனும் ஒருவன்
விழுமிதாக் கொள்ளின் அமிழ்தாம்—விழுமிய
குய்த்துவையார் வெண்சோறே யாயினும் மேவாதார்
கைத்துண்டல் காஞ்சிரங் காய்.”

iv “ கடகஞ் செறிந்ததங் கைகளால் வாங்கி
அடகு பறித்துக்கொண் டட்டுக்—குடைகலனு
உப்பிலி வெந்தைதின்(று) உள்ளற்று வாழ்பவே
துப்புரவு சென்றுலந்தக் கால்.”

கீழ்க் காணப்படும் அடிகளும் சில உணவுப் பொருள்களைக் குறிக்கின்றன.

v வலவைகள் அல்லாதார் காலாறு சென்று
கலவைகள் உண்டு கழிப்பர்.

vi பெருமுத் தரையர் பெரிதுவந் தீயும்
கருனைச்சோ றார்வர் கயவர்.

vii அபராணப் போழ்தின் அடகிடுவ ரேனும்
தமராயார் மாட்டே இனிது.

viii நெல்லிலாப் பாற்சோற்றி னேர்.

ஈண்டுப்,

i புழுக்கல் அக்காரம் பாலோ டுண்டலும்,

ii நெய்யோடு பாற்சோ றுண்ணலும்,

iii குய்த்துவையார் வெண்சோறு மிசைதலும்,

iv கருனைச்சோ றார்தலும்,

v கழுநீருட் காரடகு மிசைதலும்

vi கலவைக ளுண்ணலும்

vii வெந்தை யுண்ணலும்

viii நீர்த் தண்புற்கை பருகலும்

குறிக்கப்படுகின்றமை காண்க.

i புழுக்கல் புழுங்கலரிசியைக் குறிக்கும் புழுங்கலரிசியே அக் காலை மிகுதியும் பயன்படுத்தினர்போலும். இக்காலையும் நாட்டுப் புறங்களில் மக்கள் புழுங்க லரிசியையே பயன் படுத்துகின்றனர். பச்சரிசியினும் புழுங்க லரிசியே உடலுக்கு வலுவைக் கொடுத்து நன்மை செய்யும் என்பது தற்காலத் தறிஞர்களின் துணிபு மாகும் அக்காரம் சர்க்கரையாகும். ஆகவே, அக்காலைப் புழுங்கலரிசியைச் சமைத்துப் பால் சேர்த்துச் சர்க்கரை இட்டு உண்டுவந்த தன்மை காட்டப்பட்டதாம்.

ii பாற்சோ றென்று குறிக்கப்படுவது பாயசம். அக் காலைப் பாயசம் உடைத்த அரிசியே பெரும்பாலும் விரவச் செய்யப்பட்டது போலும். அதனாலேயே பாற்சோறு என்று குறிக்கப்பட்டது. அப் பாயசத்தோடு நெய் சேர்த்தலும் இன்றியமையாததாகக் கருதப் பட்டதென்றும் காட்டப் படுகிறது. பாற்சோறு பாயசம் என்றே சூடாமணியும் கூறு வதாகும்.

iii குய் யென்பது தாளிப்பு; துவை யென்பது புளிங்கறி ஆகவே, குய்த் துவையாவது தாளித்து மணங்கமழும் புளிங்கறி யாகும். ஈண்டுத் தாளிதம் பொருந்திய புளிங்கறியோடு சோறுண்டல் சொல்லப்பட்டதாம்.

iv கருனை யென்பது பொரிக்கறி. பொரிக்கறியோடு சோறுண்டல் பெறப்பட்டது.

v கழுநீர் அரிசி கழுவிய நீர். கழுநீற்றில் கீரைகளை வேவ வைத்து உண்டல் சொல்லப்பட்டது. கழுநீரிலும் அரிசியின் மேற்றவிடு கலந்திருக்கு மாதலின், அதை வீண்போக்காது அத்துடன் கீரையை வேவவைத் துண்டனர். இக் காலத்தும் கழுநீரைச் சமையலில் பயன்படுத்துவர்.

vi கலவைகள் என்றதால் பலவகைக் கீரைகளையும் சேர்த்துச் சமைத்தல் பெறப்பட்டது.

vii வெந்தையாவது, நீராவியால் வெந்தது. இதனால், கீரை களை வேவவைத்து உண்டல் சொல்லப்பட்டது.

viii புற்கையாவது கஞ்சி. ஆதலின், நீர்த்தண்புற்கை யென்று சொல்லப்பட்டதென்க.

இங்ஙனம் காட்டியவாற்றால், அக்கால மக்கள் புழுங்கலரிசிச் சோற்றைப் பாலொடு கலந்து சர்க்கரை சேர்த்து உண்டலும், நெய் கலந்து பாயசம் உண்டலும், தாளித்த புளிங்கறி, பொரிக்கறி முதலியவற்றோடு உணவுண்டலும், கழுநீரில் கீரைகளை வேவவைத் துண்டலும், கலவைக்கீரைகளைச் சமைத் துண்டலும், கீரையை நீரில் வேவவைத் துண்டலும், கஞ்சி பருகலும் உணரப்படுகின்றன.

இனி ஓரிடத்து,

" வட்டும் வழுதுணையும் போல்வார்."

என்று சொல்லப்படுகின்றது.

வட்டு-முள்ளியையும், வழுதுணை-கத்தரியையும், கண்டங் கத்தரியையும் குறிக்கும். கத்தரி இக்காலத் தும் பெருவரவிற்றாய் உணவுப் பண்டமா யமைகிறது. முள்ளியும் உணவுப் பண்டமா யமையுமோ என்பது ஆராய்தற்குரியது. இனி, உண்ணும் முறையையும் ஒரு செய்யுள் குறிக்கின்றது. உணவு கொள்ளு முன், முதற் பிடியை யறஞ் செய்து பின் உண்ணும் வழக் கத்தையே சான்றோர் கொண்டிருந்தனர்.

" முன்துற்றும் துற்றினை நாளும் அறம்செய்து
பின்துற்றுத் துற்றுவர் சான்றவர்—அத்துற்று
முக்குற்றம் நீக்கி முடியு மளவெல்லாம்
துக்கத்துள் நீக்கி விடும்.''

(துற்றுதல் - உண்ணுதல்; துற்று உணவு.)

'தாம் உண்ணும்பொழுது முதற்பிடியை அறஞ் செய்யின், அவ்வறப் பயன் காம வெகுளி மயக்கங் களைக் கெடுத்துப் பிறவியை யறுப்பதோடு, உளநாள் வரைத் துன்பம் வராமலும் காக்கும்' என்று கூறப் படுகின்றது.

இனிக் கீழ்மக்கள் ஊனுண்டலைக் குறித்த சில குறிப்புக்களும் காணப்படுகின்றன.

"அலவனைக் காதலித்துக் கான்முறித்துத் தின்ற
பழவினை வந்தடைந்தக் கால்."

என்று கூறப்படுகிறது. நண்டைப் பிடித்துண்ணும் கீழோர் செய்கை ஈண்டுக் காட்டப்படுகின்றமை காண்க.

மற்றோரிடத்துக்,

"கொலைஞர் உலையேற்றித் தீமடுப்ப ஆமை
நிலையறியா(து) அந்நீர்ப் படிந்தாடி யற்றே."

என்று சொல்லப்படுகிறது. இதனால் ஆமையை வேவ வைத்துண்ணும் வழக்கமும் குறிக்கப்படுகிறது.

உடை

இங்ஙனம் அக்கால உணவைப் பலவிடங்களில் குறித்துச் சென்ற நாலடி, உடையையும் ஓரிடத்தாயினும் குறிக்காமற் போகவில்லை.

"வட்டும் வழுதுணையும் போல்வாரும் வாழ்வாரே
பட்டும் துகிலும் உடுத்து."

என்று கூறி, அக்கால மக்கள் பட்டும் உடுத்து வாழ்ந்த இயற்கையைப் புலப்படுத்துகின்றது.

மணப்பொருள்

இனி, அக்கால மக்கள் உடலுக் கழகு செய்வதையும் சில நாலடிச் செய்யுட்கள் புலப்படுத்துகின்றன:

i "தக்கோலந் தின்று தலைநிறையப் பூச்சூடி."

ii "படுசாந்துங் கோதையும்
கண்டு பாராட்டுவர்."

iii "நானங் கமழும் கதுப்பு."

என்று குறிப்பிடப்படுகின்றன.

தக்கோலந் தின்னலாவது: வால்மிளகு சேர்ந்த வெற்றிலைப்பாக்குப் போடுதல். சாந்துங் கோதையு மென்று குறித்தது, மயிர்ச்சாந்து இடப்பட்ட கூந்தலை யுணர்த்தியதாம். பெண்கள் கூந்தலுக்கு ஒருவகை மயிர்ச்சாந்து கூட்டுதல் அக்கால வழக்காம்.

நானமாவது கத்தூரி. கூந்தலில் கத்தூரி பூசும் இயற்கை காட்டப்படுகிறது. இங்ஙனம் வால்மிளகு முதலிய மணப்பொருள்களோடு வெற்றிலை தின்றும், கூந்தற்குக் கத்தூரி மயிர்ச்சாந்து முதலியன அணிந் தும், பூச்சூடியும் செல்வச் சிறப்புடன் மக்கள் வாழ்ந் தமை அறியப்படுமாறு காண்க.

இனிச் செல்வர் வாழ்ந்த வீட்டின் சிறப்புக் குறிக்கப்படுமாறு காண்க.

> “ மழைதிளைக்கு மாடமாய் மாண்பமைந்த காப்பாய்
> இழைவிளக்கு நின்றிமைப்பின் என்னும்.”

மாடங்கள் பொருந்திய வீடுகள் உயர்ந்திருந்தமை யும், அவ்வீட்டில் காவல் அமைந்திருந்தமையும், அழகு படச் செய்யப்பட்ட பல விளக்குகள் ஒளிர்ந்தமையும் காட்டப்படுகின்றன.

### நாலடியார்காலக் கல்வி நிலை

நாலடியார் எழுந்த காலத்துத் தமிழ்நாட்டில் கல்வி நிலை சிறப்புற்றிருந்ததாகத் தெரிகின்றது.

> “ கல்வி கரைஇல கற்பவர் நாள்சில.”

என்றொரு நாலடிச் செய்யுள் குறிப்பிடுகின்றது. இக் குறிப்பால் அக்காலத்துக் கல்வி பல கலைத்துறைகளிலு மாகப் பலபடப் பரந்து கிடந்தமை தெள்ளிதின் உணரப்படும். இங்ஙனம் பரந்துபட்ட துறைகளில்

அமைந்த நூல்களை இருபெரும் பிரிவுக்குள் பாகுபடுத்திக் கண்டனர் மக்கள்; உலக நூலும் அறிவு நூலும் என. உலகநூல் என்பன பலவகைக் கலைநூல்களை யுணர்த்தும். அறிவுநூல் என்பன மனிதன் தன்னை யாராய்ந்துணரும் தன்மையுடையன. இவ்விரு வகைகளினுள்ளும் அறிஞர் அறிவுநூலையே ஏற்றமுடையதாகக் கருதினர்.

"அலகுசால் கற்பின் அறிவுநூல் கல்லா(து)
உலகநூல் ஓதுவ தெல்லாம்—கலகல
கூஉந் துணையல்லால் கொண்டு தடுமாற்றம்
போஒந் துணையறிவார் இல்."

மக்கள் மனத்துன்பத்தை யொழிப்பது அறிவு நூலே என்று கூறப்படுகிறது. மற்று உலகநூலாம் கலைநூல்களோ உலக இன்பத்துக்கே (உடலின்பத்துக்கே) பயன்படுவனவாதலின், துறவில் மனமழுந்தப் பெற்ற நஞ் சமண் தமிழ்ப் புலவர் அவற்றைக் கற்பதைக் 'கூவுவது' என்று இழிவு தோன்றக் கூறினர். இவ்வுலகநூல் இழித்து மற்றோரிடத்தும் கூறப்படுகிறது:

"சத்தமும் சோதிடமும் என்றாங் கிவைபிதற்றும்
பித்தரில் பேதையார் இல்."

உலகநூலுள் இங்கு இரண்டெடுத்துக் கூறப்படுகின்றன; சத்தநூலும் சோதிடநூலும். இசைநூலை வெறுத்த துறவோராகிய சமணர் இசைநூலைச் சத்த நூல் என்று கூறினர்.

இங்ஙனம் பல கலைத்துறைகளிலும் அறிவாராய்ச்சித் துறைகளிலும் நூல்கள் அமைந்தமைக் கேற்ப, அந் நூல்களில் அறிவு மேம்பட்டுப் பலர்க்கும் கற்பிக்கும் ஆசிரியர்கள் கணக்காயர் எனப்பட்டனர். கணக்கு

என்பதே நூலுக்கு ஒரு பெயராய் அக்காலத்து வழங்கி வந்தது. சங்கநூல்களும் கீழ்க்கணக் கென்றும் மேற் கணக் கென்றும் பகுக்கப்பட்டிருக்கின்றமை காண்க.

"கற்றதூஉ மின்றிக் கணக்காயர் பாடத்தால்
பெற்றதாம் பேதைஓர் சூத்திரம்."

என்ற விடத்துக், "கணக்காயர் பாடஞ் சொல்லுங் கால் பேதை யொருவன் பொருளறியாமல் ஒரு சூத்திரத்தைப் பெற்று" னென்று கூறப்படுகின்றது.

இனி, அக்காலத்து நூல்களெல்லாம் ஓலைச்சுவடி களிலேயே எழுதப்பட்டமை யாரு மறிவர். இக்கார ணத்தால் நூலைப் போற்றிப் பாதுகாக்க வேண்டியது அக்காலத்து மக்களுக்குப் பெருங்கடமையா யிருந்தது. இங்ஙனம் நூல்களை வருந்தித் தேடி எழுதிக் காப்ப தும், அந்நூல்களைக் கற்பதுமாக இரு வருத்தந்தரும் செயல்களை மக்கள் செய்யவேண்டியவராக இருந்தனர். நூல்களை வருந்தித் தேடி எழுதிப் போற்றிக்கொண் டொழுகல் பலர்க்கும் இயலும் ஆயினும், அங்ஙனம் போற்றிக் கொண்ட நூலை யுணர்ந்தறிதல், சிறந்த அறிஞர்க்கே சாலும். ஆதலின், சிறந்த அறிவு வாய்க்கப் பெறுதார் நூலைத் தேடி எழுதிப் போற்றிக் கொண் டமைவதோடிருந்து அதைக் கற்றுணரும் வன்மையிலராவர். ஆயினும், அவர் எழுத்தறியார் செய்ய இயலாத (நூலை எழுதிப்போற்றும்) செயலைச் செய்தனராதலின், அதனுலாயினும் பெருமையுற்றன ரன்றே? ஓலைச் சுவடியில் நூல்கள் அமைந்த காரணத் தால், இவ்வகையில் சில மக்களும் ஒழுகிய தன்மையை ஒரு நாலடி கூறுகிறது. அச்சுப்பொறி மிகுந்திருக்கும் இக்காலத்தே நூற்பொரு ளுணர்ச்சியற்ருேர் நூலைத் தொகுத்து மகிழாரன்றே? அச்செய்யுள் வருமாறு :

"புத்தகமே சாலத் தொகுத்தும் பொருள்தெரியார்
உய்த்தக மெல்லாம் நிறைப்பினும் மற்றவற்றைப்
போற்றும் புலவரும் வேறே பொருள்தெரிந்து
தேற்றும் புலவரும் வேறு."

புத்தகங்களைப் போற்றும் புலவ ரென்றும், புத்தகப் பொருளைத் தாம் அறிந்து பலர்க்கும் உணர்த்தும் புலவரென்றும் கூறப்படுகின்றமை காண்க.

இனி, முற்காலத்து மக்கள் கல்வியின் சிறப்பை மிகுதியும் உணர்ந்து, கற்றோர் தாழ்குலத்தவராயினும், அவர் குல நோக்கி அவரை இழிக்காது, கல்வி நோக்கி அவரைப் பெரியாராகவே கொண்டனர். குலப் பாகுபாட்டை அக் கால மக்கள் சிறந்தாதகக் கருதவில்லை.

"நல்ல குலமென்றும் தீய குலமென்றும்
சொல்லள வல்லால் பொருளில்லை—தொல்சிறப்பின்
ஒண்பொருள் ஒன்றோ தவம்கல்வி ஆள்வினை
என்றிவற்றான் ஆகுங் குலம்."

என்ற நாலடியாரைக் காண்க.

உயர்குலம் தாழ்குலம் என்னும் பாகுபாட்டை அக் கால மக்கள் சிறந்ததாகக் கருதவில்லை என்பது தெளியக் குறிப்பிடப்படுகிறதன்றே? செல்வம், தவம், கல்வி, முயற்சி என்பனவே ஒருவனை உயர்த்தும் என்று சொல்லப்படுகின்றது. இவற்றுள் கல்வி ஒன்றாக அமைந்திருப்பது நோக்கத்தக்கது. கற்றோர் தாழ்குலத்தில் பிறந்தாராயினும் அவரை மேலோராக மதித்தனர் என்பதைத் தெளிய ஒரு நாலடி யுணர்த்துமாறு காண்க:

"களர்நிலத்துப் பிறந்த உப்பினைச் சான்றோர்
விளைநிலத்து நெல்லின் விழுமிதாக் கொள்வர்
கடைநிலத்தோ ராயினும் கற்றுணர்ந் தோரைத்
தலைநிலத்து வைக்கப் படும்."

தாழ்குலத்தில் பிறந்த கற்ருேர்க்குக் களர்நிலத்துப் பிறந்த உப்பு உவமை கூறப்படுகிறது. அவரை மேல் குலத்திற் பிறந்தாரைப் போலவே சிறப்பாகக் கொண் டொழுகினர் என்பது “தலைநிலத்து வைக்கப் படும்” என்றதால் உணர்த்தப்படுகின்றதன்ருே?

இங்ஙனம் தாழ்குலத்தில் பிறந்தாராயினும், கற்ருேரை மேல்குலத்தாரைப் போலவே கொண்டு சிறப்புச் செய்து தலைமையில் வைத்துப் பணிந்தொழு கினர் என்பதை மற்ருெரு நாலடியும் உணர்த்து கின்றது.

> “தோணி இயக்குவான் தொல்லை வருணத்துக்
> காணின் கடைப்பட்டான் என்றிகழார்—காணும்
> அவன்துணையா ஆறுபோ யற்றே நூல்கற்ற
> மகன்துணையா நல்ல கொளல்.”

ஈண்டுத் தாழ்குலத்தில் பிறந்த கற்ருேனுக்குத் தோணிவிடும் இழிகுலத்தான் உவமை கூறப்படுகிருன். கற்ருேரே மக்களைத் துன்பத்தினின்றும் கரையேற்றும் வல்லோராக மக்கள் கொண்டு அவரைச் சார்ந்து ஒழுகிய தன்மையை இந் நாலடி காட்டுகின்றது.

இனி, அக்காலைக் கல்வியின் சிறப்பை யுணர்ந்த மேலோர் எக்காலும் மேன்மேலும் கற்றுப் பொழுதை நற்பொழுதாகக் கழித்தனர்.

> “கல்லாக் கழிப்பர் தலையாயார்.”

என்ருெரு நாலடி குறிப்பிடுமாற்றைக் காண்க. மேலோர் அவையுள் அறிவுரை வழங்கியும் கற்றறிந் தார் பலரும் ஒன்றுகூடி அறிவின்பம் நுகர்ந்தும் மேம் பட்டனர்.

"மெய்ஞ் ஞானக் கோட்டி."

என்று உயர்ந்தோர்அவை ஒரு நாலடியில் குறிக்கப் படுகிறது.

" தவலருந் தொல்கேள்வித் தன்மை யுடையார்
இகலிலர் எஃகுடையார் தம்முட் குழீஇ
நகலின் இனிதாயிற் காண்பாம் அகல்வானத்(து)
உம்பர் உறைவார் பதி."

என்ற நாலடியை நோக்குக. ஈண்டுக் கற்ரேர் தம்முள் கூடி உரையாடி மகிழ்தலுக்கு விண்ணுலகின்பமும் ஒவ்வாதென்று கூறப்படுமாறு காண்க.

மேலும் கற்ருரொடு பழகும் இன்பத்தைக்,

" கனைகடல் தண்சேர்ப்ப கற்றறிந்தார் கேண்மை
நுனியிற் கரும்புதின் றற்றே."

என்று மற்ருெரு நாலடி கூறுகிறது.

இக் கல்வியின் சிறப்பை ஆண்பாலார் பெண் பாலார் என்னும் இருபாலாரும் ஒப்ப உணர்ந்து மேற் கொண்டு சிறந்திருந்தனர்.

" குஞ்சி யழகும் கொடுந்தானைக் கோட்டழகும்
மஞ்ச ளழகும் அழகல்ல—நெஞ்சத்து
நல்லம்யாம் என்னும் நடுவு நிலைமையால்
கல்வி யழகே யழகு "

என்ற இந்நாலடியில் குஞ்சி ஆடவர் மயிர் முடியினை யும், மஞ்சள் பெண்டிர் முகப் பூச்சையும், கொடுந் தானைக்கோடு இருபாலார் உடையின் சரிகைக் கரை முதலியவற்றையும் உணர்த்துமாறு காண்க.

கல்வியின் பயன் நன்மை தீமை பகுத்துணரும் நல்லுணர்ச்சி வாய்க்கப் பெறுதலே என்று கொண் டிருந்தனர் மக்கள். பலப்பல நூல்களைக் கற்று நூற்

பொருளை யெல்லாம் மறவாமல் மனத்தகத்தே கொண்டிருந்தாராயினும், அக் கற்ற கல்வியால் மனம் பண்பட்டு நல்லுணர்ச்சி வாயாவிடத்து, அக் கல்வி ஒரு சுமையேயன்றி வேறாகா தென்று கொண்டனர்.

"ஓதியும் ஓதார் உணர்விலார்."

என்னும் நாலடியால் இதை உணர்க.



கழக வெளியீடு: ௬௨௩

# குமரகுருபரர் காட்டியவழி




ஆசிரியர்:

கழகப் புலமையாளர்,

வித்துவான்,

**திரு. பெ. பழனிவேல பிள்ளை.**





திருநெல்வேலித் தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,

திருநெல்வேலி. :: சென்னை-1.

# பதிப்புரை

தமிழ்மொழி மறுமலர்ச்சி பெற்றுவரும் இந்நாளில், தமிழுல கில் பலப்பல வகை நூல்கள் தோன்றிப், பழமைக்குப் பழமை யாய்ப் புதுமைக்குப் புதுமையுமாந் தன்மை வாய்ந்த நந்தமிழ் மொழிக்கு, ஆக்கமளித்து விளக்கந் தருதல் இயல்பே. புதுமை நலஞ் சிறக்க, நூல்கள், காலவகையில் வளர்ச்சியுற்ற பல கலைத் துறைகளிலும் இயலும். இங்ஙனம் புதுப்புதுக் கருத்துக்களையும் பிறநாட்டு வளர்ச்சியுற்ற கலைகளையும் விரும்பிக்கொண்டு காலத் துக்கேற்ப நந்தமிழ்மொழியை வளம்படுத்துவது இன்றியமை யாதது போலவே, பழம் பண்பாட்டையுணர்ந்து போற்றும் வகையில் நம் பண்டைப் பெருந் தமிழ்ப்புலவோர் தம் அறிவாற் கண்டெழுதிய அரும்பெரும் நூல்நலங்களைப் பலவகைத் துறை யில் ஆய்ந்தெழுதிப் பயன்கோடல், கலைநலங்காணும் நாகரிக மக்கட் கூட்டத்திற்கு இன்றியமையாக் கடப்பாடாகும். இவ் விருவகை முயற்சியிலும் பிற நாட்டார் பலப்பல நூல்கள் இயற்றித், தம் மொழியையும், தம்மையும் யாரும் போற்றுமாறு ஒழுகுகின்றனர்.

புலமை நலஞ்சான்ற அறிவோர் நூல்களை ஆராயும் நூல் வகையுள் ஒன்றாகக் குமரகுருபரர் காட்டியவழி என்னும் இந் நூல் எழுகின்றது. இது குமரகுருபரர் நீதிநெறி விளக்க மென்னும் நூலால் மக்கட்கு வழங்கிய அறிவுரைகளை ஆய்ந்து, அந்நூல்நலங் காண எழுந்தது; எளிய நடையில் இயன்றது. இங்ஙனம் பண்டைப்புலவோர் நூல்நலங்காணும் முறையில் மிகச்சில நூல்களே எழுந்துள்ளன. கழகப் புலமையாளர் வித்துவான் பெ. பழனிவேல பிள்ளை இயற்றிய இச்சிறு நூலையும் விரும்பி ஏற்றுத், தமிழ் ஆக்கவேலையில் மக்கள் பெரிதும் துணைபுரிவாராக! இவ்வகை நூல்கள் மாணவ உலகத்துக்குப் பெரும்பயன் அளிக்கும் என்னுந் துணிபுடையோம்.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# உள்ளுறை

# குமரகுருபரர் காட்டியவழி



## க. தோற்றுவாய்

ஒரு நாட்டு மக்களின் தன்மையையும், உயர்ந்த பண்புகளையும் அம் மக்கள் மொழியில் அமைந்து விளங்கும் நூல்களாலேயே அறியலாம். நூல்களெல்லாம், அந் நாட்டில் தோன்றிய அறிவிற் சிறந்த பெரியோர்கள், மற்றை மக்கள் வாழ்க்கை முறையில் அறிந்து கடைப்பிடிக்க வேண்டி உரைத்த, உண்மைகள் பொதிந்த அறிவுரைகளைக் கொண்டுள்ள மணிக்கலங்கள் அன்றோ! அப் பெரியோர்கள் அன்றோ தாங்களும் வாழ்க்கைப் பயனை யுணர்ந்தவர்களாய்ப், பிறரையும் வாழ்க்கையைப் பயனுடைய வழியில் செலுத்துமாறு செய்கின்றனர். ஒரு நாட்டு முன்னேற்றமும், அறிவிற் சிறந்த அந் நாட்டுப் பெரியார்களாலன்றோ அமைகின்றது.

ஆகவே, ஒரு நாடு, அந் நாட்டுப் பெரியோர்களும் அவர் இயற்றிய நூல்களுமே வழிகாட்டியாக அமையக், காலப்போக்கில் மேன்மேலும் முன்னேறிக்கொண்டு செல்கிறது. இத்தகைப் பல பெரியோர்களும் அப் பெரியோர் இயற்றிய பல நூல்களும் பெறாத நாடும், உலகில் முன்னேற்றம் அடையாமல் தாழ் நிலையே எய்தும் என்க.

இனி, நந் தமிழ்நாட்டை நோக்கின், இத் தமிழ் நாட்டில் பழங்கால முதல் அறிவிற் சிறந்த பெரியோர் களுக்கும் அவர் இயற்றிய நூல்களுக்கும் குறைவில்லை. நந் தமிழ் நாட்டில் முதற் சங்கம், இடைச் சங்கம், கடைச் சங்கம் என்று மூன்று சங்கங்கள் தோன்றி நிலை பெற்றிருந் தன என்பதும், அச் சங்கங்களில் வீற்றிருந்து தமிழ் ஆராய்வாராய்ப் புலவர் மிகப் பலர் விளங்கி யிருந்தனர் என்பதும், அவர் இயற்றிய நூல்களும் பலவகைப் பட்டன என்பதும், அவற்றுள்ளும் பிற பழந்தமிழ் நூலுள்ளும் இறந்தன போக இருப்பன எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, பதினெண் கீழ்க்கணக்கு என்னும் தொகை நூல்களும், சிலப்பதிகாரம், சிந்தாமணி, மணி மேகலை என்னும் தமிழ் வளம் பழுத்த விழுமிய நூல் களும் பிறவும் என்பதும் அறியப்பட்டனவே.

சங்ககாலம் முதற்கொண்டு தமிழ்ப் பெரியோர் செய்த நூல்கள் பல துறையிலும் அமைந்தவாயினும், மக்கள் தம் வாழ்க்கையை நன்னெறியில் செலுத்துமாறு வலியுறுத்துக் கூறுவனவா யமைந்த, மக்கள் ஒழுக்க நெறியாம், அறநெறியைக் கூறும் நூல்களே பலவாம். இதனால் தமிழர், வாழ்க்கையை நெறியறிந்து செலுத்த நினைந்து, ஒழுக்க நெறியையே குறிக்கோளாகக்கொண்டு, அவ் வழியிலே தலைநிற்பதில் முயன்று, வாழ்க்கைப் பயனை அடைதற்கே நின்றனர் என்பது தெளியப்படும்.

இத்தகைய அறநெறியைக் கூறுவனவேயாய் அமைந்தனவே நாலடியார், நான்மணிக்கடிகை, இனி யவை நாற்பது, இன்னா நாற்பது, திருக்குறள், திரிகடுகம், ஆசாரக் கோவை, பழமொழி என்னும் பதினெண் கீழ்க் கணக்கில் அமைந்த நூல்கள் பலவுமாம்.

இவற்றுள் வள்ளுவர் இயற்றிய திருக்குறள் என்னும் ஒப்புயர்வற்ற செந்தமிழ் நூலே அறநெறி பலவற்றையும் தன்னுட் கொண்டதாய் அறநெறிகளை மக்கள் மனங்கொள்ளுமாறு வலியுறுத்துத் தெளித்துக் கூறுவதாய் முடிமணி போன்று விளங்குவது.

இதற்குப் பின்னரும், இத்தகைய அறநெறி கூறும் நூல்கள் ஒவ்வொரு வகையில் சிறப்புடையவாய்ப் பல எழுந்தன. ஆத்திசூடி, கொன்றைவேந்தன், மூதுரை, நல்வழி, நறுந்தொகை, நன்னெறி என்பனவெல்லாம் இப் பொருள் கூறி எழுந்தனவே. ஆத்திசூடி முதலிய சில நூல்கள், ஔவை என்னும் தமிழ் மூதாட்டியாரால் இளஞ்சிறுார்க்கு ஏற்பச் செய்யப்பட்டன என்பதை யாவரும் அறிவர்.

இம் முறையில், பிற்காலத்தே திருக்குறளுக்கு ஒத்த சிறப்பினை யுடையதாய் எழுந்தது, "நீதிநெறி விளக்கம்" என்னும் அரிய செந்தமிழ் நூலாகும். இதை இயற்றிய வர், உலகத்துப் பொருள்களின் தன்மையை உள்ளவா றுணர்ந்து, முற்றத் துறந்த முனிவராய் விளங்கிய குமர குருபர அடிகள் என்பார்.

### அடிகள் காலம்

இவ்வடிகள் பதினேழாம் நூற்றுண்டில் தமிழ் நாட்டில் பெருந் துறவியாயும், அருந்தமிழ்ப் புலவராயும், சிவநெறிச் செல்வராயும் விளங்கியிருந்தவர். அக்காலத் தில் தமிழ்நாடு நாயக்க மன்னர் ஆட்சியில் அமைந் திருந்தது. இவர் நாளில் மதுரையிலிருந்து அரசு புரிந் தவர் திருமலை நாயக்கர் என்பவர். இவரும் சமயப்பற்று வாய்ந்தவராய் இருந்தமையின் அடிகளின் நண்பராயும் அமைந்திருந்தனர்.

**அக்கால நாட்டுநிலை**

அக் காலங்களில் அடிக்கடி உள் நாட்டுப் போர்கள் நிகழ்ந்தனவாயினும் மக்கள் கல்வியும் செல்வமும் நிறைந்து வாழ்ந்து வந்தனர். ஆயினும் அவ்வப்பொழுது ஆட்சி புரியும் அரசர்களது தன்மையைப் பொறுத்து நாட்டு நிலையும் ஒரு சிறிது உயர்ந்தும் தாழ்ந்தும் வந்தது. இக்காலத்திலே வாணிகத்தின் நிமித்தம் வந்த போர்ச்சுக்கீசியரும் டச்சுக்காரரும், நாயக்க மன்னர்களுக்கு அடங்கித் தமிழ்நாட்டின் கீழ்கடற்றுறைப் பக்கங்களில் சில பகுதிகளுக்குரிமை பூண்டிருந்ததோடு தங்கள் சமயத்தைப் பரப்புதலிலும் ஈடுபட்டிருந்தார்கள்.

**அடிகள் வாழ்க்கைக் குறிப்பு**

குமரகுருபரர் திருநெல்வேலிச் சில்லாவில் தாமிர வர்ணி ஆற்றங்கரையில் அமைந்துள்ள ஸ்ரீ வைகுண்டம் என்னும் சிற்றூரைச் சேர்ந்த கைலாயபுரத்தில் பிறந்தவர்; வேளாண்குடியினர்; சிறுவயதில் ஊமையாயிருந்து திருச்செந்தில் முருகனருளால் பேசப்பெற்றவர்.

இவர் காலத்துத் திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனத்து ஞான ஆசிரியராய் ஞானமணி விளக்காய் விளங்கியிருந்த மாசிலாமணி தேசிகரின் பெருமையைக் கேள்வியுற்று, அவரைத் தம் ஞானாசிரியராகக் கொண்டு அவரிடத்து ஞானங் கேட்டுத் துறவு பூண்டவர்.

பின் காசி சென்று அங்கு அரசு செய்திருந்த மகமதிய மன்னனிடம் தம் அறிவு வன்மையாலும் சொற்றிறத்தாலும் நண்பராய், அவனிடம் இடம் பெற்று வாங்கி ஒரு மடம் சமைத்து, அங்கிருந்து

கொண்டு கோவில் வழிபாடு செய்வித்தும் சிறந்த அறங்களை இயற்றியும் விளங்கியிருந்தவர்.

இவர், கடவுண்மாட்டெழுந்த ஆரா அன்பினால் பல திருத்தலங்கட்குச் சென்று வழிபட்டுக் கந்தர் கலிவெண்பா, கைலைக் கலம்பகம், மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ், திருவாரூர் நான்மணிமாலை, முத்துக் குமாரசாமி பிள்ளைத்தமிழ், சிதம்பர மும்மணிக்கோவை, காசிக்கலம்பகம் முதலிய தமிழ்வளம் பழுத்த விழுமிய நூல்களைச் செய்தவர்.

'நீதிநெறி விளக்கம்' என்னும் நூல் திருமலை நாயக்கர் விருப்பத்திற் கிணங்கச் செய்யப்பட்ட தென்பர்.

"அரைசரும் குடிகளும் அம்ம வேறலர்
உரைசெயின் உயிர்உலாம் உடல மாவரால்."

என்பவாதலின், நாடு நலம்பெற அரசர்க்கும் மக்கட்கும் சிறந்த அறிவுரைகளை இந் நூலுள் எடுத்துக் கூறு கின்றனர்.

இவ்வடிகள் கூறும் உலகியல் ஒழுக்கத்தினையும், அறநெறி யியற்கையினையும், அவற்றை வகுத்துணர்த்து மாற்றையும், அவர்தம் உள்ளக்கிடக்கையையும் உணர் தல் வாழ்க்கை நலம்பெற விழையும் தமிழ்மக்கட்கு வேண்டுவதாகலின், அவற்றை ஆராய்ந்துணர்தலும் நமது கடமையாயிற்று.

---

## உ. நூற்பொருளும் பகுப்பும்

அடிகள் தாம் சிறந்ததென் றுணர்ந்தனவும் மக்கள் தம் வாழ்க்கையில் கடைப்பிடிக்கத் தக்கனவுமான உயர்ந்த ஒழுகலாறுகளையே சுருங்கிய முறையில் தம் நூலுள் எடுத்துக் கூறுகின்றனர். இவ்வொழுகலாற் றையே நீதி என்ற சொல்லால் குறித்தனர். 'நீதி' என்ற சொற்குப் பொருள், 'உலகத்தோடு பொருந்துதல்' என்றே, "ஐயனின்று நன்றி பயக்கும்" என்ற குறளின் விளக்க உரையில் உரைத்தனர் பரிமேலழகரும். உலகத் தொடு பொருந்தலாவது உலகியல் உணர்தலும் அறநெறி யறிதலுமன்றே; உலகம் என்பது சிறப்பாக உயர்ந் தோரையே குறிக்குமாதலின்.

உலகியல் ஒழுக்கமாவது பொருளீட்டிப் பலரோடுங் கலந்து வாழும் முறையாகும். அறநெறி யொழுக்கமா வது மனமொழி மெய்கள் தூயனவாய், ஈதல் முதலிய நல்லியல்பு பொருந்தி, அவ்வுலகியலை மேம்பட நடத்த லாகும். ஆகவே உலகியலும் அறநெறியும் பிணைந்து ஒன்றாய் நிற்பன. இவ்வுலகியலொழுக்கமும் அறநெறி யொழுக்கமும் இந் நூலுள் கூறப்படும். இவையே மக்களொழுக்கமாய் மக்கள் வாழ்க்கை நெறியாகும். இவற்றின் மாறுபட்டு, உலகியல் உணராமையும் மறநெறி நிற்றலும் மக்களியற்கைக்கு மாறுபட்ட விலங்கியற்கையாம் என்க.

மக்கள் வாழ்க்கை நெறியாம் உலகியலையும் அற நெறியையும் ஒருவனுக்கு அறிவுறுத்துவதுதானும் கல்வியேயன்றிப் பிறிதில்லை. கற்று அறிவிற் சிறந்தார், உலகியல் உணர்ந்து ஒழுகி அறநெறி நின்று, செயற்கருஞ் செயல்களைச் செய்து புகழ் மேம்பட்டு விளங்குவதும், கல்லாக் கயவர், உலகியல் உணராது, அறநெறிக்கு

மாறான மறநெறி நின்று, சிறந்த செயல் மேற்கொள்ளாது விலங்கினங்கள் போன்று உண்டு உறங்கிக் காலங் கழிப்பதும் பெரும்பான்மையாக உலகில் காணப்படுவனவே. ஆதலின் கல்வியே மக்களுக்கு உண்மை வாழ்க்கை நெறியைப் புகட்டுவதென்பது துணியப்படுமன்றோ ?

"விலங்கொடு மக்க ளனையர் இலங்குநூல்
கற்றாரோ டேனை யவர்."

என்ற பொய்யில் புலவன் பொருளுரையையும் நோக்குக.

இது கருதியே உலகநடை யுணர்ந்து நடக்க வேண்டிய மக்களுக்கு அதை யுணர்த்தும் கல்வியை விரித்துத் தம் நூலின் முதற்கண் கூறுவாராயினர். மேலும் கல்வியைப்பற்றிய முதற் செய்யுளிலேயே,

"அறம்பொருள் இன்பமும் வீடும் பயக்கும்."

என்று உலக நடையில் மக்கள் குறிக்கோளான அறம் பொருள் இன்பம் வீடு என்ற நான்கையும் கல்வியே கொடுக்குமென்றுங் கூறியதுங் காண்க. கல்வி யறிவால் அறநெறி யுணர்தலும், அவ்வறிவாலேயே பலவகைத் தொழிற்றுறைகளைத் தெரிந்து பொருளீட்டலும், அவ்வறிவுடைமையால் தானும் அப்பொருள்கொண்டு வகையறிந்து இன்புற்றும் தன்னைச் சேர்ந்தாரையும் பிறரையும் இன்புறுத்தியும் வாழ்தலும், அவ்வறிவாலேயே வீட்டுநெறியைக் கடைப்பிடித்தலும் இயலுவனவன்றே.

உலகநடை யறிந்தொழுகுதற் கேதுவான கல்வியைக் கூறியவர், பின் அவ்வுலகநடை உலகில் நிலைபிறழாது காக்கவல்ல அரசியல் கூறினர். அரசனில்லாவிடத்து உலகியல்கெட்டுத் தீயோர் மறநெறியே மிகுந்து நாடு குன்றுமன்றே?

"மாதவர் நோன்பும் மடவார் கற்பும்
காவலன் காவல் இன்றெனின் இன்றாம்."

என்று மணிமேகலை கூறுமாற்றையும் நோக்குக. மடவார் கற்புக் கெடின் உலகியல் ஏது? இல்லறமென்னும் நல்லறமேது? மாதவர் நோன்புக்குத் தடைநேரின் துறவறமேது?

மேலும், மன்னன் எவ்வழி அவ்வழி குடிகளாதலின், அரசியல் மேன்மையாலேயே உலக நடையில் மக்களும் சிறந்து விளங்குவர்.

"இகல்மன்னன் சீர்வழிப் பட்டதே மன்பதை மற்றென்செய்யும்
நீர்வழிப் பட்ட புணை."

என்று அடிகளும் இதைத் தாமேயும் தம் நூலகத்தே உணர்த்துகின்றனர்.

உலக நடையை அறிவுறுத்துங் கல்வியையும் உலக நடை நிலைபிறழாது காக்கவல்ல அரசியலையும் கூறியபின், அறநெறி வழாத உலகியலொழுக்கத்தைச் சிறப்பாக எடுத்து உணர்த்துகின்றார்.

முயற்சியின்றி உலகியல் இல்லையாகையால் அம் முயற்சியின் மேன்மையையே முன்னர்க் கூறிப் பின் வினையாடற்றன்மையைக் கூறுகிறார்.

"வினைக்கண் வினைகெடல் ஓம்பல் வினைக்குறை
தீர்ந்தாரின் தீர்ந்தன் றுலகு."

என்பதும் மெய்ம்மொழியன்றோ? பின், மேற்கொண்ட வினைக்கண் பகைநேர்ந்துழிப் பகையோம்பும் திறத்தையும், எச் செயலிலும் மனமொழி மெய் தூயனாய் இருத்தற்றன்மையினையும், பொருளீட்டு மாற்றையும், பொருளை ஈத்துவக்கும் இன்பத்தினையும், அதனோடு தொடர்புடைய இன்சொலின் மேன்மையையும் செல்வாக்கின் பயனையும் கூறுகிறார்.

இவற்றின்பின் உலகநடை இறந்தொழுகும் தீயோர் இயற்கைகள் சில கூறுகிருர்.

கடைசியாக உலக நடையின் மறுபக்கமான துற வோர் இயற்கை கூறி நூலே முடிக்கின்றனர்.

இங்ஙனம் சிறந்த அறநெறியே இடையிடை விரவ மக்கள் மேற்கொள்ளத்தகுந்த உலகியலுக்கே வழி காட்டினராய் உலகியல் ஒழுக்கமும் அறநெறி இயற்கை யும் என்று பகுத்துணருமாறு உலகநடையை அறிவுறுத் தும் கல்வியையும், உலகநடை பிறழாது காக்கவல்ல அரசியலேயும், உலகநடையையும், அதன் மறுபக்கமான துறவையும் அடிகள் வகுத்துக் கூறினர் என்க.

இனி, வாழ்க்கைநெறியைப் புகட்டும் கல்வி, ஒருவ னது இளமைப் பருவத்தேயே பயிலத்தக்கதும் ஆகும். அடுத்துக் கூறப்படும் அரசியல் உலகியல் இரண்டும் பொருளொடு தொடர்புடையனவாய் இளமைப் பருவம் கழிந்து வாழ்க்கையில் தலைப்படுங்கால் பொருந்துவன. கடைசியில் கூறப்படும் துறவு வீட்டுநெறியாய் அமைந்து வாழ்க்கையில் முடிந்த பயனைத் தலைக்கூட்டும். அடிகள் கூறியவை இம் முறையும் பொருந்தியிருப்பது காண்க.

நூற்பொருளும் கடவுள் வாழ்த்தும்

இனி, நூல் நுதல் பொருளெல்லாம் குறிப்பால் தன்னகத்தடக்கி நிற்றலும் மங்கல வாழ்த்துக்கு இலக் கணமாதலின் இந்நூல் நுதல் பொருளேயும் இந் நூலின் மங்கல வாழ்த்துக் குறிக்கின்றது.

இந் நூலின் மங்கல வாழ்த்து,

“ நீரிற் குமிழி இளமை நிறைசெல்வம்
நீரிற் சுருட்டு நெடுந் திரைகள்—நீரில்

எழுத்தாகும் யாக்கை நமரங்காள் என்னே
வழுத்தாத தெம்பிரான் மன்று."

என்பது. இச் செய்யுளை அடிகள் தம் நூலுக்கு மங்கல வாழ்த்தாக அமைத்ததோடு, மக்கள் யாவரும் இறைவனை வணங்கிப் பயன்பெற வேண்டும் என்ற இன்றியமையாக் கடப்பாட்டையும் காரணம் காட்டி வற்புறுத்துகின்றார்.

இளமை நீரில் உண்டாகும் குமிழியை ஒத்தது.[1] செல்வம் நீரில் சுருண்டு சுருண்டு எழுகின்ற அலையை ஒத்தது. உடல் நீரில் எழுதும் எழுத்தை யொத்தது. இளமை செல்வம், உடல் என்றவற்றின் நிலையற்ற தன்மையை யுணர்ந்து, இவற்றை அழியக்கூடிய உலக இன்பத்துக்கே பயன்படுத்தாமல், இவற்றால் என்றும் அழியா இன்பமாகிய வீட்டின்பத்துக்கு வழிதேடுவீராய், இறைவனை அன்புசெய்து வணங்குவீராக என்று கூறுகின்றார் அடிகள்.

உலக இன்பம் நிலையற்றது என்று கூற வந்தவர், உடலோடு இளமை செல்வம் என்ற இரண்டையும் உடன் கூறினமை சிந்திக்கத்தக்கது. உடலிருந்தும் இளமையே உடலுக்கு வலியைக் கொடுத்து உடலைத் தொழிலுறச் செய்வதால், அச் சிறப்புத் தோன்ற அவ்விளமையை உடன் கூறினார். மேலும் இளமையே மக்களை இன்பத்துறையிலும் இழுத்துச் செல்வதென்பதை "இளமை மீதூர இன்பத் துறையினில் எளியரானார்" என்று தம் பெரியபுராணத்தில் சேக்கிழார் உணர்த்துமாற்றையும் காண்க. இவ்வுலகத்து உடல்

1. உருவகம் உவமையின் வேறுருவேயாதலின் உவமை வாய்பாட்டால் கூறப்பட்டது.

பெற்றுெருவன் தான் இன்புறுவதற்கு உறுகருவி யாய்க்கொண்டு தேடுவது செல்வத்தையே ஆதலால் அச் சிறப்பு நோக்கி அச் செல்வத்தையும் உடன் கூறினர்.

அறிவுநலஞ்சான்ற தமிழ்ப்பெரியோர் இயற்றிய பழந்தமிழ் நூல்களினும் அப் பெரியோர் இம்மூன்றை யுமே ஒருங்கு கூறி நிலேயாமையை உணர்த்துதல் காணத் தக்கது. எடுத்துக்காட்டாக ஐம்பெருங் காப்பியத்துள் ஒன்ருய் அமைந்து அறநெறியை வகுத்துரைப்பதையும் ஒரு பெருநோக்காகக்கொண்ட மணிமேகலே யென்னும் மாண்புடை நூலுள்,

> "இளமையும் நில்லா யாக்கையும் நில்லா
> வளவிய வான்பெருஞ் செல்வமும் நில்லா
> ..............................
> மிக்க அறமே விழுத்துணே யாவது."

என்று இம் மூன்றன் நிலேயாமையே எடுத்துக் கூறி யிருப்பதுங் காண்க.

இனிக், காப்பியத்துள் தலேசிறந்த காப்பியமாயதும் தந் நாட்டரசைத் துறந்து அந்தமில் இன்பத்து அழியா வீட்டரசை எய்துமாறு துறவு பூண்டொழுகிய இளங்கோவடிகளால் இயற்றப்பெற்றதுமான சிலப்பதி காரமென்னும் சிறப்புடை நூலுள்,

> "உருகெழு மரபின் அயிரை மண்ணி
> இருகடல் நீரும் ஆடினே ௵யினும்
> சதுக்கப் பூதரை வஞ்சியுள் தந்து
> மதுக்கொள் வேள்வி வேட்டோ ௵யினும்
> மீக்கூற் ருளர் யாவரும் இன்மையின்
> யாக்கை நில்லா தென்பதை யுணர்ந்தோய்
> மல்லன்மா ஞாலத்து வாழ்வோர் மருங்கின்

> **செல்வம்** நில்லா தென்பதை வெல்போர்த்
> தண்டமிழ் இகழ்ந்த ஆரிய மன்னரின்
> கண்டனை யல்லையோ காவல் வேந்தே
> **இளமை** நில்லா தென்பதை எடுத்தீங்கு
> உணர்வுடை மாக்கட் குரைக்க வேண்டா
> திருஞெமிர் அகலத்துச் செங்கோல் வேந்தே
> நரைமுதிர் யாக்கை நீயுங் கண்டனை."

என்று இம் மூன்றன் நிலையாமையுமே எடுத்துக் கூறி யிருப்பது காணத்தக்கது.

இம் மங்கல வாழ்த்தால் இளமை, செல்வம், உடல் என்றவற்றின் நிலையாமையைக் கூறி மக்களை இறைவனிடம் ஆற்றுப்படுத்தியவர், இம் மூன்றையும் பயனுடையவாய்ச் செய்துகொண்டொழுகி இறைவனை யடையும் வழியையே விரித்து, இந்நூன் முழுதுங் கூறுகின்றனர் என்று கொள்க.

இளமையைப் பயனுடையதாகச் செய்ய அப் பருவத்தில் ஒருவனால் கல்வியே கற்கப்படவேண்டும் என்றுணர்த்துவாராய் அக் கல்வியின் மேம்பாட்டை முதலில் விரித்துரைக்கின்றார் ; இரண்டாவதாகப் பொருளின் துணைக்காரணமான அரசியல் கூறியும், அப் பொருள் துணைக்கொண்டு மேற்கொள்ளத் தக்க அறநெறி வழாத உலகியல் ஒழுக்கங் கூறியும் சென்றனர். கடைசியாக உடற்பயனாக அடையவேண்டுவது அழியா வீட்டின்பமே யாதலின் அதனை யடைதற்குரிய சிறந்த வழியாகத் துறவறத்தைக் கூறி முடித்தார். இங்ஙனம் நூலில் விரித்துச் சொல்லக் கருதிய பொருளுக்கு ஒரு தோற்றுவாயாக, இம் மங்கல வாழ்த்து அமைந்ததும் நோக்கத்தக்கது.

## ௬. அடிகள் கண்ட மக்களியற்கை

அடிகள் மக்களுக்காம் ஒழுக்க நெறியாகக் கூறு வனவற்றை நோக்கப் புகுமுன், உலக மக்கள் பலரின் பொதுவான இயற்கையை உணர்ந்து குறிப்பன அறியத் தக்கன. உலகோரின் பொதுவான குணத்தைப்,

> "பரபரப்பி னோடே பலபல செய்துஆங்கு
> இரவுபகல் பாழுக்கிறைப்ப."

என்று கூறுகின்றனர்.

மக்கள் பலர் எக்காலமும் ஓடியாடி வருந்தி யுழைப் பதை அடிகள் உரைக்கின்றார். ஆயினும் அவர்கள் மேற்கொள்ளும் முயற்சி, சிறந்த பயன் கருதியன்றித் தம் வயிறொன்றைக் கருதியே உணவு தேடுவதாக முடிகின்றது என்பதை யுணர்த்துகின்றார். மக்கள் உணவு தேடுவதற்குரிய முயற்சியைச் செய்வதோடு மற்றும் பெரும்பகுதியாகத் தமக்கும் பிறர்க்கும் நிலைத்த நன்மையைக் கொடுக்கக்கூடிய வழியில் முயலவேண்டு மென்பது அடிகள் கருத்து. சிறந்த அறவழிகளில் நிற்பதே என்றும் நிலைத்த பயனைக் கொடுப்பதாகும். பெண்டிர் மக்களோடு இன்புற்று வேறெச்சிறந்த செயலி லும் ஈடுபடாமல் வாழ்க்கையைக் கழிப்பது வறிதே கழிப்பதாகவே யாகும். ஆதலின் அறச்செயலில் முயல்வது நெல்லுக்கிறைப்பதாகவும், அங்ஙனமாகாது தமக்கும் தம்மைச் சேர்ந்தார்க்கும் மட்டும் பொருள் தேடியே நுகர்ந்து வாழ்க்கைப் பயன் பெறுதுபோதல் புல்லுக்கிறைப்பதாகவும் அமையு மென்றனர்.

இது குறித்தே மற்றோரிடத்தும்,

> "சிற்றின்பம் சின்னீர தாயினும் அஃதுற்றார்
> மற்றின்பம் யாவையுங் கைவிடுப."

என்று கூறி, உலக இன்பமே நோக்கமாகக்கொண்டு உழல்கின்றவர் சிறந்த புகழையும் நிலைத்த இன்பத்தை யும் தரும் அறவழியில் தலைப்படார் என்று பல மக்களின் இயற்கையான அறியாமையைக் கூறினர்.

மேலும் இத்தகையோர் தம்முடலிடத்தே மிகுதி யும் பற்றுவைப்பாராய், அவ் வுடலையே பெரிதாக மதித்து, அவ் வுடல் வருத்தத்துக்கும் உடலழிவுக்கும் அஞ்சிச், சிறந்த காரியங்களில் ஈடுபடார் என்பர். மக்களின் உடற்பற்றைப்,

> "புழுநெளிந்து புண்ணழுகி யோசனை நாறும்
> கழிமுடை நாற்றத்த வேனும்—விழலர்
> விளிவுன்னி மெய்விதிர்ப்பர்."

என்று கூறினர்.

உடலின் தன்மையை எடுத்துக் கூறியது பெரிதும் உணரத்தக்கது. தம்முடலில் புண்ணுண்டாகி அதில் புழுவும் புழுக்கப் பெற்று முடைநாற்றம் வீசினும், அத்தகைய உடலையுங் கூடத் துறத்தற்கு மக்கள் சிலர் அஞ்சுகின்றனர், என்று அவர் தன்மையை விளக்கமாக எடுத்துரைத்தார். இத்தகைய உடற்பற்றுடையார் சிறந்த காரியங்களில் தலைப்படுவரோ? மானங் குறைய வந்துழி உயிரிழப்பரோ? பிறர் துயர் துடைக்கத் தம் உடலை வருத்துவரோ? சிறந்த காரியங்களைச் செய்த வழியன்றோ சிறப்பை யடையலாம். அழியும் உடலிடத்து அளவுகடந்த பற்றுடையார் சிறந்த காரியங்களைச் செய்து அழியாப் புகழுடம்பை எங்ஙனம் பெறுவர்? இங்ஙனம் உடலில் மட்டும் அளவுகடந்த பற்றோடு, தோன்றியது முதல் இறக்கின்றவரை உடலோம்புதற்கே வருந்தி, நாளைக் கழிக்கின்றனர் மக்கள் என்றனர்.

இனிச், சில மக்களின் செயல்களைக் குறிப்பிட்டுரைக்கின்றார். சில மக்கள் உலகில் உண்மைநிலை யுணர்வதில்லை; உணர்ந்தோரையும் தக மதித்து நடப்பதில்லை. உலகத்துப் பொருளொன்றே சிறந்ததெனக் கொண்டு, அது தேடுதலிலேயே தம் முயற்சியைச் செய்து, வேறு நிலையான புகழும் இன்பமும் கொடுக்கும் அறச்செயலில் ஈடுபடாராய், மேலும் உலகத்துப் பொருளுடையாரையே சூழ்ந்து, அவரிடத்துத் தம் குறையிரப்பாராய், அவர் ஏவிய செய்தொழுகுவர். அவர் உலோபியாய் இருப்பினும் பாரார். இதை அடிகள்,

> "இவறன்மை கண்டும் உடையாரை யாரும்
> குறையிரந்தும் குற்றேவல் செய்ப."

என்றுணர்த்துகின்றனர்.

மேலும் இம் மக்கள் செல்வமற்றவராய் நற்குணக் குன்றனைய ஒருவரைக் காணின் அவர்களைச் சேர்கின்றார்களில்லை; அவரிடத்து இன்சொல்லோடு பேசுகின்றார் தானும் இல்லை; மேலும் அவரிடத்து வன்சொல் வழங்கி அவரை அவமதித்துப் புறக்கணிக்கின்றனர். இத் தன்மையையும் அடிகள்,

> "இன்சொல்லன் தாழ்நடையன் ஆயினும்ஒன் றில்லானேல்
> வன்சொல்லின் அல்லது வாய்திறவா."

என்று கூறினர்.

இன்சொல்லும் பணிவும் உடையராய குணச் செல்வர் பொருளற்றவழி அவரிடம் இன்முகந் தானுங் காட்டாது வன்சொல் கூறி அவமதிக்கின்றவர்கள், செல்வன் ஒருவன், இன்முகமும் இன்சொல்லுங் காட்டாது தன்னைச் சார்ந்தவரிடத்தெல்லாம் கொடுஞ்சொல்

வழங்கிச் செருக்கொடு திரிந்தானுயினும் அவன் செவ்வியை எதிர்நோக்கி யிருக்கின்றனர்.

"என்சொலினும்
கைத்துடையான் காற்கீழ் ஒதுங்கும் கடன்ஞாலம்
பித்துடைய வல்ல பிற."

என்ற இச் செய்தியையும் அடிகள் உணர்த்தினர்.

இங்ஙனம் உண்மை யறியாமல் ஒழுகுவது அவர் களது அறியாமையைத் தவிர வேறென்ன? மக்களது அவ் வறியாமையையும் அடிகள் கூறுகின்ருர்.

"நேர்நின்று
காக்கை வெளிதென்பார் என்சொலார் தாய்க்கொலை
சால்புடைத் தென்பாரு முண்டு."

"'காக்கை வெளி'தென்றும், 'தாய்க்கொலை நல்ல'தென் றும் தெளிந்த பொருளை அறிவு மயக்கத்தால் கூறும் மக்களும் உண்"டென்று மக்கள் அறியாமையின் மிகுதியை நன்கெடுத்துக் கூறினர்.

இனி இவ்வறிவற்ருேர் செயலாக மேலும் கூறுவ தாவது :—

"இகழின் இகழ்ந்தாங்கு இறைமகன் ஒன்று
புகழினும் ஒக்கப் புகழ்ப."

செல்வனே அரசனே ஒன்றை இகழ்ந்தானுயின் அறி வற்ற இம் மக்கள் நல்லது தீயது என்று பாராது தாமும் இகழ்கின்றனர். அவன் ஒன்றைப் புகழ்ந்தானுயின் தாமும் புகழ்கின்ருர்கள்.

இங்ஙனம் அறிவற்றவர், அவர்கள் செய்வது தீய காரியங்களேயாயினும், அவற்றையும் தாமே செய்த தாகக் கூறிச் செருக்கியும் திரிகின்றனர்.

"அல்லன செய்யினும் [1]ஆகுலங் கூழாக்கொண்டு
ஒல்காதார் வாய்விட் டுலம்புப."

இம் மக்கள் ஆரவாரத்தையே பெரிதாக மதிக்கின்றனர். 'வாய்விட்டு உலம்புப' என்று அவரது இழிசெயலைத் தெளிய உணர்த்தியவாறு காண்க.

இனி, இம் மக்களின் பொதுவான மற்ருேர் இயற்கையை அடிகள் கூறுவதும் காணத்தக்கது.

"பகையின்று பல்லார் பழியெடுத் தோதி
நகையொன்றே நன்பயனுக் கொள்வார்."

மக்கள் பலர் தாம் மகிழ்ந்திருக்க விரும்புகின்றனர். அங்ஙனம் மகிழ அவர்கள் மேற்கொள்ளும் முறை. பிறர் பழியையெல்லாம் பலர்க்கு எடுத்துச் சொல்லி நகுவதாம். இத்தகையோர் பலரை உலகிற் காணலாம். பிறர் தீமைகூறி மகிழ்வதே அவர் இயற்கையாய் இருக்கிறது. கீழோர் பலர் ஒன்று சேர்ந்து எளியான் ஒருவனைத் தம்மகத்தேகொண்டு அவனை இழித்துக்கூறி நகையாடுவர்; அவனைத் துன்புறுத்தியும் மகிழ்வர்.

"தன்னைத்தான் காதல னாயின் எனைத்தொன்றும்
துன்னற்க தீவினைப் பால்."

என்ற மெய்ம்மொழியை அவர்கள் உணர்ந்தார்களில்லை. இவர்களுடைய செய்கை, 'ஒருவன் உடலின் நடுக்கத்தை நோக்கி மகிழும் பொருட்டு அவனுடைய கன்னத்தில் அறைந்து காணுவதை ஒத்தது' என்றும், 'அவர்கள் பெரியோர்களால் அஞ்சி நீங்கப்படுவர்' என்றுங் கூறினர் அடிகள்.

"மெய்விதிர்ப்புக் காண்பான் கொடிறுடைத்துக்
கைவிதிர்த்து அஞ்சப் படும்." [கொல்வான்போல்

1. ஆகுலம் - ஆரவாரம்.

இனி, மக்களின் மற்றொரு கொடுந் தீச்செயலையும் உணர்த்துவது காண்க.

> "இடைதெரிந்து அச்சுறுத்து வஞ்சித்து எளியார்
> உடைமைகொண்டு ஏமாப்பார்......"

செல்வன் ஒருவன் மேலும் மேலும் செல்வந் தொகுக்கவே முயல்கின்றான். இதற்கவன் மேற்கொள்ளும் வழி, தன்னினும் எளியார் பொருளைக் கொள்வதே. இதற்கு அவர்கள் சோர்வு பார்க்கின்றான். அவர்களைத் தன் வலிமை காரணமாக அச்சுறுத்துகின்றான். பல சூழ்ச்சிகளையும் வஞ்சனையும் மேற்கொண்டு பொருளைக் கவர்கின்றான். இம் முறையில் அவன் தீநெறியில் ஈட்டிய பொருள், மேலும் தீயவழியிலேயே சென்று அவனுக்கு மேலும் மேலும் தீமையேதரும் என்பதை அவன் உணரான். ஈட்டற்குத் தீயவழியைக் கொண்டவன் மனம், செலவிடற்கு நல்வழியை நாடுமோ?

இத்தகைய மக்களெல்லாரும் சிறந்த அறிவு வாய்க்கப்பெறாது, நகைத்துப் பொழுது போக்கும் மக்கட் பதர் என்பது அடிகள் கருத்து.

> "போக்கறு கல்வி புலம்மிக்கார் பாலன்றி
> மீக்கொள் நகையினார் வாய்ச்சேரா."

என்றவிடத்து, உலகத்து மக்களைப் 'புலம் மிக்கார்' என்றும் 'மீக்கொள் நகையினார்' என்றும் இருவகையினராகப் பிரித்தமை காண்க.

---

## ௬. உலகியல் ஒழுக்கம்

அடிகள் பெருந் துறவியாயினும், உலகியலறிஞராய், உலகியலுக்கு வேண்டிய சிறந்த அறிவுரைகளைத் தம் நூலுள் கூறிச் செல்வது பெரிதும் உணரற்குரியது. இவற்றுள் சிறந்தனவற்றை மட்டும் நோக்குவோம்.

உலகியலில் பொருளே மேம்பட்டதென்பதை அடிகள் மக்களுக்கு வலியுறுத்திக் கூறுகின்றனர். கற்றோர் தாமும் பொருளுடைமையாலேயே சிறப்புறுவர் என்றுணர்த்துகின்றனர்.

> "எனைத்துணைய வேனும் இலம்பாட்டார் கல்வி
> தினைத்துணையும் சீர்ப்பா டிலவாம்—மனைத்தக்காள்
> மாண்பிலள் ஆயின் மணமகன் நல்லறம்
> பூண்ட புலப்படா போல்."

என்பது அடிகள் கூறுமாறு.

சிறந்த உவமைகூறி அக் கருத்தைத் தெள்ளிதின் உணர்த்தினர். இல்லறமென்னும் நல்லறத்தைப் பூண் டோனுக்கு வாய்த்த மனைவி நற்குணமிலளாயவழி, அவன் மேற்கொண்ட அறத்தைத் தன் மனம் விரும்பிய வாறு விளக்கமுற இயற்றல் முடியுமோ? அவன் அறச் செயலெல்லாம் தீக்குண மனைவியின் தொடர்பால் தடைப்பட்டுக் குன்றுமேயன்றோ? இதேபோல் கற்றோ னிடத்தும் வறுமை தங்கிய வழி, அவ் வறுமையின் கொடுமையால், தான் கற்ற கல்வியும் விளக்கம் பெறாது குன்றப் பெறுவனன்றோ? வறுமை எதையும் அழிக்கு மொரு வாளேயாகும் என்றுணர்க.

பொருளீட்ட வேண்டி அரச காரியம் பார்த்தலின் மேன்மையையும் மக்கட்கு உரைக்கின்றனர்.

"மன்னர் புறங்கடை காத்து வறிதேயாம்
எந்நலம் காண்டும்என்(று) எள்ளற்க—பன்னெடுநாள்
காத்தவை யெல்லாம் கடைமுறைபோய்க் கைகொடுத்து
வேத்தவையின் மிக்குச் செயும்."

என்று கூறினர்.

அரச காரியம் பார்த்தலால் சிறந்த ஊதியம் கிடைக்காமற் போயினும், அதனால் மனஞ் சோர்ந்து தொழிலை விடலாகா தென்றனர் நெடுநாளைய உழைப்பு முடிவில் அரசனால் மதிக்கப்பட்டுப் பெரும் பயனையும் கொடுக்குமென்றனர்.

இனி, மக்கள் அரச மதிப்பைப் பெறலின் மேன்மையையும், அரசன் மக்களைத் தக மதிக்க வேண்டும் முறைமையையும் அறிவுறுத்துகின்றார்.

"மாகஞ் சிறுகக் குவித்து நிதிக்குவை
ஈகையின் எக்கழுத்த மிக்குடைய—மாகொல்
பகைமுகத்த வெள்வேலான் பார்வையில் தீட்டும்
நகைமுகத்த நன்கு மதிப்பு."

இவ் வரச மதிப்பையே மக்கள் பலர் விரும்புவராதலின், தகுதி யறிந்து மதித்தலை அரசன் மக்கள் மாட்டுச் செய்யவேண்டுமென்று கூறியதோடு, மக்கள் இம் மதிப்பையே நிறைந்த செல்வம் பெறலைவிட மேலானதாகக் கருதவேண்டு மென்றுங் குறித்தார். பொருள், அளவு கருதி வரையறுக்கப்படல்போல இம் மதிப்பின் பெருமை வரையறுக்கப்படாது பல நலனையும் எய்துவிக்கு மன்றே?

இனி, உலகியலில் ஒருவரோ டொருவர் பழகும் முறையும் சிறந்த ஒன்றாதலால், அது குறித்தும் அடிகள் கூறுகின்றனர். மக்களுக்குப், பொதுவான அரசன்

தன்மையைக் கூறி, அவனோடு பழகுமாற்றையுங் கூறுகின்றார்.

அரசனின் பொதுவான குணமாக,

“ பழமை கடைப்பிடியார் கேண்மையும் பாரார்
கிழமை பிறிதொன்றுங் கொள்ளார்—வெகுளின்மன்
காதன்மை யுண்டே இறைமாண்டார்க்கு ஏதிலரும்
[1]ஆர்வலரும் இல்லை யவர்க்கு.”

என்று கூறினர்.

இத்தகைய மன்னனிடத்துப் பழகுமாற்றைக்,

“ கைவரும் வேந்தன் நமக்கென்று காதலித்த
செவ்வி தெரியா துரையற்க—ஒவ்வொருகால்
[2]எண்மைய னேனும் அரியன் பெரிதம்மா
[3]கண்ணிலன் உள்வெயர்ப்பி னன்.”

என்று கூறினர்.

இங்ஙனமே, மக்களதியற்கை உணர்ந்து நடக்குமாறு அரசனுக்கும் கூறுகின்றனர்.

மக்களின் பொதுவான குணமாக,

“ இகழின் இகழ்ந்துஆங்(கு) [4]இறைமகன் ஒன்று
புகழினும் ஒக்கப் புகழ்ப—இகல்மன்னன்
சீர்வழிப் பட்டதே மன்பதைமற் றென்செயும்
நீர்வழிப் பட்ட புணை.”

என்று கூறி, மக்களிடத்து அரசனொழுகுமாற்றை,

“ ஏதிலார் யாதும் புகல இறைமகன்
[5]கோதொரீஇக் கொள்கை [6]முதுக்குறைவு—நேர்நின்று

---

1. ஆர்வலர் - அன்பர்.
2. எண்மையன் - நணுகுதற்கு எளியன்.
3. கண்ணிலன் - கண்ணோட்ட மில்லாதவன்.
4. இறைமகன் - அரசன். 5. கோது - குற்றம்.
6. முதுக்குறைவு - பேரறிவு.

காக்கை வெளிதென்பார் என்சொலார் தாய்க்கொலை
சால்புடைத் தென்பாரும் உண்டு."

என்று அறிவுறுத்துகின்றார்.

இனி, மக்கள் உலகியலில் பலரொடு பழகு முறையில், பலராலும் மதிக்கப்பட விளங்கற்கும் ஒருபாயங் கூறுகின்றார்.

"பிறரால் பெருஞ்சுட்டு வேண்டுவான் யாண்டும்
மறவாமல் நோற்பதொன் றுண்டு—பிறர்பிறர்
சீரெல்லாந் தூற்றிச் சிறுமை புறங்காத்து
யார்யார்க்குந் தாழ்ச்சி சொலல்."

மூன்று காரியங்களைக் கைக்கொள்ள வேண்டுமென்று கூறுகின்றார். முதலாவது, 'தம்மைச் சூழ்ந்தோருடைய நல்லியல்புகளை யெல்லாம் பலரிடத்துஞ் சொல்லிப் புகழவேண்டு'மென்றனர். இரண்டாவது, சூழ்ந்தோரிடம் காணப்படும் தீய வியல்புகளை யாருமறியாவாறு தம் மனத்தகத்தேயே பொதிந்து ஒழுக வேண்டு'மென்றார். மூன்றாவதாக, 'யாரிடத்தும் அடக்கமாகப் பழகவேண்டு'மென்றனர். இங்ஙனமாயவழி அவரைப் பலரும் விரும்பி நண்புபாராட்டிப் புகழ்வரேயன்றி வேறாவரோ?

இனி, 'உலகியலில் செல்வாக்குற்ற மேலோர் தம் செல்வாக்கால், எளியோர்க்கு உற்ற குறைகளை முடித்து வாழவேண்டும் கடப்பாட்டினராதல் வேண்டு'மென்றும், 'அங்ஙனம் செய்யாதோர் நல்வினை நடைபெறுவாறு தடுத்த கொடுமையோரே' என்றுங் கூறினர்.

"சொல்வன்மை யுண்டெனில் கொன்னே விடுத்தொழிதல்
நல்வினை கோறலின் வேறல்ல—வல்லைத்தம்
ஆக்கம் கெடுவ துளதெனினும் அஞ்சுபவோ
[1]வாக்கின் பயன்கொள் பவர்."

---

1. வாக்கு - செல்வாக்கு.

தன்மாட்டு அமைந்த இச் செல்வாக்கால் பலர்க்கு வேண்டிய நன்மையைச் செய்யும் திறமை யிருந்தும், அதனுல் பிறர் பயனடையாவாறு அவன் வீணே கழிந்தானுயின் அவன் பிறர் நன்மையடைதலை விரும்பா தவனுக வன்ருே ஆயினுன். இது நல்வினை கோறலே யன்ருே? ஆகவே அவன் பெரும் பாவியாவன் என்று கூறினுர்.

இவற்கு மாருக உலகில் மற்ருெரு வகையினரு மிருக்கின்ருர்கள் என்றும், அங்ஙனம் இருத்தலும் ஆகா தென்றும் குறிப்பிடுகின்ருர். ஒருவர் அருங் காரியம் முடித்தற்கு வலிமையற்றவரா யிருப்பர். அவரிடம் ஒரு நண்பர் வந்து தமக்கு வேண்டிய சில காரியங்களை முடித்துத் தரும்படி கேட்பர். அங்ஙனம் கேட்ட வளவில், தம்மால் அக் காரியம் முடித்தற்கியலாதென்று கூறின், தம் நண்பர் துன்புறுவர் என்று நினைந்து "நாம் முடித்துத் தருவோம்" என்பர். கடைசியில் காரியம் முடிவுபெருது தம் நண்பர் வருந்துவர். தம் மால் அக் காரியம் முடிக்க வியலாதென்று கூறியிருப் பின் அந் நண்பர் வேறு யாரைக் கொண்டேனும் அக் காரியம் முடிக்கப் பெற்றிருப்ப ரன்ருே? அந் நண்ப ரின் பெரிய வருத்தத்துக்குக் காரணம், தாம் வலிமை யிலரா யிருந்தும் வலிமையுடையார் போன்று கூறியதே யன்ருே! இதை அடிகள்,

> "செயக்கடவ அல்லனவும் செய்தும்மன் என்பார்
> நயத்தகு நாகரிகம் என்னும்."

என்று கூறினர்.

அந் நண்பர், அங்ஙனம் கூறியதற்கான காரணத் தையும் அடிகள் தெளிய உணர்த்தினுர். அவர்,

தம்மால் முடியாதென்று கூறின் தம் நண்பன் மனம் வருந்துமே என்று எண்ணிய 'போலிக் கண்ணோட்டமே' அந் நண்பனைப் பெருந் துன்பத்துக் குள்ளாக்கியது என்று குறித்தனர். இக் கண்ணோட்டத்துக்கு அவர் கூறிய உவமையும் மிகப் பொருந்தியது.

"செயிர்த்துரைப்பின்
நெஞ்சநோமென்று தலைதுமிப்பான் தன்னனிபோல்."

என்று உவமை கூறினர்.

'தாம் தம் நண்பனிடம் சினந்துரைத்தால் அவன் மனம் நோவுமே யென்று அவன் தலையை வெட்டி வீழ்த்திவிடுவது போன்றிருக்கிற'தென்று கூறினர். இவையெல்லாம் உலகியல் உணர்ந்த உரவோரின் அறிவுரைகளன்றோ?

---

## ரு. அறமுணர்த்திய திறம்

அடிகள், அறங்களை வள்ளுவர் போன்று பலபடப் பகுத்து விரித்துக் கூறாது, உலகியலைச் சார்த்திச் சிறந்த அறங்களையே கூறிச் செல்கின்றனர்.

அறத்தை அங்ஙனம் பொதுவகையாகக் கூறுபவர், முதலாவதாக அறத்தைப் புகட்டும் கல்வியை விரித்துக் கூறிக், கற்றோர்க்கு வேண்டிய சிறந்த குணமாக அடக்கத்தையும், ஒழுக்கத்தையும் விதந்தெடுத்துக் கூறினர்.

இரண்டாவதாக, அறத்தை உலகில் நிலைபெறச் செய்யும் அரசியலைக் கூறி, அரசன் கடமைகளையும் அவனுக்கு வேண்டிய சிறந்த குணமாக அறிவுடைமை, செருக்கின்மை, கொடை, அருள், மானம், வீரம் என்பவற்றையும் சிறந்தெடுத்துக் கூறினர்.

மூன்றாவதாக, மக்கட்கு அறநெறியையே விதந்து கூறப் புகுந்து, மக்கட்கு வேண்டிய சிறந்த குணமாக ஆள்வினையுடைமை, வினையாடல், பகைத்திறம் தெரிதல் என்ற மூன்றாலும் மக்களின் வினை செயல் மேம்பாட்டைக் கூறிப், பின் அறத்தை வகுத்துக் கூறினர்.

அறத்தை யுணர்த்துபவர், அறமாவது மனமொழி மெய்களின் தூய்மையே என்று கூறுவாராய் முதலாவதாக,

> " மனத்த கறுப்பெனின் நல்ல செயினும்
> அனைத்தெவையும் தீயவே யாகும்—எனைத்துணையும்
> தீயவே செய்யினும் நல்லவாக் காண்பவே
> மாசின் மனத்தி னவர்."

என்று கூறி மனத்தூயோர் தன்மையை யுணர்த்தியும்,

"இனியவர் என்சொலினும் இன்சொல்லே இன்னார்
கனியும் மொழியும் கடுவே—அனல்கொளுந்தும்
வெங்காரம் வெய்தெனினும் நோய்தீர்க்கும் மெய்பொடிப்பச்
சிங்கி குளிர்ந்துங் கொலும்."

என்று கூறி மொழித்தூயோர் தன்மையை யுணர்த்தி யும், பின் மனமொழி மெய்களின் தூய்மையை ஒரு சேரக் கூறுவாராய்ப்,

"பொய்குறளை வன்சொல் பயனிலவென் றிந்நான்கும்
எய்தாமை சொல்லின் வழுக்காது—மெய்யில்
புலனைந்துங் காத்து மன மாசகற்றும்
நலமன்றே நல்லா றெனல்."

என்று முடித்தும் காட்டினர்.

"சொல்லின்கண் பொய், கோட்சொல், வன்சொல், பயனில்சொல் என்ற நான்கும் பொருந்தாதிருக்க வேண்டு"மென்று கூறினர். "மெய் வாய் கண் மூக்குச் செவி என்ற ஐந்தும் தியவழியிற் செல்லாமல் காக்க வேண்டு"மென்று மெய்த் தூயராந் தன்மையைக் கூறி னர். "மனத்தின்கண், 'எவ்வகைப்பட்ட மாசும்' புகாமல் காக்கவேண்டும்" என்று கூறினர்.

இங்ஙனம் மறநெறி கடிந்த அறநெறியை எஞ்சாமல் சுருங்கக் கூறிய தன்மைக்கேற்பக், கீழ்க் காணப்படும் மணிமேகலை யடிகள் மறநெறியை வகுத்துக் கூறுமாறு காண்க.

"தீவினை யென்பது யாதென வினவின்
ஆய்தொடி நல்லாய் ஆங்கது கேளாய்
கொலையே களவே காமத் தீ விழைவு
உலையா உடம்பிற் றோன்றுவ மூன்றும்
பொய்யே குறளை கடுஞ்சொல் பயனில்
சொல்லெனச் சொல்லில் தோன்றுவ நான்கும்

[1]வெஃகல் [2]வெகுளல் [3]பொல்லாக் காட்சியென்று
உள்ளந் தன்னின் உருப்பன மூன்றும் எனப்
பத்து வகையால்."

இவையே மக்களால் நீக்கத்தக்க பெரும்பான்மை யான தீக்குணங்களாம். இவை கூறவே, இவற்றைச் சார்ந்த மற்றைத் தீக்குணங்களும் அடங்கும்.

இங்ஙனம் அடிகள், மறங்கடிந்த அறநெறியை வகுத்துக் கூறியதற்கேற்ப வள்ளுவரும்,

"மனத்துக்கண் மாசில னாதல் அனைத்தறன்
ஆகுல நீர பிற."

என்று தொகுத்துக் கூறியதும் உணரத்தக்கது.

இங்ஙனம் மனமொழி மெய்களின் தூய்மையைக் கூறி, அறநெறி தழைத்தற்காம் பொருளை ஈட்டுமாற்றை அடிகள் கூறுகின்றனர். "குலவுயர்ச்சி பெறும் முறையிலும், உண்மை முறையிலும், மேற்கொண்ட தவத்திற்கு அழிவில்லா முறையிலும், தன்னுரிமை யழியா முறையிலும், கடமையை உணர்ந்தும் தன் நிலைமைக்குத் தக அறநெறியே முயற்சி மேற்கொண்டு பொருளீட்ட வேண்டு"மென்று பொருளீட்டுங் காலத்து அறநெறியைக் கூறுகின்றனர்.

இதன்பின், இப் பொருட்பயனாக ஈகையைக் கூறினர். 'ஈதலறம்' என்று சிறப்பித்துச் சொல்லப்படுவதாய் அறத்துக்கெல்லாம் முதலாய் அமைவது ஈதலேயன்றோ!

"ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்ல(து)
ஊதிய மில்லை உயிர்க்கு."

என்பதும் பொய்யாமொழியன்றோ!

---

1. வெஃகல் - பிறர்பொருளை வெளவக் கருதல்.
2. வெகுளல் - சினங்கொள்ளல்.
3. பொல்லாக் காட்சி - உண்மை யறியா மயக்கம்.

அடிகள், பொருளீட்டியான் ஈதற் குணத்தை யுடையனுயே இருத்தல் வேண்டும் என்றும், அங்ஙன மல்லாவிடத்து அவன் பொருள் அற்றவனும் இருத்தலே நல்லது என்றும் கூறுகின்ருர்,

> "வள்ளன்மை இல்லாதான் செல்வத்தின் மற்றையோன்
> நல்குரவே போலும் நனிநல்ல—கொன்னே
> அருளிலன் அன்பிலன் [1]கண்ணறையன் என்று
> பலரால் இகழப் படான்."

இனி, ஈகைக்குப்பின், அவ் வீகைக்கு இன்றி யமையாத அங்கமாயமையும் இன்சொல்லின் மேன் மையைக் கூறினர். ஈகை யிருந்தும் இன்சொல் இலதாய வழி, ஈகை பயன்பெருதன்ரே. இதனுலன்ரே வள்ளு வரும்,

> "முகத்தா னமர்ந்துஇனிது நோக்கி அகத்தானும்
> இன்சொ லினதே அறம்."

என்று 'அறம், பொருளின் கண்ணதன்று; மனங்கலந்த இன்சொலினதே' என்று கூறினர்.

பொருளின்மையால் ஈதல் மேற்கொள்ளாராயினும், இவ் வின்சொல் தானும் கூறுதற்கு மக்கள் மனம் விரும்பாக் கொடுமையை,

> "ஈகை அரிதெனினும் இன்சொலினும் [2]நல்கூர்தல்
> ஓஒ கொடிது கொடிதம்மா—நாகொன்று
> தீவினைக் கம்மியனுல் வாய்ப்பூட் டிடப்படின்மற்(று)
> ஆஆ இவரென்செய் வார்."

என்றுணர்த்தினுர் அடிகள்.

---

1. கண்ணறையன் - கண்ணேட்டமில்லாதவன்.
2. நல்கூர்தல் - வறுமை யடைதல்.

அவர் அங்ஙனம் இருத்தற்குக் காரணம், "அவர் செய்த தீவினை அவரைத் தடுப்பதாலேயே" என்று குறித்தமை காண்க.

"இனிய உளவாக வின்னாத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று."

அன்றோ ?

இங்ஙனம் இல்லறத்தோர்க்கான அறநெறிகளைக் கூறிக்கொண்டு வந்தவர், கடைசியாக அவர்களால் பெரிதும் கடியத்தக்கதும், எவ்வறத்தையும் அழிக்கும் கொடுந் தீச் செயலாவதுமான பிறன்மனை நயத்தலைக் கூறி முடித்தார். கடைசியாகத் துறவறத்தை ஒருவகையாக விரித்துரைத்தார். ஆகவே, இங்ஙனமாக அடக்கம், ஒழுக்கம், அறிவுடைமை, கொடை, அருள், மானம், வீரம், ஈகை, இன்சொல், பிறன்மனை நயவாமை, துறவு என்ற இவைகளைச் சிறந்தெடுத்துக் கூறி, "மனமொழி மெய்களின் தூய்மையே அறமாவது" என்று உணர்த்தினர் அடிகள் என்க.

---

## கூ. நூலிற்பயின்றுரைத்த மேலோர் மூவர்

அடிகள், தம் நூலுள் பல விடங்களிலும் இல்லறம் விளங்கித் தோன்றற்குக் காரணமான பெண்டிர் கற்பின் சிறப்பையும், உலகத்தை அறவழியில் ஒழுக்கவல்ல துறவோர் இயற்கையினையும் உவமைவாயிலாகவும், பிறவாறுங் கூறிச் செல்கின்றனர்.

கற்புடை மனைவியாலேயே இல்லறம் விளங்கித் தோன்றுமென்பதை,

—"மனைத்தக்காள்
மாண்பிலள் ஆயின் மணமகன் நல்லறம்
பூண்ட புலப்படா போல்."

என்ற விடத்துக் குறித்துள்ளமை காண்க. மாண்பு என்பது, கற்பை முதற் குணமாகக்கொண்ட நற்குண நற்செய்கைகளை யன்றோ குறிப்பது?

பெண்டிர்க்குக் கற்பே இன்றியமையாக் குண மென்பதை யுணர்த்தியே,

"கல்வியே கற்புடைப் பெண்டிர்"

"கற்றுத் துறைபோய காதலற்குக் கற்பினாள்
பெற்றுக் கொடுத்த தலைமகன் போல்."

என்று பெண்டிரோடு கற்பையும் தொடர்பு படுத்தியே கூறிச் சென்றனர்.

கற்பின் மகளிரின் கொடுமையைக்,

"கடும்பகல்
ஏதிலான் பாற்கண்ட இல்லினும் பொல்லாதே."

என்றவிடத்து உவமையாக அமைத்து உணர்த்தினர்.

கற்புடை மனைவி கணவனொடு பொருந்தி ஒழுகு மாற்றைக்,

"குலமகட்குத் தெய்வம் கொழுநனே."

என்ற எடுத்துக் காட்டுவமையால் கூறி, கணவனைத் தெய்வமாகவே கொண்டு ஒழுகவேண்டுங் கடப்பாட்டை உணர்த்தினர்.

இங்ஙனம் கணவனையே தெய்வமாகக் கொண்டு ஒழுகும் கற்புடையாள், அக் கணவன் இறந்தவிடத்து இவ்வுலகத்து உயிர் வாழற்கு விரும்பாள் என்ற தன்மையைக்,

"கலனழிந்த கற்புடைப் பெண்டிரும்...........
.................................................
..........................அஞ்சார் முரண்மறலி
தும்பை முடிசூ டினும்."

என்றவிடத்து ஒப்புமைக்கூட்ட அணியுள் வைத்துக் கூறினர்.

மேலும், இக் கற்பு பெண்களுக்கு இன்றியமையாக் குணமென்பதை உணர்த்திப், பெண்களுக்கு வேண்டிய குணங்களைச் சொல்லவந்த விடத்துக்,

"கற்புடுத்(து) அன்பு முடித்துநாண் மெய்ப் பூசி."

என்று, கற்பை, என்றும் உடலைவிட்டு நீங்காததும், நீங்குமிடத்துப் பெரியதோர் இழிவு புலப்பட நீங்குவது மான ஆடையாகக் குறித்தமையுங் காண்க.

இக் கற்பின் மேன்மை குறித்தன்றே வள்ளுவரும்,

"பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னும்
திண்மை யுண்டாகப் பெறின்."

என்று கூறினர்.

இனித், துறவோர் இயற்கை கூறுமாற்றை நோக்கு வோம்.

துறவோர், காமப் பகையைக் கடிந்த பெருமையினர் என்பதை,

"அனைத்துலகும்
சொல்லொன்றின் யாப்பார் பரிந்தோம்பிக் காப்பவே
பல்காலுங் காமப் பகை."

என்று உவமையாக அமைத்துக் கூறினர்.

'அனைத்துலகும் சொல்லொன்றின் வயப்படுத்தக் கூடியவர்' என்று அவர் பெருமையை உணர்த்தியவாறு காண்க.

துறவோர் தம்மாசிரியரையே கடவுளாகக்கொண்டு வழிபடவேண்டுமென்பதை,

"அறவோர்க்கு
அடிகளே தெய்வம்."

என்ற எடுத்துக் காட்டுவமையில் விளங்க வைத்தார்.

துறவோர் உடற்பயன் பெற்றனராதலின் சாவுக் கஞ்சார் என்று கூறுவார்,

"ஐந்து
புலனொருங்கப் பொய்யொழிந் தாரும்.........
........................அஞ்சார் முரண்மலி
தும்பை முடிசூ டினும்."

என்று ஒப்புமைக்கூட்ட அணியுள் வைத்துக் கூறினர்.

இவர் உடலோம்பலின் பொருட்டுத் தவத்திற்குக் குறை நேர ஒழுகலாகா தென்பார்,

"தவம்விற்று ஆங்கு............
ஊனோம்பும் வாழ்வும்.........................
தானோம்பிக் காத்தல் தலை."

என்றார்.

வள்ளுவரும் இத் துறவோர் இவ் வுலகத்து மேம் பட்டு நிற்றலை,

"இருமை வகைதெரிந்(து) ஈண்(டு)அறம் பூண்டார்
பெருமை பிறங்கிற் றுலகு."

என்று கூறினர் அன்றோ ?

இவ் விருவர்களோடு தொடர்பு படுத்தி உலகத்துச் சிறந்தோனாக அரசனையும் கூறுகின்றார் அடிகள்.

"குலமகட்குத் தெய்வம் கொழுநனே மன்ற
புதல்வர்க்குத் தந்தையுந் தாயும்—அறவோர்க்கு
அடிகளே தெய்வம் அனைவோர்க்குந் தெய்வம்
இலைமுகப் பைம்பூண் இறை."

என்று அவ்விருவரோடு அரசனையும் தொடர்பு படுத்திக் கூறியது காண்க.

மற்றோரிடத்தும் இதுபோலவே,

"கலனழிந்த கற்புடைப் பெண்டிரும் ஐந்து
புலனொருங்கப் பொய்யொழிந் தாரும்—கொலைநாட்பில்
மொய்ம்புடை வீரரும் அஞ்சார் முரண்மறலி
தும்பை முடிசூ டினும்."

என்று இம் மூவரையுமே ஒருசேரக் கூறினர். இச் செய்யுளுக்கு முன்னும் பின்னும் அரசரைப்பற்றியே கூறப்பட்டிருப்பதால், வீரர் என்பது அரசரையே உணர்த்தும் என்க.

இங்ஙனம், கற்புடைப் பெண்டிரும் துறவோரும் அரசருமே உலகில் மேம்பட்டோர் என்பதும், அவரா லேயே உலகம் நன்னிலை பெறும் என்பதும், அவர் நிலைகெடின் உலகும் நிலைகெடும் என்பதும் உண்மை யுணர்ந்தார் உரை என்றுணர்க.

"செங்கோல் கோடியோ செய்தவம் பிழைத்தோ
கொங்கவிழ் குழலார் கற்புக் குறைபட்டோ
நலத்தகை நல்லாய் நன்னா டெல்லாம்
[1]அலத்தற் காலை யாகிய தறியேன்."

என்று மணிமேகலை இதை யுணர்த்துவதும் காண்க.

நாட்டில் வறுமை மிகுந்ததற்குக் காரணமாகச் செங்கோல் கோடுதலும், தவம் பிழைத்தலும், கற்புக் கெடுதலும் கூறப்பட்டமை உணர்க. மேலும், செங்கோல் கோடிய வழி, நல்லோர் துன்புற அல்லோர் தீய செயல் பெருகுதலும், துறவோரின் தூய துறவொழுக்கமில்லையாயின், உலகம் உண்மை யுணராது நெறிதவறிச் செல்லலும், பெண்கள் கற்புக் குறைந்தவழிக் கொலையும், பொய்யும், வஞ்சமும் நாட்டில் நிலைபெறுதலும் இயலுவனவன்றே? ஆகவே, இச் சிறப்பு நோக்கி இத்தகைச் சிறந்த மூவர் இயற்கையையும் தம் நூலுள் பல விடங்களிலும் குறித்துச் சென்றனர் என்க.

---

1. அலத்தற்காலை - வறுமைக்காலம்.

## எ. சிறந்தெடுத்தோதிய அருங்குணம்

அடிகள் எக்குணத்தினும் அடக்கத்தையே பல விடத்தும் விதந்து கூறுகின்றனர். அடக்கம் நன்மையிற் கொண்டு செலுத்தலும், அதற்கு மாருய செருக்குத் தீமையிற் புகுத்தலும் உலகில் காணப்படுவனவன்றே? இது குறித்தன்றே வள்ளுவரும்,

> "காக்க பொருளா அடக்கத்தை ஆக்கம்
> அதனினூங் கில்லை யுயிர்க்கு."

என்று கூறி, அடக்கத்தையே தலையாய செல்வமாக உணர்த்தினர். மேலும், இவ்வடக்கம் என்னும் ஒரு குணத்தைக் கொண்டோரிடத்தில் எல்லா அறமும் நிலைபெறும் என்றும் கூறுவர்.

> "கதம்காத்துக் கற்றடங்கல் ஆற்றுவான் செவ்வி
> அறம்பார்க்கும் ஆற்றின் நுழைந்து."

என்றது காண்க.

அடிகள் இவ் வடக்கத்தின் இன்றியமையாமை நோக்கி, அடக்கத்தைக் கல்வியுடையோனுக்கும், செல்வ னுக்கும், அறவழி நிற்போனுக்கும், துறவிக்குமாகப் பலவிடத்தும் எடுத்துக் கூறுகின்ருர்.

முதலாவதாகக், கற்ருேர் அடக்கமின்றிச் செருக்கி இருப்பின், அவர் கற்றதனுற் பயனற்றவரேயாவர். கற்றலால் அறிவின் விரிவையறிந்து, தாம் கற்றறிந்தது அம் முழுதையும் நோக்கச் சிறிதே என்றுணர்ந்து, கற்றவழி அடங்கி ஒழுகலன்றே ஒருவர்க்கு வேண்டுவது. அங்ஙனமன்றிக், கற்றதனுல் செருக்கித் திரிவாராயின், அவர் அறிவின் விரிவை யுணர்ந்தவராவரோ? உணர்ந் தனராயின் செருக்கித் திரிவரோ? அவர் அறியாதோரே.

இதனால் அன்றே 'அறிவோர்க் கழகு கற்றுணர்ந் தடங்கல்' என்று கூறினர் தமிழ்ப் பெரியார். செருக்குத் தீயசெயத் தூண்டுதலும், அடக்கம் நன்மையிற் செலுத்தலும் கண்கூடு ஆதலின், கற்றோன் அடக்கம் மேற்கொண்டு நல்லொழுக்க நெறியில் நில்லானாயின், அவன் கற்றதனாற் பயன்பெற்றவனாவானோ? அவன் கல்லாதானே.

இது குறித்தே அடிகள்,

"முற்றும் உணர்ந்தவ ரில்லை முழுவதூஉம்
கற்றனம் என்று களியற்க."

என்றும்,

"கற்றாரை நோக்கிக் கருத்தழிக—கற்றதெல்லாம்
எற்றே இவர்க்குநா மென்று."

என்றும் கூறினர்.

இனி, இவ்வடக்கம் செல்வர்க்கும் இன்றியமை யாதது என்று கூறவந்தவர், அரசியல் கூறுகின்ற இடத்தே எதிர்மறைமுகத்தால் செல்வச் செருக்கின் தீமையைக் கூறியுணர்த்துகின்றார்.

"பணியப் படுவார் புறங்கடைய ராகத்
தணிவில் களிப்பினால் தாழ்வார்க்கு—அணியது
இளையாள் முயக்கெனினும் சேய்த்தன்றே மூத்தாள்
புணர்முலைப் போகங் கொளல்."

என்று கூறுகின்றனர்.

'தம்மால் பணியத்தக்க பெரியோர் தம் வீட்டு வாயிலில் நிற்கத், தம் செல்வச் செருக்கால் அவரை எதிர்கொண்டழைத்து வேண்டுவன புரிதற்குக் காலந் தாழ்ப்பாராயின், அவர் அங்கிலை இருத்தற்குக் காரண

மான செல்வம் விரைவில் கெடும்' என்று கூறினர். மேலும், இவ்வடக்கம் செல்வர்க்கே மற்றோர் செல்வம் போன்றிருந்து, அச் செல்வத்தை மிகுத்துக் காட்டும். இது பற்றியன்றே வள்ளுவரும்,

> " எல்லார்க்கும் நன்றாம் பணிதல் அவருள்ளும்
> செல்வர்க்கே செல்வந் தகைத்து."

என்று கூறினர்.

கல்வியும் பொருளும் உடையார் இவ்வடக்கம் உளதாய வழியே செல்வரென்று மதிக்கப்படுவரென்றும், இஃதிலதாய வழி அவ்விரண்டையும் பெற்றும் பயனிலராய்ச், செல்வராய் மதிக்கப்படாரென்றும் அடிகள் கூறுகின்றனர்.

> " கல்வி யுடைமை பொருளுடைமை என்றிரண்டு
> செல்வமும் செல்வ மெனப்படும்—இல்லார்
> குறையிரந்து தம்முன்னர் நிற்பபோல் தாமும்
> தலைவணங்கித் தாழப் பெறின்."

என்பது அவர் கூறுமாறு.

இனி, நல்லற நெறி நிற்போரும், தாம் அறநெறி நிற்றலால் தருக்கி இருப்பாராயின், அதன் பயனையும் எய்தாதொழிவர் என்று கூறுகின்றார் அடிகள். தருக்கி இருத்தலால், அவர் செயல் தந்நலங்கருதிய ஆரவாரச் செயலாய் மதிக்கப்படுமன்றிப், பிறர் நலங்கருதிய அறச் செயலாகாதன்றே. மேலும், அத் தருக்குத் தீமையையும் கொடுக்குமென்றுங் கூறுகின்றனர்.

> " விலக்கிய ஓம்பி விதித்தனவே செய்யும்
> நலத்தகையார் நல்வினையும் தீதே—புலப்பகையை
> வென்றனம் நல்லொழுக்கில் நின்றேம் பிறவென்று
> தம்பாடு தம்மிற் கொளின்."

இச் செய்யுளில் நல்லறநெறி நிற்போரையும் துறவி யையும் குறித்தார். சிறந்த அறக்கருமங்களை இயற்றி, அவற்றை மனத்துட்கொண்டு தருக்குக் கொள்ளாதிருத் தலே வேண்டும். இம் மனநிலை வாய்ப்பதும் அரிதே என்றும், அங்ஙனம் இருப்போரே மிக மேலான குண முடையோரென்றும் குறிக்கின்முர்.

"பிறர்பிறர் செய்பபோல் செய்தக்க செய்(து)ஆங்கு
அறிமடம் பூண்டுநிற்பா ரார்."

என்று அடிகள் கூறுவது காண்க.

இனி, இவ்வடக்கமிலான் தற்புகழ்ச்சியின் இழி வினை எடுத்துக் கூறியும், அடக்கத்தின் உயர்வை யுணர்த்தின ரடிகள் ;

"தன்னை வியப்பிப்பான் தற்புகழ்தல் தீச்சுடர்
நன்னீர் சொரிந்து வளர்த்தற்முல்."

என்றனர்.

ஒருவன் தன்னைத்தானே புகழ்ந்துகொள்வது, தன்னை எல்லோரும் உயர்வாக நினைக்கவேண்டுமென்று கருதியன்றே? ஆயின், அவன் அங்ஙனம் தற்புகழ்ச்சி செய்யும்போது, அவனைப்பற்றி அறிவுடையோர் நினைப் பது அவன் உயர்ச்சியாகுமோ? அங்ஙனம் அவன் கூறுவதால், அறிவோர் அவனைத் தாழ்ந்தோனுகவே மதிப்பர் என்பதை அவன் உணரான். அவன் தன்னை உயர்த்திக் கூறிக்கொள்ளும் சொல்லே, அவன் தாழ்ந் தோன் என்பதைக் குறித்துக்கொண்டிருக்கிறது. உண் மையில் உயர்ந்தோர் செயற்கரிய செய்து, 'இதுவே மக்கட் பண்'பென்று அடங்கியிருப்பர். அங்ஙனமாகாது தற்புகழ்வோன், மக்கட்டன்மை யுணராத விலங்கறி வினனேயாவன் என்க. உண்மையில் உயர்ந்தோர்,

தாம் மேம்பட்டிருப்பினும், இன்னும் மேல்நிலைக்குச் செல்லக்கூடிய நெறியை யறிந்தவராதலின், அது நோக்கி அடக்கம் மேற்கொண்டு மேன்மை யடைவதும், அங்ஙனமாகாதோர், தாம் சிறிய காரியஞ் செய்யினும் அதையே பெரிதாக மதித்து, மேலும் செயற்கருஞ் செயல் செய்ய வழியும் அறியாராய், வலியுமிலாராய் இருத்தலின் தாழ்ந்தோராவதும் விளக்கமன்றே?

தற்புகழ்ச்சி, அவன் எண்ணியாங்கு உயர்வைக் கொடுக்காது தாழ்ச்சியைக் கொடுக்கும் என்பதைத் 'தீ யெரியும்பொருட்டு நீரைச் சொரிந்தால் போன்றது' என்ற உவமை கூறி உணர்த்தினர் அடிகள். அடக்கமே பிறரால் உணரப்பட்டுப் பெருமை தருமென்றும் உணர்த்துவாராய், அதை மற்றைய அடிகளில் கூறுகின்றார்.

"—தன்னை
வியவாமை யன்றே வியப்பாவ(து) இன்பம்
நயவாமை யன்றே நலம்."

இனி, இவ்வடக்கந்தானும் உயர்ந்தோர்க்கே அமையும் பெருங் குணம் என்பதையும் அறிவுறுத்துகின்றார்.

" ஆக்கம் பெரியார் சிறியா ரிடைப்பட்ட
மீச்செலவு காணின் நனிதாழ்ப."

என்று கூறுமாறு காண்க.

அறிவிற் சிறந்தோரிடத்து அறிவிலான் ஒருவன், தான் அறிவிற் சிறந்தான் போன்றும் தருக்கியும் சில கூறிய வழி, அதுகேட்ட அறிவுடையாரும், தாம் அவனினும் சிறந்தாரென்பதைக் குறித்து, அவனின் மேம்பட்டுச் சில சொற் கூறின், அது பயனின்றியே முடியுமன்றோ? மேலும், அங்ஙனம் கூறுவது தன்னையும்

அக் கீழோனோடு ஒப்பித்துக்கொண்டதாகவே முடியும். ஆதலின், அறிவுடையோர் அவ்விடத்துத் தாழ்ந்தே செல்வர். அங்ஙனம் தாழ்ந்து செல்லலே அவரது உயர்வையுங் குறிக்கும். இது குறித்தன்றே வள்ளுவரும்,

> "[1]சால்பிற்குக் [2]கட்டளை யாதெனில் தோல்வி
> துலையல்லார் கண்ணுங் கொளல்."

என்று கூறித், தமக்குக் கீழானோரிடம் எதிர்த்து வழக்காடித் தம்மையும் அவரோடு ஒப்பித்துக் கொள்ளாமல், தாம் தோற்றாராகக்கொண்டு அடங்கி, அதனான் மேம்படலே "நிறைந்த குண[1]"முடையோர்க் கடையாளம் என்றுணர்த்தினர். ஆகவே, அடக்கம் என்ற இப்பெருங் குணத்தையே எல்லாக் குணங்களும் நிறைந்ததற்கோரடையாளமாகக் — 'கட்டளையாகக்'[2] — குறித்தாரென்றால், இவ்வடக்கத்தின் உயர்வைச் சொல்லவும் வேண்டுமோ? இதற்கு அடிகள் கூறிய உவமையும் மிகப் பொருந்தியது.

> "—தூக்கின்
> மெலியது மேன்மே லெழச்செல்லச் செல்ல
> வலிதன்றே தாழுந் துலைக்கு."

துலாக்கோலில் வலிவு குறைந்த தட்டு மேலே போக, வலிய தட்டன்றோ தாழ்கின்றது.

---

1. சால்பு. 2. கட்டளை - உரைகல்.

## அ. கல்வியும் கற்பும் சிறந்தோர் இல்லறம்

இனி, உலகத்துப் பெரும்பான்மையானதும், 'அறனெனப்பட்டதே இல்வாழ்க்கை' என்று சிறப்பித்துச் சொல்லப்படுவதுமான இல்லறத்தைக் குறித்து அடிகள் கூறியவற்றைக் காண்போம்.

இல்லறநெறி நிற்போனுக்குச் சிறந்து வேண்டப்படும் முதற் குணமாக அடிகள் கூறுவது கல்வியுடைமையாம். துறவறத்திற்கு முதற்படியாக நிற்பது இல்லறமாதலாலும், அறநெறியை யுணர்த்துவது கல்வியேயாதலாலும், கல்வியுடைமையைக் கூறினர்.

> "உளர்என்னும் மாத்திரையர் அல்லால் பயவாக்
> களர்அனையர் கல்லா தவர்."

என்பது பொய்யாமொழியன்றோ? ஆதலின், இல்லறநெறி நிற்போனுக்குக் கல்வி இன்றியமையாததாயிற்று. கல்வி கற்காதவர் அறநெறி நில்லாரோவெனின், நின்றாராயினும், நிறைந்த அறிவால் உணர்ந்து அறஞ்செய்தலே வலியுடையதாம்; அறிவின்றிச் செய்வோர் நெகிழ்தலும் கூடும். இது கருதியன்றே சிவப்பிரகாசரும்,

> "பன்னும் பனுவல் பயன்தேர் அறிவிலார்
> மன்னும் அறங்கள் வலியிலவே—நன்னுதால்
> காழென் றுயர்திண் கதவு வலியுடைத்தோ
> தாழொன் றிலதாயிற் றான்."

என்றனர்.

இனி, இவ் வில்லற நெறி நிற்போன் இயற்றும் அறத்துக்குத் துணை, அவன் மனைவியேயாம். இவளுக்கு வேண்டும் சிறந்த குணமாக அடிகள் கூறுவது

கற்பாகும். இவளுக்குக் கல்வி வேண்டுவதன்றோ வெனின், கற்பே முதன்மையான குணமாக அடிகள் கூறினர்; கணவனுக்குப் பிறன்மனை நோக்காத பேராண்மையும் வேண்டுவது போல, மனைவிக்குக் கல்வியும் வேண்டுவதே. மனைவிக்குக் கல்வியிருந்தும் கற்பிலதாய வழி, எத்துணை மிகுந்த கல்வியாயினும் இலதாய் ஒழிதலால் கற்பே சிறந்ததாயிற்று. கற்பு டைய மனைவியாலேயே கணவன் பூண்ட அறங்களும் சிறந்து தோன்றும்.

> "மனைத்தக்காள்
> மாண்பிலள் ஆயின் மணமகன் நல்லறம்
> பூண்ட புலப்படா போல்."

என்றவிடத்து, மனைவி நற்குண நற்செய்கை இலளா யின், கணவன் மேற்கொண்ட நல்லறம் விளங்கித் தோன்றாதென்று தெரித்தனர் அடிகள். மாண்பு என் பது கற்பை முதற் குணமாகக் கொண்டதன்றோ?

இனி, இவ்வில்லறத்திற்கு மேலும் விளக்கத்தைக் கொடுப்போர் அறிவுடைப் புதல்வர்களாவர். இல்லற வாழ்க்கையின் சிறந்த ஒரு குறிக்கோள் நற்புதல்வனைப் பெறுதலன்றே. இல்லற நெறி நின்று பல அறங்களையுஞ் செய்தவன் இறந்த பின்னும், அவன் மகனன்றே அறங்களை மேலும் செய்து, தந்தையின் புகழை மிகுவித்துத், தந்தையின் தீவினையை யழிக்கின்றான்.

> "எழுபிறப்பும் தீயவை தீண்டா பழிபிறங்காப்
> பண்புடை மக்கட் பெறின்."

என்று கூறி வள்ளுவரும், தந்தை தீவினை தேய்தற்குக் காரணமான நல்வினைகளைச் செய்யும் புதல்வர் என்று குறிப்பித்தார்.

கணவனுக்குக் கல்வி வேண்டுவதென்பதையும், அவனுக்குத் துணையாயமையும் மனைவிக்குக் கற்பே சிறந்ததென்பதையும், அவர்கள் பூண்ட இல்லறத் திற்கு விளக்கத்தைக் கொடுப்போன் புதல்வனே என்ப தையும்,

> " கற்றுத் துறைபோய காதலற்குக் கற்பினுள்
> பெற்றுக் கொடுத்த தலைமகன் போல்."

என்ற அடிகளில் ஒருங்கு குறிப்பித்தார் அடிகள்.

இனி, இல்லறநெறி நிற்போன் அறத்தை வகை பெறச் செய்தற்கு வேண்டுவதாகக் குறிப்பிடப்படுவது செல்வமேயாம்.

> " அருளில்லார்க் கவ்வுலக மில்லை பொருளில்லார்க்(கு)
> இவ்வுலக மில்லாகி யாங்கு."

என்று வள்ளுவரும் மொழிந்தனரன்றே.

> "......நல்கூர்ந்தார் இன்னலமும்
> பூத்தலிற் பூவாமை நன்று."

என்று கூறி, இல்லறம் பூண்டோன் நற்குணமுடைய னுயினும்; அவன் உலகில் பல நற்செய்கை மேற்கொளற் குச் செல்வமே துணையாவதென்பதை அடிகள் உணர்த்தினுர். அஃதில தாயவழி அவன் நல் நினைவுகள் மனத்தகத்தே பயனின்றி அடங்கிக்கிடக்க வேண்டு வனவே என்றும் குறிப்பித்தார்.

ஆகவே, இல்லற நெறி நிற்போன் அறச்செய லுக்குத் துணையாக மனைவியும், அவன் செயலை அவன் இறந்த பின்னும் விளக்கமுற நடத்தப் புதல்வனும், அவன் அறச்செயல் நடைபெறற்குச் செல்வமும் வேண்டும். இக் கருத்தைக், கல்விச் சிறப்பு உணர்த்து கின்ற விடத்தே,

> “ கல்வியே கற்புடைப் பெண்டிர் அப்பெண்டிர்க்குச்
> செல்வப் புதல்வனே ஈர்ங்கவியாச்—சொல்வளம்
> மல்லல் வெறுக்கை யாம்.”

என்று கூறி, இல்லறத்தானுக்கு இன்றியமையா மனைவி, புதல்வன், செல்வம் என்ற மூன்றையும் ஒரு சேர அமைத்திருப்பதிலிருந்தும், அறியலாம்.

இனிக், கணவனும் மனைவியும் புதல்வரும் கலந்து வாழும் கடப்பாட்டினைக்,

> “ குலமகட்குத் தெய்வம் கொழுநனே மன்ற
> புதல்வர்க்குத் தந்தையும் தாயும்.”

என்ற அடிகளில் தெரிவிக்கின்றார். மனைவி கணவனை யும், புதல்வர் தாய் தந்தையரையும் கடவுளராகக் கொண்டொழுக வேண்டுமென்று கூறுகின்றனர்; அங்ஙனங் கொண்டாலே நல்லொழுக்கம் வளர்ந்து அவர்களை நலத்தின்கண் எய்துவிக்குமாதலின். மேலும் கணவனும் தாய்தந்தையரும், தம்மை மனைவியும் புதல்வரும் கடவுளாகக் கருதற்கேற்பத், தாம் இல்லற மாம் நல்லற நெறியினின்று தவறாது, பிறர்க்கு ஒழுக்க நெறிகளைக் கற்பிக்கும் அறிவுமேம்பட்ட சீலர்களா யிருத்தல் வேண்டும்.

இனி, இல்லறத்தோன் செய்யத்தக்க சிறந்த அற மாக அடிகள் குறிப்பிடுவது ஈதலறத்தையேயாம்.

> “ வள்ளன்மை இல்லாதான் செல்வத்தின் மற்றையோன்
> நல்குரவே போலும் நனிநல்ல.”

என்று கூறுகின்றார் அடிகள். இல்லறத்தானுக்குச் செல்வம் இன்றியமையாததென்று கூறியவர், அச் செல்வப் பயன் வள்ளன்மையே என்று கூறி, இல்லறத் தானுக்குத் தலைமையான அறநெறியைக் கூறினார்.

இக் கருத்துப் பற்றியன்றே ஆன்றோரும், " ஈதல் அறம்" என்றும்,

> " அற்றார் அழிபசி தீர்த்தல் அஃதொருவன்
> பெற்றான் பொருள்வைப் புழி."

என்றும் கூறினர்.

இனி, இல்லறத்தோன் காதலின்பம் துய்க்கும் முறையையும் அடிகள் கூறுகின்றார்.

> " கருமம் சிதையாமே கல்வி கெடாமே
> தருமமும் தாழ்வு படாமே—பெரிதுந்தம்
> இன்னலமும் குன்றாமே ஏரிளங் கொம்பனார்
> நன்னலம் துய்த்தல் நலம்."

இக் காமவின்பம் மக்களை அளவு கடந்து தன் மாட்டு இழுத்துக் கேடுபயக்கும் ஒன்றாகலின், அதை அளவோடு துய்க்க வேண்டுமென்று கூறினர். கழி காமம் கேடு பயக்கு மென்பதை,

> "—நெடுங்காமம்
> முற்பயக்கும் சின்னீர இன்பத்தின் முற்றிழாய்
> பிற்பயக்கும் பீழை பெரிது."

என்னும் அடிகளில் அடிகள் உணர்த்தியது காண்க.

'நெடுங்காமம்' என்று கழிகாமத்தை உணர்த்தினார். இக் கழி காமத்தால் வருங் கேடாகவே கருமஞ் சிதைதல், கல்வி கெடுதல், தருமந் தாழ்வுபடல், இன்னலங்குன்றல் என்ற நான்கையுங் குறித்தார்.

'கருமஞ் சிதைதல்' என்றதால் கழிகாமத்திலேயே நாட்போக்கி, உலகிற் சிறந்த காரியங்களைச் செய்து மேம்படாது கழிதலைக் குறித்தார். 'கல்வி கெடுத' லாவது, அக்கழி பெருங் காமத்தால், கற்ற கல்வியையும் ஓம்பாது, அக் கல்விப்பயனும் பிற நல்லொழுக்கங்

களையும் கைவிடுதல். 'தருமந்தாழ்வு படல்' என்றதால், கழி பெருங்காமத்தால் தான் மேற்கொண்டிருந்த அற நெறிகளையும் விட்டுக், காமத்திலேயே அழுந்தப் பெறலை உணர்த்தினர். 'இன்னலங் குன்ற'லாவது, கழி பெருங்காமத்தால் தன் இளமையும், வலியும், அழகும் இழத்தல்.

மேலும் 'ஏரிளங் கொம்பனார்' என்று கூறியதும் உணரத்தக்கது. ஏர் என்பது அழகினையும், இளமை என்பது வயதால் குறைந்து இருத்தல் வேண்டுந் தன்மையையும், கொம்பு என்பது மென்மைத் தன்மை யையும் உணர்த்தும்.

ஆண்களுக்கு வீரமும், பெண்களுக்கு அழகும் சிறத்தல் நோக்கி மனைவிக்கு அழகைக் குறித்தார்.

இவ் வழகின் மேம்பாட்டைத்,

> " தாக்கணங்கும்
> ஆணவாம் பெண்மை உடைத்தெனினும் பெண்ணலம்
> பேடு கொளப்படுவ தில்."

என்று அடிகள் புலப்படுத்துவதையுங் காண்க.

தலைவனுக்குப் பதினாறுண்டிலும், தலைவிக்குப் பன்னீராண்டிலும் காமம் முகிழ்க்கு மாதலின், நான் காண்டுகள் தலைவி குறைந்திருத்தல் வேண்டி, இளமை யைக் குறிப்பிட்டார்.

மென்மைத் தன்மை பெண்களின் இயற்கைக் குணம். அங்ஙனமன்றி, ஆடவர்க்குள்ள இயற்கைக் குணமாகிய வன்மைத் தன்மை பெண்கள்பால் காணப் படின், அவர்கள் ஆண் தன்மை யுடையோராய்ச் சிறந்து தோன்றாரென்க. இது குறித்தன்றே கணவனை வலிய கொழு கொம்பாகவும், மனைவியை மென்மைத்தன்மை

வாய்ந்த பூங்கொடியாகவும் ஆன்றோர் கூறுவது. மெல்லியலாரென்பதும் பெண்பாலாரையன்றோ? இனி அடிகள் மனைவிக்கு இன்றியமையாத அகப்பண்பையும் உரைக்கின்றார்.

"கற்புடுத்(து) அன்பு முடித்துநாண் மெய்ப்பூசி
நற்குண நற்செய்கை பூண்டாட்கு."

என்ற விடத்தில் கற்பும், அன்பும், நாணும் நற்குண நற்செய்கைகளும் மனைவிக்கு வேண்டுமென்று குறித்தார். இக் குணங்களே இன்றியமையாப் பொருளாயும், விளக்கத்தைக் கொடுப்பனவாயும் ஆகுமென்பார், அவைகளை உடலோடு தொடர்புற்ற ஆடையாகவும், பூ சாந்தம் அணியாகவும் குறித்தார். இவைகளே அவளுக்கு ஆடையும் அணியும் ஆவன: மற்றை விலையுயர்ந்த ஆடையும், பூவும், சாந்தும் பிற அணிகலன்களும் அணியாகா என்றும் உணர்த்தினார்.

இக் குணங்களுள் சிறந்தது கற்பாதலோடு, இஃதில தாய வழி மற்றைக் குணங்களும் விளங்காவாதலின், இதை முதலாவதாகக் கூறியதோடு, இதை அணியினும் சிறந்த ஆடையாகவே கூறினார்.

"மணிபொன்னும் சாந்தமும் மாலையும் இன்ன
அணியெல்லாம் ஆடையின் பின்."

என்ற பழமொழித் தொடரையும் நோக்குக.

இனி, இல்லறத்திற்கு அன்பே உயிர்க் குணமாதலால், அதை இரண்டாவதாகக் கூறினார். வள்ளுவரும், இல்லறவியலில் முதல் குணமாக அன்புடைமையை வைத்து,

"அன்பகத் தில்லா உயிர்வாழ்க்கை வன்பாற்கண்
வற்றல் மரம்தளிர்த் தற்று."

என்று கூறினர்.

"புறத்துறுப் பெல்லாம் எவன்செய்யும் யாக்கை
அகத்துறுப் பன்பி லவர்க்கு."

என்று அன்பை வள்ளுவர் ஓர் உறுப்பாகவே கூறியதும் காண்க.

மூன்றாவதாகக் கூறிய நாண் என்பது, பெண்களுக்கு இன்றியமையாது இயற்கையாய் அமையத்தக்க குணமாகும். பெண்களுக்குரிய குணங்களான நாண், மடம், அச்சம், பயிர்ப்பு என்ற நான்கனுள்ளும் நாணே முதன்மையாக வைத்து வழங்கப்பட்டிருப்பது காண்க. நாணிலதாயவழி ஆண் தன்மையே மிகுந்து பெண்ணெனப்படா ளென்க. அந்த நாணே கணவன் வழி அமைந்தொழுகச் செய்யும் குணமாம்.

இனி, நற்குண நற்செய்கை யென்பன, கணவனுக்கு ஏற்ப நல்லற நெறியில் அமைவதோடு அவனுக்கு உதவுதலாம். இந் நற்குண நற்செய்கையே அவனை உலகில் விளக்கமுறச் செய்தலின், இவற்றை அணியாகக் கூறினர்.

இனி, இல்லறத்து ஒருவன் கடிந் தொதுக்க வேண்டிய பெருந் தீக்குண மொன்றையும் அடிகள் கூறுகின்றார். அது பிறன்மனை நயத்தல்.

"திருவினும் நல்லாள் மனைக்கிழத்தி யேனும்
பிறன்மனைக்கே பீடழிந்து நிற்பர்—நறவிய
வாயின வேனும் உமிழ்ந்து கடுத்தின்னும்
தீய விலங்கிற் சிலர்."

என்று கூறுகின்றனர்.

இத்தகையோர், கரும்பை வாயிலிட்டு உண்பிப்பினும் உண்ணாது, வேப்பிலையை விரும்பி யுண்ணும் ஒட்டகத்தை யொத்த விலங்கினங்களே' என்று கூறி

னர்.[1] திருவினும் நல்லாளாதலின் கரும்பு உவமை யாயிற்று.

தன் மனையாளிடத்து நிறைந்த இன்பம் எய்த விருப்பதையும், பிறன்மனை நயத்தல் அற்ப இன்பமே யாதலையும் உணர்த்தியே திருமூலரும்,

"ஆத்த மனையாள் அகத்தி லிருக்கவே
காத்த மனையாளைக் காமுறுங் காளையர்
காய்ச்ச பலாவின் கனியுண்ண மாட்டாமல்
ஈச்சம் பழத்துக் கிடருற்ற வாறே"

என்று கூறினர்.

பலா, உண்பதற்கு நிறைந்த கனியாய்ச் சுவை முதிர்ந்ததாய் இருப்பதையும், ஈச்சம்பழம் உண்பதற் கும் நிறைவாகாது சுவை குறைந்தும் இருப்பதோடு, முள் நிறைந்து இருப்பதையும் உணர்க.

ஆடவர்மாட்டுத் தோன்றும் மிகத் தீய குணத்தை எடுத்துக் கூறியது போலவே, தீய பெண்கள்மாட்டு உளதாம் கற்பின்மையின் கொடுமையையும் எடுத்துக் கூறினர் அடிகள்.

"முறையும் குடிமையும் பான்மையும் நோக்கார்
நிறையும் நெடுநாணும் பேணார்—பிறிதுமொரு
பெற்றிமை பேதைமைக் குண்டே பெரும்பாவம்
கற்பின் மகளிர் பிறப்பு."

1. ஒட்டகம் அத்தன்மைத் தாவதை,

"தள்ளரும் பாரந் தாங்கிய ஒட்டகம்
தெள்ளு தண்கரும்பு யாவையுந் தின்கில
உள்ள மென்னத்தம் வாயு முலந்தன
கள்ளுண் பார்களிற் கைப்பன தேடியே."

என்ற கம்பராமாயணச் செய்யுளால் உணர்க.

அத் தீப் பெண்டிர் முறையுங் கருதாது தீவழியில் மிகுந்து சென்று, அதுவரை உயர்ந்து வந்த குடிப்பிறப்பையும் அழித்து, உலக இயற்கையும் நோக்காது நடத்தலின், 'முறையும் குடிமையும் பான்மையும் நோக்கார்' என்றார். அங்ஙனமாயது பெண்களின் உயிர்க்குணமான நிறையும் நாணும் இலவாய வழியாதலின், 'நிறையும் நெடு நாணும் பேணார்' என்றும் கூறினர். பெண் தன்மையே ஒழிந்து நிற்றலின், 'பிறிது மொரு பெற்றிமை பேதமைக் குண்டே' என்றனர். இத் தீயோரின், மிகக் கொடிய இத் தீச் செய்கையை வெறுத்துக் கூறுவார், 'பெரும்பாவம் கற்பின் மகளிர் பிறப்பு' என்றுங் கூறினர். தகாத ஒழுக்கத்தில் பற்றுவைத் தொழுகுவதே பெரும் பேதைமையன்றோ ?

> "பேதைமையு ளெல்லாம் பேதைமை காதன்மை
> கையல்ல தன்கட் செயல்."

என்பதை நோக்குக.

---

## ௬. முற்றத் துறந்தோர் மூவகை நிலைகள்

இனி, அடிகளது துறவறத்தைப்பற்றிய கருத்தைக் காண்போம். அடிகள் உலகத்துப் பொருள்களை உள்ளவாறுணர்ந்து முற்றத் துறந்த முனிவராதற் கேற்பத், துறவறத்தை மேன்மையுாகவே எடுத்துக் கூறுகிறார். அடிகள் உலகோர் நிலையைப்,

> "பரபரப்பி னோடே பலபல செய்தாங்(கு)
> இரவுபகல் பாழுக் கிறைப்ப."

என்று எடுத்துக்கூறி, ஐம்பொறிகளாலும் நுகரப்படும் உலக இன்பத்திலேயே கருத்தைச் செலுத்துவோர், பேரின்ப வழியாம் துறவற நெறியை மறந்தோராய் விடுகின்றனர் என்பார்,

> "சிற்றின்பம் சின்னீர தாயினும் அஃதுற்றார்
> மற்றின்பம் யாவையும் கைவிடுப."

என்று உணர்த்துகின்றனர். இதனால் துறவு, வாழ்க்கைப் பயனை யடைவிக்கு மென்பதும், வீடடைதலே பேரின்பமாகுமென்பதும் உணர்த்தப்பட்டனவன்றோ?

இனித், துறவோர் தன்மையை யுரைக்குங்கால், அவர் காமப் பகையைக் குறிக்கொண்டு காக்கவேண்டுங் கடப்பாட்டை அடிகள் சிறந்தெடுத்துரைக்கின்றார்.

> "பெண்மை வியவார் பெயரும் எடுத்தோதார்
> கண்ணொடு நெஞ்சுறைப்ப நோக்குறார்—பண்ணொடு
> பாடல் செவிமடார் பண்பல்ல பாராட்டார்
> வீடில் புலப்பகையி னார்."

காமவின்பம் ஐந்திடங்களாலும் மனத்தகத்துப் புகுந்து இன்பஞ் செய்வதாகலின், அவ்வைந்திடங்களாலும் மனத்தாலுமே அக் காமவின்பத்தைக் கடிய வேண்டு

மென்று கூறுகின்றார். 'பெண்மை வியவார்' என்பது மனத்தின் செய்கை. 'பெயரும் எடுத்தோதார்' என்பது வாயின் செய்கை. 'கண்ணொடு நெஞ்சுறைப்ப நோக்குறார்' என்பது கண்ணின் செய்கை. 'பண்ணொடு பாடல் செவி மடார்' என்பது செவியின் செய்கை. 'பண்ணொடு பாடல்' என்பது பெண்கள் பாடலை என்க. 'பெயரும் எடுத்தோதார்' என்றவிடத்தும் 'கண்ணொடு நெஞ்சுறைப்ப நோக்குறார்' என்றவிடத்தும் "பெண்ணின் பெயர்" என்றும் "பெண்ணை நோக்குறார்" என்றும் கொண்டதுபோலவே, "பெண்கள் பாடலைச் செவி மடார்" என்றே கொள்ளப்படும். பண்ணொடு பாடல் பிறந்த விடத்தால் துறவிகளுக்குப் பகையே யொழிய, பண்ணொடு பாடலே பகையன்று. பண்ணொடு பாடலை அடிகள் விரும்புவர் என்பது, அவர்,

> "பண்ணும் பரதமும் கல்வியும் தீஞ்சொற் பனுவலும்யான்
> எண்ணும் பொழுதெளி தெய்தநல் காய்........."

என்று கலைமகளை வேண்டிச் சகலகலாவல்லி மாலையிற் கூறியது கொண்டு தெளியப்படும்.

இங்ஙனம் துறந்தோர் பெண்களோடு தொடர்பு ஒரு சிறிதும் இன்றி இருக்கக் கடவர் என்பதும், அத் தொடர்பு அவர்களது துறவொழுக்கத்தை நெறி தவறச் செய்யும் என்பதும் உணர்த்தவே, இவரையடுத்துத் தமிழ் நாட்டில் பெருந்துறவியாய் விளங்கிய சிவப்பிர காசரும்,

> "பகர்ச்சி மடவார் பயிலநோன் பாற்றல்
> நிகழ்ச்சி தருநெஞ்சத் திட்பம்—நெகிழ்ச்சி
> பெறும்பூரிக் கின்றமூலைப் பேதாய் பலகால்
> எறும்பூரக் கற்குழியு மே."

என்று கூறியதுங் காண்க. இக் காமப்பகையே துறவோரால் குறிக்கொண்டு காக்கப்படவேண்டுவது என்பார்,

"அனைத்துலகும்
சொல்லொன்றின் யாப்பார் பரிந்தோம்பிக் காப்பவே
பல்காலும் காமப் பகை."

என்று மற்றோரிடத்தும் கூறினர். இனி, ஐம்புல இன்ப மாகிய இக் காம இன்பத்தைக் கடிந்ததற்கு அடுத்த படியாக, நாவின்பம் கருதி உணவு கொள்ளாது நல்லுண வைத் துறவு நிலைக்குத்தக உடல் நிலைப்பதற்கேற்பவே கொள்ளவேண்டுமென்று கூறுகிறார்.

உலகில் பலரும் நாவின்பம் கருதியே உணவு கொள்கின்றனர். உடல் நன்மையின் பொருட்டு ஆகும் பொருள்கள் எவை என்று ஆராய்ந்து உணவு கொள் வார் மிகச் சிலரேயாவர். நாவின்பங் கருதுவார் உடற்கு ஊறு பாட்டைத் தருமென்பதையும் நோக்காது, நாவுக் கினிமை பயப்பதையே தேடிக்கொள்கின்றனர். என்னே மக்களின் அறியாமை! நாச்சுவையால் இழுக்கப்பட்டு உடல் நன்மையை மறக்கின்றனர்! பின் நோய்வந்த பொழுது, என்செய்தோம் என்செய்தோம் என்று வருந்துகின்றனர். மீண்டும், நோய் தீர்ந்த பின்னும், உடல் நன்மை கருதாராய் நாச்சுவை யொன்றையே கருதி உண்டு வருந்துவர். நாச்சுவை என்னும் அற்ப இன்பம் கருதிச், செயற்கரிய காரியங்களைச் செய்தற்குக் கருவியான இவ்வுடல் நன்மையைக் கருதாதொழிவது என்ன பேதைமை!

அத் துறவோர் எக்காலும் தம் தவநெறியிலேயே முயல்வாராய், ஏதோ ஒருகால் கடும்பசி வந்தவிடத்து நாச்சுவை கருதாது, அக் கடும் பசியைத் தீர்த்தற்

பொருட்டே, பித்தன்போற் சிறிது உணவு கொள்வர் என்று கூறுவர் அடிகள். பித்தன் எக்காலமும் தன் மனம் போனவாறு பல தொழிலிலும் ஈடுபடுவானுய், மிக்க கடும்பசி வந்தவிடத்தன்றே உணவை விரும்புகின்ருன்.

மேலும், உணவில் அளவு கடந்த விருப்பம் வைத்தல் காமவின்பத்திற்கொண்டு செலுத்துவதாம். பெருந்தூக்கம் முதலிய சோம்பற் குணங்களும் பேருண்டியால் விளைவனவே. 'உண்ட களை தொண்டர்க்கு முண்டு' என்ற உலக மொழியும் இக் கருத்தையே தெரிவிப்பதன்ருே? உலகில் செல்வர் பலர் நடுப்பகலில் பேருண்டி கொண்டு உறங்கிக் காலத்தை வீணே கழிப்பதை நம்மில் பலர் அறியலாம். இத் தீமைகளையும் உடன் உணர்த்தி அடிகள்,

> "துயிற்சுவையும் தூநல்லார் தோட்சுவையும் எல்லாம்
> அயிற்சுவையின் ஆகுவஎன் றெண்ணி—அயிற்சுவையும்
> பித்துணக் கொள்பபோற் கொள்ப பிறர்சிலர்போல்
> மொத்துண மொய்ம்பி னவர்."

என்று துறவோர் இயற்கையைக் கூறினர். மொத்துண்ணுதல், புலன்களுக்கு அடிமைப்பட்டுத் துன்பமுறுவதை யுணர்த்தும்.

இங்ஙனம் உணவை வெறுத்த விடத்து, உடல் கொழுப்பற்று வேறுபட்டுத் தோன்றுவது இயற்கையே. வீட்டின்பத்திற் கொண்டுய்க்கும் துறவுநிலையை மேற்கொண்டதால் உடற் பயன் பெற்ற இவர், உடற் பொலிவை நோக்கார் என்க. உடற் பொலிவையே மிகுதியும் நோக்கியும், உடற்பயனுகிய வீட்டின்பத்தை நாடாது உடலின்பத்தையே நாடியும் வாழ்வோர் வாழ்க்

கைப்பயன் பெறாத பேதையரன்றோ? உடற்பயன் பெற்ற இத் துறவோர் உடற்பொலிவை நோக்கார் என்பதை யுணர்த்தும் அடிகள்,

> " அன்போ டருளுடைய ரேனும் உயிர்நிலைமற்(று)
> என்பியக்கம் கண்டும் புறந்தரார்—புன்புலால்
> பொய்க்குடில் ஓம்புவரோ போதத்தால் தாம்வேய்ந்த
> புக்கில் குடிபுகுது வார்."

என்று கூறினர். அன்பும் அருளும் உடையராய இவர், தம் உடல் என்பெழுந்தியங்குமாறு ஆயினும், அதற்கு மனம் வருந்தார் என்று அவர் மன நிலையும் உடல் நிலை யும் நன்கெடுத்துக் கூறினர். நிலையற்ற இவ் உடலைப் 'புன்புலால் பொய்க்குடில்' என்றும், அழியா வீட்டின் பத்தைப் 'போதத்தால் தாம்வேய்ந்த புக்கில்' என்றும் பொருத்தமாகக் கூறியமை காண்க. உடற்பயன் கொண்ட துறவோர் உடலைத் துறப்பதற்கும் வருந்தார் என்பதையும், உடற்பயன் அறியாது, உடலையே இன்பப் பொருளாகக்கொண்டு, அழியும் அவ் உடலின்பத்தின் பொருட்டே நாளை வீணே கழிக்கும் வீணர், அவ் உடலால் துன்பத்தையும் அடைதலோடு அதை இழப்ப தற்கும் வருந்துவர் என்பதையும் உணர்த்துவாராய அடிகள் மற்றோரிடத்துப்,

> " புழுநெளிந்து புண்ணழுகி யோசனை நாறும்
> கழிமுடை நாற்றத்த வேனும்—விழலர்
> விளிவுன்னி வெய்துயிர்ப்பர் மெய்ப்பயன் கொண்டார்
> சுளியார் சுமைபோடு தற்கு."

என்று கூறினர்.

இக் கொள்கையையே மற்றோரிடத்து,

> " ஐந்து
> புலனெருங்கப் பொய்யொழிந் தாரும்...........

....................அஞ்சார் முரண்மறலி
தம்பை முடிசூ டினும்."

என்றும் கூறினர்.

இனி, இத் துறவோர் தந்துறவால் எய்தும் பயன் மெய்யுணர்தலே யாகும். அழிதன் மாலையதாகிய இப் பொய் யுலகத்தையே பொருளாகக் கொள்வதால் துன்பமே வருவதால், அங்ஙனமாகாது மெய்யுணர்தலே இன்பத்துக்குக் காரணமன்றோ? மெய்யே என்றும் நிலைத்து நிற்பதாய் நிலையான இன்பத்தையும் கொடுக்கும். இம் மெய்யுணர்வால் பெறப்படும் இன்பத்தை அடிகள் கூறுவது மிக அழகாக அமைந்துளது.

"கற்றுத் துறைபோய காதலற்குக் கற்பினாள்
பெற்றுக் கொடுத்த தலைமகன்போல்—முற்றத்
துறந்தார்க்கு மெய்யுணர்வில் தோன்றுவதே இன்பம்
இறந்தவெலாம் துன்பமலா தில்."

கல்வியிற் சிறந்த கணவனுக்கும் கற்பிற் சிறந்த மனைவிக்கும் வாய்க்கப்பெற்ற முதல் மகனை உவமையாகக் கூறுகின்றார். தலைமகனே பிள்ளையில்லாத காலத்து முதல்வனாகத் தோன்றியதாலும், அவனே பிதிரர் கடன் செய்யத் தகுந்தவனாதலாலும், அவனைப் பெற்ற இன்பமே இல்லறத்துப் பெரிய இன்பமாதலால் அவ்வின்பத்தை மெய்யுணர்வின்பத்துக்கு உவமை கூறினார். மகன் பெறாவிடத்து அவர்கள் கொண்ட இல்லற வாழ்க்கை பயனில்லாது ஒழிதல்போல, மெய் யுணர்வின்பம் இல்லாவிடத்தும் இவனும் பயனின்றியே கழிந்தவனாவன் என்பதையும் உணர்த்தினார்.

இனி, அடிகள் துறவிகளின் மூவகை நிலைகளைச் சொல்கின்றார். அவற்றுள் முதலாவது, தம் மனத்தைப்

பொறிகளின் வழிச் செல்லவிடாமல் தடுத்து நிறுத்தி இறைவன்பாற் பற்ற வைத்தல். இங்ஙனம் செய்வார் பழி நாணும் இயல்பினராயும் இருக்க வேண்டு மென்று கூறுகின்றனர். பழி நாணும் இயல்பே யன்றோ, மனம் பொறிகளின்வழி அலையா வண்ணம் தடுப்பது? பழிக்கு நாணு இயல்பு இருப்பின் பொறிகளின் வழி மனம் செல்லலைத் தடுத்தல் இயலாதன்றே? ஆதலால், இப் பழிநாணலைச் சிறப்பாக எடுத்துக் கூறுகின்றார். இம் முதல் நிலையை அடிகள் கூறுமாறு பெரிதும் நயம்பட அமைந்திருக்கிறது.

> "காப்பே நிலையாப் பழிநாணல் நீள்கதவாச்
> சேர்ப்பார் நிறைத்தாழ் செறித்து."

என்பது அவர் கூறுமாறு.

மனம் புலன்வழிச் செல்லாமல் காப்பதை வாயில் நிலையாகக் கூறினர். பழிக்கு நாணலை அந் நிலயது கதவாகக் கூறினர். மனத்தை ஒருவழி நிறுத்தலைத் தாழக் கோலாகக் கூறினர். ஒருவழி நிறுத்தலாவது இறைவன்பாற் பற்றவைத்தல். வாயில் நிலையும் கதவும் உளவாய வழியே தாழிட்டு ஒரு வீட்டைப் பாதுகாத்தல் இயலுமாறு போல, பொறிவழி மனம் செல்லாமல் தடுத்தலும், பழிக்கு நாணலும் உளவாய வழியே, மனத்தை இறைவன்பாற் பற்றவைக்கும் தன்மை எய்து மென்று உணர்த்தினர்.

இனி இரண்டாவது நிலை, அங்ஙனம் மனத்தை இறைவன்பாற் பற்றவைப்பதோடு மற்றைச் செய லொழிந்து மெய்யுணர்தலாம். இதை யுணர்த்துமாறுங் காண்க:

"—பற்றுவதே
பற்றுவதே பற்றிப் பணியறவின்(று) ஒன்றுணர்ந்து
நிற்பாரே நீணெறிச்சென் றூர்."

உயிர்களால் பற்றப்படுவது கடவுள் ஒன்றேயாதலால் 'பற்றுவதே பற்றுவதே பற்றி' என்றார். (பொய்யாமை பொய்யாமை ஆற்றின் என்புழிப்போல) முதல் பற்றுவதே என்பதற்குக் கடவுளையும், இரண்டாவது பற்றுவதே என்பதற்கு மனம்பதித்தலையும் கொள்ள லும் ஆம். மனம் பொறிவழிச் செல்லாமல் இறைவனை அழுந்தப் பற்றியவிடத்து மற்றைச் செயலொழிதல் இயல்பேயன்றோ? இங்ஙனம் உண்மையே இயற்கையாக வுடைய இறைவனை அழுந்தப் பற்றியவிடத்து மெய் யுணர்ச்சி தலைப்படுதலும் இயல்பேயன்றோ? இவரே வீட்டு வழியிற் சென்றவராவர் என்றுங் குறித்தார்.

இனி மூன்றும் நிலையாக, அங்ஙனம் மெய்யுணர்ந் தார் உலகியலினின்றும் நீங்கி அகஉணர்வினராவர்: அங்ஙனம் அகஉணர்வில் தெளிவாகத் தாமும் இறைவ னும் ஒன்றுந்தன்மையைக் காண்பார்கள்: கண்ட அக் காட்சி நீங்கப்பெறாதோரே வீட்டையடைந்தவராவர் என்று கூறினர் அடிகள். இதையுணர்த்துமாற்றையுங் காண்க.

"மெய்யுணர்ச்சி கண்விழிப்பத் தூங்குவார் தம்முளே
காண்பதே காட்சி கனவு கனவாகப்
பூண்பதே நீர்த்த பொருள்."

அக்கண் திறக்கப்பெற்று உலகியல் ஒழிதலின், 'தூங்குவார்' என்றார். காண்பது, இரண்டற்ற தன்மை யைக் காண்பதாகும். ஒருகால் கண்டு பிறிதொருகால் காட்சி மறையலாகாதென்பார், 'கனவு கனவாக' என்று கூறினர்.

ஆகவே, மனத்தைப் பொறிவழிச் செல்லவிடாமையும், பழிக்கு நாணலும், மனத்தை நிறுத்தலும் என்ற மூன்றையும் முதல் நிலையாகவும்,

இறைவனைப் பற்றுவதும், செயலொழிதலும், மெய்யுணர்தலும் ஆகிய மூன்றும் இரண்டாம் நிலையாகவும்,

உலகியலொழிந்து அகவுணர்ச்சி பெறுவதும், மனத்தகத்தே இரண்டறக் காண்பதும், கண்டது மாறாமலிருப்பதுமாகிய மூன்றும் மூன்றாம் நிலையாகவும் வகுத்துக் கூறினர் துறவொழுக்கத்தில் தலைநின்று பயனெய்திய தூயோரான உரவோர்.

இம் மூவகை நிலையினையுமே பொறைநிலை, நினைவு, சமாதி என்று புலப்படுத்துக் கூறுவர் ஆன்றோர்.

i. "மனத்தினை ஒருவழி நிறுப்பது பொறைநிலை."

ii. "நிறுத்திய அம்மனம் நிலைதிரி யாமல்
குறித்த பொருளொடு கொளுத்தல் நினைவே."

iii. "அங்கனம் குறித்த வாய்முதற் பொருளொடு
தான்பிற னாகாத் தகையது சமாதி."

என்று பண்டையோர் குறித்தமை காண்க.



## ௧௦. கல்வி இன்பமும் கற்ருேர் கடமையும்

### கல்வி இன்பம்

கல்வி, பயிலுந்தோறும் அறிவுக்கு இன்பத்தையே கொடுப்பதொன்ருகும். "ஒண்டீந் தமிழின் துறைவாய் நுழைந்தனையோ" என்ற திருக்கோவையாரடியும் இக் கல்வி இன்பத்தையேயன்ருே வெளிப்படுத்துகின்றது? கல்வி பயிலுங்கால் அறிவால் புதுப்புது உண்மைகளைக் காணுந்தோறும் அடையும் இன்பத்துக்கு எல்லையும் உண்டோ? இத்தகைச் சிறந்த இன்பப் பொருளாம் கல்வியை யடையத், தொடக்கத்தில் சிறிது வருந்தியே கற்றல்வேண்டும். இது குறித்தே அடிகளும் இக் கல்வி இன்பத்தைக் குறித்துக் கூறுபவர், "தொடங்குங்காற் றுன்பமாய் இன்பம் பயக்கும்" என்று கூறினர். கல்வி தொடக்கக் கல்வியாளர்களுக்கு முதலில் துன்பங் கொடுப்பதன்றி, மற்றையோர்க்குப் பயிலுங் காலத்தும் இன்பங் கொடுப்பதேயாகும்.

அறிவால் நுகரத்தகும் இக் கல்விஇன்பத்தைக், காமவின்பத்தினும் சிறந்ததென்றெடுத்துக் கூறினர். அக் காமவின்பமோ முன் இன்பம்போற் ருேன்றினும், பின் நிறைந்த துன்பத்தையே கொடுக்கும் இயல்பிற்று. கல்வியோவெனின் பயிலும்போதும் இன்பத்தைக் கொடுத்துப், பின்னும் அவன் வாழ்க்கையை உண்மை இன்ப வாழ்க்கையாகச் செய்கிறது.

கல்வி, இன்பத்தையே பயக்கும் என்பதை வலியுறுத்த மேலும் அடிகள், "கல்வியே கற்புடைப் பெண்டிர்" என்றுங் கூறினர். உலகத்துப் பெண்டிர் காமவின்பத்தைக் கொடுப்ப, இக் கல்விப்பெண் என்றும் அழியா

அறிவின்பத்தைக் கொடுக்கின்ருள். மேலும் அப் பெண் வாழ்க்கைத் துணையாயிருந்து அவனுக்கு அறிவுரை கூறியும், அவனுடைய இல்லறமாம் நல்லறக் காரியங் களுக்குத் துணைபுரிந்தும் நிற்பதுபோல், கல்விப் பெண் ணும் வாழ்க்கைக்குப் பிரியாத்துணையாய் அமைந்து அறிவையுங் கொடுத்து அவனுடைய நல்லறக் காரியங் களுக்கும் வழிகாட்டிக்கொண்டு வருகிருள். ஆகவே, என்றும் பிரியாது இருந்து பழகப் பழக மேன்மேலும் இன்பத்தைக் கொடுக்கும் கல்வி இன்பமே இன்பம் என்று இன்பப் பொருளாகவே கல்வியைக் கூறிய முறை பெரிதும் போற்றத்தக்கது.

இக் கல்வியே சிறந்த இன்பத்தைக் கொடுக்கும் மனைவியாவாள் என்பதைக், கீழ்க்காணும் உவமை யாலும் அடிகள் குறித்தவாறுங் காண்க.

> "போக்கறு கல்வி புல(ம்)மிக்கார் பாலன்றி
> மீக்கொள் நகையினர் வாய்ச்சேரா—தாக்கணங்கும்
> ஆணவாம் பெண்மை யுடைத்தெனினும் பெண்ணலம்
> பேடு கொளப்படுவ தில்."

அழகே ஒரு வடிவெடுத்தாற்போன்ற பெண்ணை, ஆண்மையுடையோனே இன்பம் நுகர்வன் அன்றிப் பேடி இன்பம் நுகர நினைப்பின் முடியுமோ? இஃதே போன்று, கல்வி இன்பத்தை அறிவு மேம்பட்டார் அடைவரேயன்றி, நகைத்து வீண்பொழுது போக்கும் அறிவற்ருேர் அடைவரோ? என்று கூறுகின்றனர்.

கல்வி, இன்பப் பொருளாவதென்பதை யுணர்த்து மாறு இதைவிட வேறும் வேண்டுமோ? கல்வி ஒருவ னுக்கு இவ்வுலக வாழ்க்கையிலும் இன்பத்தைக் கொடுத்து, முடிவில் அழியா வீட்டின்பத்தையுங் கொடுப்பதன்ருே?

## கல்வியின் முதற் பயன்

*அறிவுரை வழங்கல்*

கல்வியின் பயனுக அடிகள் சொல்வன்மை பெற வேண்டுமென்று கூறுகின்றனர். சொல்லுந் திறமறிந்த தூயோர் நூல்கள் பலவற்றைக் கற்பதால், கற்ருேர்க்கு இயற்கையாகச் சொல்வன்மை உண்டாவதே.

சொல்வன்மை யுடையோரே இவ்வுலகில் சிறந்து தோன்றலை யாவருமறிவர். சொல்வன்மை யுடையோர் அவ் வன்மையாலேயே தம்மைச் சூழ்ந்தோர் பலரையும் தம்வழிப் படுத்துவதோடு, தஞ் சொல்வன்மையால் யாவரும் தஞ் சொற்படி நடப்போராய்க் கண்டு தலைமை யும் அடைகின்றனர். ஒரு நாட்டில் சிறந்த தலைவராய் விளங்குவோரும் தஞ் சொல்வன்மையாலன்றே நாட்டு மக்களைப் பிணித்துத் தம் சொல்வழி அவர்களைச் செலுத்துகின்றனர். இங்ஙனமெல்லாம் நாம் காண்ட லின், சொல்வன்மையைவிடச் சிறந்த செல்வமும் உலகில் உண்டோ? தம்மைச் சூழ்ந்தார் பலரும் தஞ்சொற் கேட்டு நடப்ப இருப்பாரையும் 'செல்வாக்குற்றவர்' என்று உலகம் சொல்வதும் இது கருதியன்றே?

ஆதலின், கல்வியால் பெற்ற இத்தகைச் சிறந்த சொல்வன்மையைச் சொல்லவேண்டி, "சொல்வளம் மல்லல் வெறுக்கையாம்" என்று, சொல்லைச் செல்வ மாகவே கூறினுர் அடிகள்; சொல்வளம் பொருந்திய வழியே, ஏற்ற சொற்களை இடமறிந்து பேசும் வன்மை உண்டாதலின்.

ஒருவர் கல்வி, சொல்வன்மையாலேயே பிறர்க்கு விளங்கித் தோன்றலால், கல்வியோடு சொல்வன்மையும் பெற்றிருக்கும் தன்மையைப் 'பொன் மலர் நாற்ற

முடைத்து' என்றும் கூறினர். நாற்றமே பூவின் பெருமையைப் பலருக்கும் அறிவித்தல்போல, இச் சொல்வன்மையும் கல்வியின் பெருமையை அறிவிக்கிற தன்ருே ?

இச் சொல்வன்மையால் ஒருவன் கற்ருேரவை யுள்ளும் மேம்பட்டு விளங்கிப், பலருக்கும் அறிவுரை களை வழங்கல் வேண்டுமென்றும் கூறுவர் அடிகள். இதையே கல்வியின் முதற்பயனுக அடிகள் கூறுகின்ருர். கல்வி கற்பது சிறந்த உண்மைகளைத் தாம் உணர்ந்து நடப்பதோடு, பிறர்க்கும் உணர்த்திப் பிறமக்களையும் நல்வழிப்படுத்தவன்றே? இங்ஙனம் பிறர்க்கும் அறிவுரை வழங்காக்கால் கற்றதன் சிறந்த பயனில் தலைப்படாதவ ராகவே ஆவார். 'பிறர்க்குப் பயன்படத் தாங்கற்ற' என்று மற்ருேரிடத்தும் இக் கருத்தையே தெரிவிக் கின்ருர் அடிகள்.

> " தந்தை மகற்காற்று நன்றி அவையத்து
> முந்தி யிருப்பச் செயல்."

என்ற பொய்யா மொழியும், தந்தையின் கடமை மைந்தனைக் கல்வி வல்லோனுக்க வேண்டுமென்பதை யும், அம் மைந்தன் தான் கற்ற கல்வியால் கற்ருேரவை யுள் அறிவுரை வழங்கிக், கல்விப் பயனையும் தலைமையை யும் அடையவேண்டு மென்பதையுமன்ருே உணர்த்து கின்றது ?

கல்வியின் தலையாய பயன் கற்ருேரவையுள் பலர்க் கும் அறிவுரை வழங்கலே என்பதும், அப் பயனெய்தா விடத்து அக் கல்வியால் பயனே இல்லை யென்பதும் உணர்த்தியே அடிகள் மேலும்,

" அவையஞ்சி மெய்விதிப்பார் கல்வி...........
........................................................
........................................................
பூத்தலிற் பூவாமை நன்று."

என்றும் கூறிப் போந்தனர்.

### கல்வியின் இரண்டாவது பயன்

நூலியற்றல்

கல்வியின் மற்ருெரு சிறந்த பயனுக அடிகள் கூறுவது, தாங்கற்ற கல்வியால் பெற்ற அரிய உண்மைகளைத், தாம் இறந்த பின்னும் நின்று நிலவுமாறு, நூல்வாயிலாக வெளியிட்டு மக்கட்குணர்த்தல் என்பதாம். இச் செய்கை அவர் கற்ற கல்வியின் பயனும் அமைந்து மக்களுக்கு உதவுவதோடு, அவர் புகழையும் உலகமுள்ளளவும் நிலைக்கச் செய்கிறது.

"தோன்றின் புகழொடு தோன்றுக அஃதிலார்
தோன்றலின் தோன்ருமை நன்று."

என்பது பொய்யில் புலவன் பொருளுரை யன்ருே?

இங்ஙனம் கற்ருேன் ஒருவனுல் இயற்றப் பெற்ற நூல், அவனுக்குப் பின்னும் விளங்கி, அவன் புகழையும் பரப்புதலால், கல்வியைக் கற்புடைப் பெண்டிராய்ப் பெற்ற ஒருவனுக்கு, 'நூல் ஒப்பற்ற புதல்வனும் அமைகின்றது' என்று கூறினர் அடிகள்.

" கல்வியே கற்புடைப் பெண்டிர் அப்பெண்டிர்க்குச்
செல்வப் புதல்வனே ஈர்ங்கவியா."

என்பது அடிகள் கூறுமாறு. கவி யென்று கூறினுராயினும், தனிக் கவியோடு பல கவிகளால் இயன்ற நூலுமன்ருே கொள்ளப்படும். இச் செய்யுள் நூலேயன்றி உரை நடையால் இயற்றப்பெற்ற உரை நடை நூலுங்

கொள்ளப்படுவதேயாம். உலகில், ஒருவன் பெற்ற புதல்வன் அவனுக்குப் பின் எச்சமாய் நிற்பதுபோல, இந் நூலும் அவனுக்குப் பின் எச்சமாய் நிற்கின்றது. உடல் தொடர்பால் அம் மகன் நிற்க, அறிவின் தொடர்பால் இந் நூன்மகன் நிற்கின்றான். அம் மகன் வறிதே யமைதலும், தன் தீ யொழுக்கத்தால் தன்னைப் பெற்றோனுக்குப் பழியைத் தேடலு முண்டு. இந் நூன்மகனோவெனின், தன்னைத் தோற்றியோனுக்கு என்றும் புகழைக் கொடுத்து, மக்கட்கும் அறிவுரைகளை வழங்கி, நற்காரியமே புரிந்தொழுகுகின்றான்.

இங்ஙனம் கற்றோன், என்றும் இறவாது புகழ் பெருக நிற்கும் நூலாகிய மகனைத் தோற்றுவித்தலால், கற்றோனைப் பிரமனினும் சிறந்தோனாகவும் கூறினர் அடிகள்.

> *"கலைமகள் வாழ்க்கை முகத்த(து) எனினும்*
> *மலரவன் வண்தமிழோர்க்(கு) ஒவ்வான்—மலரவன்செய்*
> *வெற்றுடம்பு மாய்வனபோல் மாயா புகழ்கொண்டு*
> *மற்றிவர் செய்யு முடம்பு."*

---

## கக. உலகியல் ஆக்கும் உயர்வுடைச் செல்வம்

உலகியல் நடத்தற்குப் பொருளே இன்றியமையாத தாதலின், அடிகள் பொருளின் மேம்பாட்டையும், அதை ஈட்டன் முறையையும், அதனாற் பயனெய்தும் முறை யையும் விளக்கமாக எடுத்துக் கூறுகின்றார்.

"கைத்துடையான் காற்கீழ் ஒதுங்குங்கடன் ஞானம்"

என்று கூறி. செல்வமாஞ் சீரிய பொருளைப் பெற்றா னையே உலகம் மதித்து, அவனை நாடி நிற்கும் என்று கூறுகின்றனர் அடிகள். உலக மக்கள் பொருளுடை யானையே சுற்றித் திரிந்து தம் வாழ்நாட்கு வழி தேடு வது, உலகில் பெரிதும் காணப்படுவதன்றே. அச் செல்வர் உலோபியாய் இருப்பினும் பாரார் என்று கூறுகின்றார் அடிகள்.

"இவறன்மை கண்டும் உடையாரை யாரும்
குறையிரந்தும் குற்றேவல் செய்ப."

என்பது அடிகள் கூறுமாறு. இதனால் கற்றோர் தாமும் பொருளுடையராய வழியே, அவர் கல்வி சிறந்து தோன்றுமென்றுங் கூறினர். இதற்கவர் எடுத்துக் கூறிய உவமை பெரிதும் நோக்கத்தக்கது.

"மனைத்தக்காள்
மாண்பிலள் ஆயின் மணமகன் நல்லறம்
பூண்ட புலப்படா போல்."

இனி, இத்தகைச் சிறந்த செல்வத்தை ஈட்டு மாற்றை அடிகள் கூறுவதோடு, உலகில் இப் பொருளை ஈட்டுதற்குச் சிலர் தவறானவழியில் முயல்வதையும் உணர்த்துகின்றார். சிலர் தங்குலத்துக் கேலாதவழி யில் பொருளீட்ட முயன்று குலப்பெருமைக்கே

அழிவைத் தேடுகின்றனர். சிலர் பொய் கூறியும் உண்மை நெறிவிட்டும் பொருளீட்டுதல் ஒன்றிலேயே கருத்தாய் இருக்கின்றனர். அவர்கள் இன்புறப் பொருளீட்டித் துன்புறற் கேதுவான தீமையே விதைத்துக் கொள்கின்றனர். சிலர் பொருளீட்டுதல் வேண்டிய முயற்சியில் ஈடுபட்டு, அம் முயற்சியின் பொருட்டு, அதுவரை மேற்கொண்டிருந்த நற்சார்புகளையும் கைவிடுவர். இது மகனை வேண்டி நின்றவள் கணவனை இழந்த செயலன்றோ? சிலர் தம் உரிமையெல்லாம் இழந்து பிறர்க்கு அடிமைப்பட்டேனும், பெரும் பொருள் ஈட்டலிலேயே கருத்தூன்றி நிற்பர். இவர் பொருள் பெறுவதால் அடைவது இன்பமாமோ? இவைகளை அடிகள் உணர்த்துமாறு காண்க.

> "குலம்விற்றுக் கொள்ளும் வெறுக்கையும் வாய்மை
> நலம்விற்றுக் கொள்ளும் திருவும் தவம்விற்(று)ஆங்(கு)
> ஊனோம்பும் வாழ்வும் உரிமைவிற்(று) உண்பதூஉம்
> தானோம்பிக் காத்தல் தலை."

பொருளாசை இத் தவறான வழிகளிலும் செலுத்தும் என்பதை யுணர்த்துவாராய், 'ஓம்பிக் காத்தல் தலை' என்று கூறி விழிப்பாக இருந்து காக்க வேண்டுமென் றுணர்த்தினார்.

இப் பொருளீட்டுவானுக்குச் சிறப்பாக ஒரு குணம் வேண்டுமென்று குறிப்பிடுகின்றார். அது அளவு கடந்த அவா நீத்த தன்மை. 'போதுமென்ற மனமே பொன் செயு மருந்'தன்றோ. பொருளின்மேல் அளவுகடந்த அவா, ஒருவனைத் தவறான வழிக்கே கொண்டுபோய் விடும். அவன் எவ்வளவு பொருள் ஈட்டினான் ஆயினும், அவ்வவா அவனுக்கு இன்பத்தை எய்துவிக்காது. அவனைத் துன்பத்திலும் அழிவிலுமே கொண்டு

செலுத்தும். இதனாலேயே பொருளை ஈட்டலாகா வழியை யும் ஈட்டும் வழியையும் கூறுதற்கு இடையே, இப் பேரவாவின் இயற்கையைப்,

"பெற்ற சிறுகப் பெறாத பெரிதுள்ளும்
சிற்றுயிர்க்(கு) ஆக்கம் அரிதம்மா."

என்று கூறி, அவனுக்கு அவ்வவா அழிவே தரும் என்று கூறினர். இதைக் குறித்து, மற்றோரிடத்தும் அடிகள்,

" தம்மின் மெலியாரை நோக்கித் தமதுடைமை
அம்மா பெரிதென் றகமகிழ்க."

என்றும், பிறிதோரிடத்தில்,

"பெற்றது கொண்டு மனந்திருத்தி."

என்றும் வலியுறுத்திக் கூறிச் சென்றனர்.

இனி அடிகள் பொருளீட்டுமாற்றைக் கூறுவதை நோக்குவாம். அது,

" தத்தம் நிலைக்கும் குடிமைக்கும் தப்பாமே
ஒத்த கடப்பாட்டில் தாளூன்றி—எய்த்தும்
அறங்கடையில் செல்லார் பிறன்பொருளும் வெஃகார்
புறங்கடைய தாகும் பொருள்."

என்பது. பொருளீட்ட வேண்டித் தனக்குக் கடமை யாய் அமைந்த செயல்களில் முயற்சியை மேற்கொள்ள வேண்டுமென்று கூறுகிறார் அடிகள். கடமையாவது 'தன் நிலைக்கும் குடிக்கும் ஏற்ற செயலை அறவழியில் செய்து நிற்றல்' என்றுங் குறிப்பித்தார். தன் நிலையாவது தனக்குள்ள வலிமை, காலம், இடம், துணை முதலிய வற்றின் நிலை. ஆகவே, "தன் நிலைக்கு ஏற்ற வகை யிலும், தன் குடிக்குச் சிறப்புத்தரும் முறையிலும்; அறவழியிலும், தன் கடமை குன்றாது முயற்சியை

மேற்கொள்ள வேண்டும்" என்று குறிப்பித்தார். "புறங்கடையதாகும் பொருள்" என்று கூறி அவனிடத்தில் பொருள் தானே வந்தடையுமென்றும் உணர்த்தினர்.

> "ஆக்கம் அதர்வினய்ச் செல்லும் அசைவிலா
> ஊக்க முடையா னுழை."

என்று வள்ளுவரும் மொழிந்தனரன்றோ. பிறன் பொருள் விரும்பல் உலகத்துப் பலவிடத்துக்காணப் படலின், 'பிறன்பொருளும் வெஃகார்' என்று அதைத் தனியே குறிப்பித்தார். இங்ஙனம் பிறன் பொருளை விரும்பித் தமதாக்கும் செயலைத் தெளிவாக மற்ருேரிடத்தும்,

> "இடைதெரிந்(து) அச்சுறுத்து வஞ்சித்(து) எளியார்
> உடைமை கொண்(டு) ஏமாப்பர்."

என்று குறித்தார். பிறன் பொருள் விரும்புவோர் தம்மின் எளியார்மாட்டு உள்ள செல்வத்தைக் கருதி, ஏற்றசமயம் பார்த்திருப்பதையும், அவர்களைத் தம் வலிமையால் அச்சுறுத்துவதையும், தெளிவாக உணர்த்தியவாறு காண்க.

இனிப், பொருளீட்டியோர் தக்க வழியில் பொருட் பயனடையு மாற்றையுங் குறிப்பிடுகின்றார்.

> "வள்ளன்மை இல்லாதான் செல்வத்தின் மற்றையோன்
> நல்குரவே போலு நனிநல்ல."

என்று அடிகள் கூறுகின்றனர்.

மேற்கூறிய நன்முறையில் பொருளீட்டியோன் அப்பொருளால் தான் இன்புறுவதோடு, வறியார் பலருக்கும் கொடுக்கும் வள்ளலாய் வாழானயின், அவன்

செல்வ மற்றவனாய் இருத்தலே நல்லதென்றுணர்த்து கின்றார்.

> " ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்ல(து)
> ஊதிய மில்லை உயிர்க்கு."

என்பது மெய்மொழி யன்றோ. ஆதலின் வள்ளன்மை யற்றோன், பொருட்பயன் இழந்து, பொருளீட்டலும் காத்தலும் என்ற செயலே புரிந்து வருந்துவோனன்றோ?

> " பேதைமை என்ப(து) யாதெனில் ஏதங்கொண்(டு)
> ஊதியம் போக விடல்."

என்று கூறியாங்கு, அவன் பேதையேயாதலன்றி வேறுண்டோ ? இதனால் அன்றோ அடிகள் மற்றோரிடத்தும்,

> " நவையஞ்சி
> ஈத்துண்ணார் செல்வமும் நல்கூர்ந்தார் இன்னலமும்
> பூத்தலின் பூவாமை நன்று."

என்று கூறினர்.

ஈண்டுக் கூறிய நவையாவது,

> " அருளிலன் அன்பிலன் கண்ணறையன் என்று
> பலரால் இகழப் "

படும் குற்றம். இதை அடிகள் மற்றைய செய்யுளில் குறித்தார்.

இனிப் பொருட்பயன் கருதுமிடத்தும் உலகில் மூவகையார் இருக்கின்றனர் என்று அடிகள் குறித்தனர். ஒருவர் தாம் ஈட்டிய பொருள் உலகில் எவ்வுயிர்க்கும் பயன்படும்படி ஈந்து வாழ்பவர். ஒருவர் தாமும் தம்மைச் சேர்ந்தாரும் மட்டும் இன்புற்றிருக்கச் செலவு செய்து வாழ்பவர். மற்றையோர் தாமும் செல்வப் பயனையடை யாது பிறர்க்குங் கொடாது பொருளீட்டல் காத்தல்

என்ற இரு செயலுடையராய்த் துன்புற்று வீணே மடிவோர். இம் மூவர்க்கும் அடிகள் கூறும் உவமை முறையே பொது மகளும், குலமகளும், கைம்மை யோளும். பொதுமகள் பலர்க்கும் இன்பம் வழங்கலும், குலமகள் தன் நாயகனையே இன்புறுத்தலும், கைம்பெண் யார்க்கும் பயனின்றி வீணே கழிதலும் இயற்கையன்றே?

> "பொதுமகளே போல்வ தலையாயார் செல்வம்
> குலமகளே ஏனையோர் செல்வம்—கலனழிந்த
> கைம்மையார் பெண்மை நலம்போல் கடையாயார்
> செல்வம் பயன்படுவ தில்."

---

## கஉ. அரசர்க் கொளிதரும் அருங்குணம் நான்கு

"கொடையளி செங்கோல் குடியோம்பல் நான்கும்
உடையானும் வேந்தர்க்(கு) ஒளி."

என்ற குறளில் வள்ளுவர் அரசனுக் கின்றியமையா நான்கு குணங்களை வடித்தெடுத்துக் கூறினர். குடியோம்பல் அரசனது கடமையாயிற்று. செங்கோல் அவனது நேரிய மனப்பான்மையை யுணர்த்தும். அளியென்பது மக்களுக்கு உயிர்க்குணமாகி அன்பு செய்தலை யுணர்த்தி, அதன் வழித்தாகி முகமலர்ந்து இனியகூறி மக்களை யணைத்தலை யுணர்த்தும். கொடை என்பது அரசன் எப்பொருளையும் உடையானதற்கேற்ப, அப் பொருட் பயனாக வேண்டுவார்க்கு வேண்டியன கொடுக்குஞ் செய்கையை யுணர்த்துவது. இங்ஙனம், அரசன் தனது கடமையாகக் குடியோம்பலையும், மனமொழி மெய்களின் தன்மையாகச் செங்கோல், அளி, கொடை என்பவற்றையுங் கொள்ளவேண்டுமென்று கூறினர் வள்ளுவர்.

இக் குறளின் விளக்கமாக இச் சிறந்த நான்கினையுமே அடிகள் தம் நூலுள் எடுத்து உரைக்கின்றனர். குடியோம்பலைக் கூறுமிடத்து,

"கண்ணிற் சொலிச் செவியின் நோக்கும் இறைமாட்சி
புண்ணியத்தின் பாலதே யாயினும்—தண்ணளியால்
மன்பதை ஓம்பாதார்க் கென்னும் வயப்படைமற்(று)
என்பயக்கும் ஆணல் லவர்க்கு."

என்று கூறுகின்றார்.

அரசனது கடமையாகும் இது என்பதை ஓர் உவமை மூலம் வலியுறுத்துகின்றார். வில் வாள் முதலிய படைகள் ஆண்மை யோனிடத்தேயே பயன்பெற்று

விளக்கமுறும். அவை ஆண்மையற்றவனிடம் இருப்பின், பயனற்றுக் கழிவதோடு அவனது இழிவையும் புலப் படுத்தி நிற்கின்றன. ஆண்மையுடையோன் படையைக் கொண்டு மேம்பட்டு விளங்கல், அவனது கடமையும் இயற்கையும் ஆதல்போல, அரசனது கடமையும் இயற்கையும் குடியோம்பலே என்பதை விளங்க வைத் தார்.

மேலும், குடியோம்பாவழி இழிவடைந்து அவன் அரசனுந் தன்மையும் இல்லாதவனுகின்ருன் என்பது, இவ் வுவமையால் உணரக் கிடக்கின்றது.

இனிச் செங்கோன்மையை விளக்குமாற்றை நோக்கு வோம்.

> " ஒற்றிற் றெரியாச் சிறைப்புறத்து ஓர்துமெனப்
> பொற்ருேள் துணையாத் தெரிதந்தும்—குற்றம்
> அறிவரிதென்(று) அஞ்சுவதே செங்கோன்மை சென்று
> முறையிடினும் கேளாமை யன்று."

என்பது அடிகள் கூறுமாறு.

செங்கோன்மையாவது செய்யப்படும் முறையினது தன்மை. அம் முறை ஒருபாற்கோடாது செவ்வியகோல் போறலின், செங்கோல் எனப்பட்டது. ஒருபாற் கோடாது நடு நிற்றல் மனத்தின்கண்ணே யமைந்த குணமன்ருே? இங்ஙனமாவதை வள்ளுவரும்,

> "கெடுவல் யான் என்பதறிக தன்னெஞ்சம்
> நடுவொரீஇ அல்ல செயின்."

என்று கூறியதால் உணர்க.

முறை செய்து கோல் கோடாது அரசு செய்ய நினையும் அரசன், நாட்டு நிகழ்ச்சிகளை ஒற்றர் மூலம்

அறிதலோடு, தானே மாறுவேடம் பூண்டு நேர்சென்றும் அறிய வேண்டுமென்று கூறுகின்றனர் அடிகள். இதற்கு ஆண்மை வேண்டுமென்பார், "பொற்றேள் துணையாத் தெரிதந்தும்" என்று கூறினர். அங்ஙனம் நேரிற்கண்ட வழியும், தன்னறிவால் நன்கு ஆராய்ந்து சீர்தூக்கியே குற்றத்தைத் துணிதல் வேண்டுமென்று கூறுவார், "குற்றம் அறிவரிதென்றஞ்சுவதே செங்கோன்மை" என்று கூறினர். இக் கருத்தோடே பிறர் சொன்னவற்றை யும் அரசன் ஆராய்ந்தே மேற்கொள்ளவேண்டுமென் பதை அடிகள் மற்றோரிடத்தும்,

> "ஏதிலார் யாதும் புகல இறைமகன்
> கோதொரீஇக் கொள்கை முதுக்குறைவு—நேர்நின்று
> காக்கை வெளிதென்பார் என்சொலார் தாய்க்கொலை
> சால்புடைத் தென்பாரு முண்டு."

என்று கூறினர்.

ஒற்றர்களால் செய்தியை யுணர்வதோடு தானே நேரிற் சென்று அறிந்தும், தான் பார்த்தவற்றையும் கூடத் தன்னறிவால் ஆராய்ந்தே, குற்றத்தைத் தீர்மா னிக்க வேண்டியிருக்கக், கொடுங்கோல் அரசர் பலர் இதற்கு நேர்மாறாக நடப்பதையும் அடிகள் மனங்கவன்று "சென்று முறையிடினும் கேளாமையன்று" என்று கூறினர்.

இனி மன்னனுக்கு வேண்டப்படுவதாகிய, 'தண் ணளியால் இன்சொல் வழங்கி அணைத்தலை,' அடிகள் எதிர்மறை முகத்தால் கூறுகின்றார். தண்ணளிக்கு மாறான கடுஞ் சொல் வழங்கும் கொடுமையைக் கூறித், தண்ணளியின் மேன்மையை உணர வைக்கின்றார்.

> "இன்று கொளற்பால நாளைக் கொளப்பொருள்
> நின்று குறையிரப்ப நேர்படான்—சென்றொருவன்

ஆவன கூறின் எயிறலைப்பான் ஆறலைக்கும்
வேடலன் வேந்து மலன்.''

என்று கூறினூர்.

''சென்றொருவன் ஆவன கூறின் எயிறலைப்பான்'' என்பதால் தண்ணளிக்கு மாறான கொடுமையை எடுத்துக் கூறினூர்.

இயற்கையாகவே அரசன், மக்கள் எல்லோரையும் தண்ணளியோடு இன்சொல் வழங்கி அணைக்க வேண்டியிருக்க, ஒருவன் தேடிவந்து தன் குறையைக்கூறிக் கொண்டவிடத்தும், மனத்தில் ஈரமற்ற வன்னெஞ்சன், அவன் குறைகேட்டு இன்மொழி கூறி அவனை அணைக்காது, கொடுஞ்சொற் கூறுதலோடன்றிப் பற்கடித்தும் அச்ச முறுத்துகின்றான்.

இங்ஙனம் கொடுஞ்சொல் கூறி எயிறலைக்கும் அரசனது இத் தீக் குணத்துக்குத் தொடர்பாக முன்னிகழும் தீக்குணங்களையும் இதனோடு அடிகள் குறிப்பித்தார். இங்ஙனம் கடுஞ்சொல்கூறி எயிறலைப்போன் காட்சிக் கெளியனாவனோ? ஆகானன்றே? அதைக் குறித்தே ''நின்று குறையிரப்ப நேர்படான்'' என்று அச்செருக்கிய குணத்தையும் இதோடு தொடர்பு படுத்திக் கூறினர்.

இவ்வாறே வள்ளுவரும்,

''காட்சிக் கெளியன் கடுஞ்சொல்லன் அல்லனேல்
மீக்கூறும் மன்னன் நிலம்.''

என்று இவ்விரண்டையும் தொடர்பு படுத்திக் கூறியதுங் காண்க. இன்சொற்குக் காரணமான அன்போடு கண்ணோட்டமும் தொடர்புடையதாகலின், அக் கண்ணோட்டமின்மையையும் உணர்த்துவார்,

"இன்று கொளற்பால நாளைக் கொளப்பொருன்."

என்று கூறினர். கண்ணோட்டம் அன்போடு தொடர்புடையது என்பதை அடிகள்,

"அருளிலன் அன்பிலன் கண்ணறையன் என்று
பலரால் இகழப் படான்"

என்ற அடிகளில் புலப்படுத்து மாற்றையுங் காண்க.

இனி, அரசனது கொடைக்குணத்தை மிக அழகிய முறையில் விளக்குகின்றார்:

"கண்ணோக்(கு) அரும்பா நகைமுகமே நாள்மலரா
இன்மொழியின் வாய்மையே தீங்காயா—வண்மை
பலமா நலங்கனிந்த பண்புடையார் அன்றே
சலியாத கற்ப தரு."

இச் செய்யுள் எல்லார்க்கும் பொருந்தப் பொது வகையாகக் கூறியதுபோற் காணப்படினும், இச் செய்யுளுக்கு முன்னும் பின்னும் தொடர்பாக அரசனைப்பற்றிய செய்திகளே யமைய, இது நடுவில் அமைந்திருப்பதால், இஃது அரசனைக் குறித்துக் கூறியதாகவே துணிதல்வேண்டும். ஆயினும், இக் குணம் மற்றோராலும் கைக்கொள்ளப்பட வேண்டிய சிறந்த குணமாதலின், பொது வகையாற் கூறியதுபோன்று கூறினர் என்க. அரசனுக்குக் கொடைக் குணம் வேண்டும் என்று சொல்லவந்தவர், அவனைக் கற்பக தருவாகவே கூறினர். அரசன் உலகத்து எப்பொருளையும் உடையோனாதலின், எப்பொருளையுங் கொடுக்குங் கற்பகதருவாகக் கூறப்பட்டான்.

கொடைக் குணம் அமைந்தவனிடம் இன்றியமையாமல் இருக்கவேண்டிய சிறந்த குணங்களையும் அடிகள் கூறினர். அவை: இன்னோக்கும், நகைமுகமும்,

இன்மொழியும் என்ற மூன்றுமாம். முற்கூறிய ‘தண்ணளி’ எக் காலத்தும் உள்ள ஒரு தனிக் குணமாக, ஈண்டுக் கூறிய ‘இன்மொழி’ கொடைக் குணத்துக்கு அங்கமா யமைவது என்க.

தம்மிடம் வந்து ஒரு பொருளை இரந்தாருக்குத், தம்மைக் கண்ட உடனே, அவர் துயரைத் துடைப்பன, தம்மாட்டு உண்டாம், இன்னோக்கும் நகைமுகமுமே யாகலின், முதன் முதலாக இவை இரண்டும் வேண்டும் என்று சொல்லப்பட்டன. அவற்றின்பின், அவர் கூறும் இன்மொழியே அவரது இயற்கையான கொடைக் குணத்தை யுணர்த்து மாதலின், இன்மொழியை மூன்றுவதாகக் குறித்தார். இவ்வின்மொழி இல்லாதவிடத்து, மேற்கொண்ட கொடையும் பயனுடைத் தன்றன்றே?

இன்னோக்கும், நகைமுகமும், இன்சொல்லும், கொடைக்குமுன் அமைய வேண்டுவன என்பது குறித்தன்றோ வள்ளுவரும்,

> “முகத்தான் அமர்ந்துஇனிது நோக்கி அகத்தானும்
> இன்சொ லினதே அறம்.”

என்று கூறினர். “ஈதல் அறம்” ஆதலின், இன்சொலினதே ஈதலாகிய அறம் என்று கொள்க.

இம் மூன்றும் இலவாய வழி, ஈதல் அறமாகாதென்க. இங்ஙனம், மனத்தோடும், இன்சொல்லோடும் தொடர்பு படாத ஈதல், போலியறமேயா மென்க. உண்மையான செயல் நன் மனத்தோடும், நற் சொல்லோடும் தொடர்புபட்டே இருக்குமன்றோ? வள்ளுவர், ‘முகமலர்ச்சியை’ முன்னும் ‘இன்னோக்கத்தை’ப் பின்னும் வைத்தது செய்யுளாதலின் என்க. முகத்தின் கண்ணே

நுண் பொருளாதலின், இன்னுேக்கம் நிகழ்ந்தே முக மலர்ச்சி நிகழுமென்க.

இதை யுணர்த்தவே அடிகள், இன்னுேக்கத்தை அரும்பாகவும், நகை முகத்தை மலராகவுங் கூறினர். ‘இன் சொலினதே அறம்’ என்று கூறியாங்கு, இன் மொழியும் கொடையும் ஒரு நிகரனவாகலின், இன் மொழியைக் காயாகவும், கொடையை அக் காயே கனிந்த விடத்தாம் கனியாகவுங் கூறினர்.

“அகனமர்ந்து ஈதலின் நன்றே முகனமர்ந்(து)
இன்சொல னாகப் பெறின்.”

என்ற குறட்பாவால் இன்சொல்லை ஈதலினும் உயர்வாகக் கூறியது, ‘காயின்றிப் பழம் இல்லாத தன்மைபோல’, இன்சொலின்றி ஈதல் இல்லையாதலின், அம் முதன்மை நோக்கி என்க. கொடுஞ் சொல் பொருந்த ஈவோர், அறவழி நிற்போரன்றித், தம் பெருமை கருதிக் காரியம் செய்யும் கீழோர் அன்றே?

இங்ஙனம் கொடை அளி செங்கோலைக்கொண்டு குடியோம்பும் அரசன், இடுக்கண் பல வரினும் அவற்றை மேற்கொண்டு, நன்மை புரிதலிலேயே கருத்தாய் இருக்க வேண்டு மென்றும், வேண்டுவதாயின் உயிரையுந் துறத்தற் கஞ்சாமை வேண்டு மென்றும் கூறுவர் அடிகள்.

சாவஞ்சாமை

அடிகள் இறத்தற்கஞ்சா இயல்பைச் சிறந்தோர் மாட் டமைவதொரு சிறந்த குணமாகத் தம் நூலுள் உணர்த்துகின்ருர். இதற்கஞ்சுவோர் அழியும் உடலில் அளவு கடந்த பற்று உடையோரே ஆவர். உடலில்

அளவுகடந்த பற்றுடையார், தம் உடற் பற்ருல், உட லோம்பும் வாழ்க்கைக்கே தம் நாளைக் கழித்துச், செயற் கருஞ் செயல்களைச் செய்யாதொழிவர். மற்று, வீரஞ் சிறந்த அரசரும் மேலோரும் செயற்கருஞ் செயலில் ஈடுபடுவாராய், இவ்வுடல் அழிவையுங் கருதாது முயன்று, புகழ்பெற்று விளங்குவர். உடற்பற்றுடையார், உணவு தேடுதற்கே நாளைக்கழித்து வீணே யொழிவதை யும், உயிர்க்கஞ்சாது முயல்வோர் அருஞ்செயல்களைச் செய்து புகழ் அடைதலையும் நாம் உலகிற் பலவிடத்துங் காணலாம். உயிர்க்கஞ்சாதோராக அடிகள் சிலரைக் கூறுகின்ருர். அவர், நமையடைந்தார் துயர் துடைப் போர், மானமோம்புவோர், வீரம் வேண்டுவோர். இவர் தம் இம் முக்குணமும், அரசனுக்கு இன்றியமையாது உரியனவென்று கருதி, அரசியல் கூறுகிறவிடத்து இவற்றை உணர்த்துகிருர்.

இம் முக்குணமும் பொருந்திய, உயிர்க்கஞ்சா இவ் வரசனேடொத்து, உயிர்க்கஞ்சாதோராக மற்றிருவரை யும் உடன் குறிக்கின்ருர் அடிகள். அவர்கள் கணவனை இழந்த கற்புடைப் பெண்டிரும், ஐம்புலங் கடிந்த துற வோருமாவர்.

> "களைகணுத் தம்மடைந்தார்க்(கு) உற்றுழியும் மற்ருேர்
> விளைவுன்னி வெற்றுடம்பு தாங்கார்—தளர்நடைய(து)
> ஊனுடம் பென்று புகழுடம்(பு) ஓம்புதற்கே
> தானுடம் பட்டார்கள் தாம்."

இதில், அழியக்கூடிய உடலால் அழியாத புகழைத் தேடிக்கொள்வோரே மேலோர் என்று குறித்தார்.

> "தம்முடை ஆற்றலும் மானமும் தோற்றுத்தம்
> இன்னுயிர் ஓம்பினும் ஓம்புக—பின்னர்ச்

சிறுவரை யாயினும் மன்ற தமக்காங்கு
இறுவரை இல்லை எனின்."

இதில், உடல் ஒருதலையாக அழிவையே உடையது என்றும், ஆதலால் அவ்வுடலிடத்து மிகுந்த பற்று வைத்துத் தமக்கு இழிவைத் தேடலாகாதென்றும் குறித்தார்.

"கலனழிந்த கற்புடைப் பெண்டிரும் ஐந்து
புலனொருங்கப் பொய்யொழிந் தாரும்—கொலைநாட்பில்
மொய்ம்புடை வீரரும் அஞ்சார் முரண்மறலி
தும்பை முடிசூ டினும்."

இதில், மனம் உயர்ந்த நெறியிற் பொருந்தியோர் உடலழிவை ஒரு பொருட்டாகக் கருதார் என்று குறித்தார்.

---

## கரு. அடிகள் அருங்கருத்து

**நல்லோர் துன்புறல்**

இனி, மக்கள் ஐயுறத்தக்க சில பொருள்களைப்பற்றி அடிகள் தெளிவாகத் தம் கருத்தை உரைக்கின்றமை உணரத்தக்கன. உலகில் நல்லார் துன்புறுவதும், அல்லோர் செல்வத்தோடு வாழ்ந்து சிறந்து இருப்பதும் காணக்காண நம் மனத்தில் ஒருவகை மயக்கம் உண்டாகின்றது. இதற்கு அடிகள் கூறும் தெளிவுரை பின் வருமாறு :

> " தெய்வ முளதென்பார் தீய செயப்புகின்
> தெய்வமே கண்ணின்று நின்றொறுக்கும்—தெய்வம்
> இலதென்பார்க் கில்லைத்தம் இன்புதல்வர்க் கன்றே
> பலகாலும் சொல்வார் பயன்."

கடவுள்கொள்கையுடையோர் செய்த தீமைகள் விரைவில் அழியுமாறு, உடனுக்குடன் துன்பத்தைக் கொடுத்து அவரை நன்னெறியில் உய்க்கின்றான் இறைவன். இனிக், கடவுள்கொள்கையற்ற மூடர், தம் மனம்போனவாறு நடந்து, செல்வமே உயிர் என அவற்றையே தேடி நுகர்ந்து, பிறர்க்குத் தீமையே புரிந்து தீமையில் மிகுத்தலால், அவரை உடனுக்குடன் திருத்தல் பயனின்றாய் முடியுமாதலின், அவர்தம் தீவினை மேன்மேலும் மிகுந்துபோயவழி, ஒரே வழியாக மறுமையிலோ மற்றும் பல பிறப்புக்களிலோ தண்டிப்பன் இறைவன். இறைவனின் இச் செயலுக்கு எடுத்துக் காட்டாகத் "தந்தைதம் மனத்துக்கினிய புதல்வர்க் கன்றோ பலகாலும் பயனுடை மொழிகளைக் கடிந்தும் கூறுவர்" என்று கூறுகின்றார். நன்மக்களை அவ்வப் போது திருத்துவதும், தீய மக்களை அவ்வப்பொழுது

திருத்துவது பயனின்ருய்ப் போவதால், அவர் மனம் போனவாறே விட்டு முடிவில் பெரும் துன்பத்துக் காளானபொழுது திருத்துவதும் தக்கனவன்றே?

### தீயோர் செல்வம்

இனித் தீயோர் செல்வத்தைக் குறித்து அடிகள் கூறுவது:

> " தீய செயல்செய்வார் ஆக்கம் பெருகினும்
> தீயன தீயனவே வேறல்ல—தீயன
> நல்லன ஆகாவாம் நாஇன் புறநக்கிக்
> கொல்லும் கவயமாப் போல்."

தீயோர் செல்வத்தால் மகிழ்ந்திருப்பதுபோல் காண் கின்ருேம். ஆயினும் அத் தீயோர் செல்வம் எவ்வளவுக் கெவ்வளவு மிகுந்திருக்கின்றதோ அவ்வளவுக்கவ்வளவு அச் செல்வம் மகிழ்ச்சியைக் கொடுப்பதுபோற் ருேன்றி னும் தீமையே மிகுவிக்கின்றது. ஏனெனில், தீயோ ஞதலின், அவன் மேன்மேலும் பொருளை ஈட்டலும் தீய வழியிலேயாம். இங்ஙனம் தீயவழியில் பொருள் ஈட்டியோன் நல்வழியில் செலவிடுவானே? செல்வச் செருக்காலும் தீய குணத்தாலும் பல தீமைகளையும் புரிந்து தீய காரியத்துக்கே பொருளைச் செலவிடுவன். எவ்வளவுக்கெவ்வளவு பொருள் மிகுந்து இருக் கின்றதோ அவ்வளவுக் கவ்வளவு செல்வச் செருக்கும் தீச்செயலும் மிகுந்து நிற்கும். ஆதலின், அச் செல்வம் மகிழ்ச்சியைக் கொடுப்பதுபோற் ருேன்றி, அவனுக்கு நிறைந்த தீமையையே மேன்மேலும் வளர்க்கிறது. இதற்கோர் உவமையும் அடிகள் அமைத்தனர். காட்டுப் பசு என்னு மொருவகைப் பசுவின் தன்மையைக் கூறு கின்ருர். இது தன்னேடு ஒத்த பிற விலங்குகளை நாவி

ஞல் நக்கும். இங்ஙனம் நக்குதல் அவ் விலங்குகட்கு மிகுந்த இன்பத்தினைக் கொடுக்கும். அவ் விலங்குகள் அவ்வின்பத்திலேயே ஈடுபட்டு மெய்ம்மறந்து நிற்க, இக் காட்டுப் பசு மேன்மேலும் இனிமையாகவே நக்கி, அவ் விலங்கு உருக்குலையுமாறு கொன்றுவிடும். இக் காட்டுப் பசுவினைப் போன்றதே தீயோர் செல்வமென்று கூறுகின்றார்.

நல்லோர் இயல்பு

உலகில் மக்கள் சிலரை நல்லோரென்றும் சிலரைத் தீயோரென்றும் கூறுதல், அவரவரிடத்துக் காணப் படும் குணம் நோக்கியன்றே? நல்லோர் எனப்படுவோர் ஒருவகைத் தீக்குணச் சார்பும் இல்லாதிருத்தலே சிறப்பு.

இது குறித்தே அடிகளும்,

"நல்லா றொழுக்கின் தலைநின்றார் நல்கூர்ந்தும்
அல்லன செய்தற் கொருப்படார்—பல்பொறிய
செங்கட் புலியே(று) அறப்பசித்தும் தின்னுவாம்
பைங்கட் புனத்தபைங் கூழ்."

என்று கூறினர்.

ஆயினும் நல்லோரெனப் படுவோர் எல்லாரும் எல்லா நற்குணங்களும் உடையராயே இருத்தல் வேண்டும் என்றும், அங்ஙனமில்லாதோர் தீயரே என்றும் மதித்துவிடுதல் கூடாது என்றும் அடிகள் நமக்கு வற்புறுத்துக் கூறுகின்றனர்.

"நன்மக்கள் செந்நாத் தழும்பிருக்க நாள்வாயும்
செந்நெறிச் செல்வாரிற் கீழல்லர்—முன்னைத்தம்
ஊழ்வலி யுன்னிப் பழிநாணி உள்உடைவார்
தீய செயினும் சில."

"குணம்நாடிக் குற்றமும் நாடி அவற்றுள்
மிகைநாடி மிக்க கொளல்."

என்ற வள்ளுவர் வாய்மொழிக் கேற்ப, நற்குணம் மிகுந்திருப்பின் நல்லோரென்றும், தீக்குணம் மிகுந்திருப்பின் தீயோரென்றும் கொள்ளலே வேண்டும். மக்களாய்ப் பிறந்தோரிடத்துக் குணமும் குற்றமும் காணப்படல், இயல்பே. மக்கள் பல பிறப்புக்களில் உழன்று உழன்று குற்றம் தேயப்பெற்றுக் குணம் பெருகி மேன்மையுறுவர். ஆதலின் தீக்குணம் ஒன்று காணப்படினும், அவரைத் தீயோரென்று ஒதுக்கும் குணம் மக்கட் கூட்டத்தினிடையே காணப்பட்டால், அம் மக்கட்கூட்டம் நன்னெறி நோக்கிச் செல்வது ஒருநாளு மில்லை.

மேலும் நல்லோர் சில தீமை புரியுமாறு ஏற்பட்டதாயினும், அப்போது அவர் மன நிலையை அடிகள் நன்கெடுத்துக் கூறினர். அவரது மனத்தின் தன்மையை வெளிப்படுத்துவார், "ஊழ்வலி யுன்னிப் பழிநாணி உள் உடைவார்" என்று கூறினர். அந் நல்லோர் பல நல்லியல்பு வாய்க்கப் பெற்றவராயிருந்தும், வழுவியதற்குக் காரணம் அவரது தீ ஊழேயாகக் கொள்க என்று குறிப்பித்தார் அடிகள். தாம் நல்லற நெறியுடையராயிருந்தும் மறந்து வழுவியதற்குக் காரணமாகத், தம் தீயூழையே அவர்களும் கருதுகின்றார்கள்: கருதியதோடு செய்த பழிக்கு நாணுகின்றார்கள்; நாணி மனமுடைகின்றார்கள். இங்ஙனமாவோர் மறுமுறையும் தீமைசெய்வரோ? இங்ஙனம் அவர் அமைய, உலகில் பலர் அவரது பல நல்லியல்புகளையும் கூறிக்கூறி, நாத் தழும்பேறியிருக்கின்றனர். ஆதலின், இத்தகையோர் ஒருசமயம் தீய செய நேரினும், அவரைத் தீயோரென்று அறியாமையால் ஒதுக்காமல், நல்லோரென்றே கொண்டு பயனடைக என்று மக்கட்கு நற்பயனடையுமாற்றையுங் காட்டினர் அடிகள்.

இங்ஙனமே, துறவோர் இயற்கை கூறுகின்ற இடத்தும், துறவோர் தம் நிலையில் தவறலாகாதென்று உணர்த்துபவர்,

> "மெலியார் விழினும் ஒருவாற்ருன் உய்ப
> வலியார்மற் ருென்ருனும் உய்யார்—நிலைதப்பி
> நொய்ய சழக்கென வீழாவாம் வீழினும்
> உய்யுமால் உய்யா பிற."

என்று துறவறம் பூண்ட பெரியோர் வழுவின் எப்பயனு மற்றுக் கெட்டேயொழிவர் என்று கூறி, மனத்தை இறைவனுடியைவித் தொழுகுவோராய் மிக மேலாந் தன்மை எய்தியோர், இவ்வுடற்ருெடர்பால் துறவறத்திற்குப் பொருந்தாத ஓரோ ஒரு இயையாத செய்கையுடையோராய்க் காணப்படினும், அது பழித்தற்கிடமாகாதென்றும் உணர்த்துகின்ருர்.

> "இசையாத போலினும் மேலையோர் செய்கை
> வசையாகா மற்றையோர்க் கல்லால்—பசுவேட்டுத்
> தீயோம்பி வான்வழக்கம் காண்பாரை ஒப்பவே
> ஊனேம்பி ஊன்தின் பவர்."

இதற்கவர் கூறிய ஒப்புமையும் சிந்தித்தற்குரியது. மனம் இறைவனிடத்தே பொருந்தப்பெற்ற துறவோர் இசையாதன ஓரோ வழிச் செய்யின், அவர் உலகம் இன்புற வேண்டிப் பசுவைக் கொன்று வேள்வி செய்வோரை ஒப்பர் என்றும், மற்றையோர் இசையாதன செய்யின், அவர் தம் உடல் வளர்த்தற்குப் பிற உயிர்களைக் கொன்று ஊன் தின்போரை யொப்பரென்றுங் கூறினுர். வேள்வி செய்வோர், உலகம் இன்புறவேண்டுமென்னும் பெருமனம் படைத்தாராதல் போல, இத் துறவோர் தம் மனத்தை இறைவன்பால் ஒன்றவைத்தொழுகும் பெருமைசால் பண்பினரன்ருே? ஆதலின் மனம் உயர்ந்த

விடத்தே பற்றி நிற்க, இவ் வுடற்றொடர்பால் இசையாத ஓரோவழிச் செய்யின், மனத்தின் உயர்வை நோக்க உடற் றொடர்பாம். இச் செய்கை இலதாய் முடியுமன்றோ? இனி, மற்றையோர் இசையாதன செய்யின் அது கொடு மனச் செய்கையன்றே? அவர் உயிர்க்கொலைபுரியும் வன்கணாளரை யொப்பாவதும் விளக்கமன்றே? ஆகவே இத் துறவோர் பெருமையினையும் உணர்ந்து மதித்து நற்பயன்பெறுக என்று மக்கட்கு அறிவுறுத்தினர்.

இனி, உயிர்க்கொலை புரிந்து வேள்வி இயற்றி நன்மையை எதிர்பார்த்தலை விட்டு, உயிர்க்கொலை புரியாது எவ்வுயிரிடத்தும் தண்ணருள் தாங்கி ஒழுகுவது மிகச் சிறந்ததாதல்போல, இசையாதன துறந்தோர் மாட்டுத்தோன்றாத தன்மை சிறந்ததென்றுங் குறிப் பித்தவாறும்.

> " அவிசொரிந்(து) ஆயிரம் வேட்டலின் ஒன்றன்
> உயிர்செகுத் துண்ணாமை நன்று."

அன்றோ? இங்ஙனம் சொல்லக்கிடக்குமாறு உவமை அமைத்த திறம் பெரிதும் வியத்தற்குரியது.

இங்ஙனமெல்லாம் மக்களியற்கையால் ஓரோவழி மேலோர் வழுவினும், அறிவுடையோர் அதைப் பொருட் டாகக் கொள்ளாது, அவரைச் சார்ந்து பயனுறுவர். இதுவே செய்யத்தக்கது என்பதை யுணர்த்தியன்றோ,

> "சிறியர் கெட்டாலும் சிறியரே சிறியர்மற்(று)
> அல்லாதார் கெட்டாலங் கென்னாகும்—சிறிய
> பொன்னின் குடமுடைந்தால் பொன்னாகும் என்னாகும்
> மண்ணின் குடமுடைந்தக் கால்."

என்று ஔவையாரும் அருளினர்.

ஊழும் முயற்சியும்

விதியென்பது மக்கள் பலராலும் பலகாலும் பேசப்படுவது. விதியின் வழி எதுவும் நடைபெறுகிற தென்பது, பலரும் கொள்ளும் உண்மையே. எக்காரிய மும் விதியின்வழியே இயலும் என்பதையே அடி களும் உணர்த்துவாராய்க், "கற்பன ஊழற்றூர்" என்ற விடத்தும் கற்பதற்கும் ஊழேவேண்டுமென்று குறித்தார். பின்னும் ஓரிடத்தில்,

"எல்லை செய்யத் தொடங்கினும் ணோனுமே
[1]அல்லன அல்லவற்றிற் கொண்டுய்க்கும்."

என்று கூறி, தீய ஊழ் தீமையிலேயே கொண்டுசெலுத் தும் என்றும் உணர்த்தினர்.

இங்ஙனம், விதியின் வழியே எல்லாம் நடைபெற் ருலும், அவ்விதியையே நினைந்து முயற்சியை நெகிழ விடுதல் உலகில் பலருடைய இயற்கையாய் இருக்கின் றது. உடல் வருத்தங் கருதி முயற்சியை இழந்திருப்ப தற்கு, விதியைக் காரணமாக்குவர். விதியிருப்பினும் முயற்சியின்றி ஒரு காரியமும் நடவாது. எளிமையான முயற்சியால் நலம் பயக்கும் காரியங்களை விதியை நினைந்து வாளாவிடுவரோ ? ஆதலின் எத்தகைக் காரி யத்திலும் முயற்சியில் சிறிதும் குறைதலாகாது. வருத் தந் தரத்தக்க காரியங்களில் முயலாது, ஊழ்வழி நடக்கு மென்று சொல்வோர்க்கு அடிகள் கூறுவது,

"முயலாது வைத்து முயற்றின்மை யாலே
உயலாகா ஊழ்த்திறத்த என்னுர்—மயலாயும்
ஊற்றம் இறவிளக்கம் ஊழுண்மை காண்டுமென்று
ஏற்ருர் எறிகான் முகத்து."

என்பது.

---

1. அல்லன—தீயூழ்.

மயக்கம் மேற்கொண்டோரும், மறைவு இல்லாத விளக்கை, வீசுகின்ற காற்றெதிரில் கையாலேனும் மறையாமல் ஏற்றுர். அங்ஙனமாக, ஒருவன் எவ்வித முயற்சியும் செய்யாது, ஊழ்வழி நடக்குங் கருமங்கள் நடந்தே தீரும் என்று வறிதே இருத்தல் தகுமோ? ஒருவன் முயற்சி செய்தேயன்றே பயனை எதிர் நோக்கல் வேண்டும்?

இனி, அடிகள் நிலையான பயன் தரத்தக்க வழியில் முயலல் வேண்டுமென்றுங் கூறுகின்றனர்.

பெரும்பாலான மக்கள் தமக்கும் தம்மனைவி மக்களுக்குமாக உணவு தேடியுண்டும், செல்வம் ஈட்டி இன்புற்றும், வேறொரு செயலுமறியாராய், விலங்கினங்கள் போன்று உடலுக்கே யுழைத்து வீணே காலங்கழிப்பர். இவர்கள் உடலோம்புதற்குத் தானும் கருத்துடன் வருந்தி முயலார்: உடல் நலங்கருதாது நாவின்பங் கருதி உண்டு, மனம் போனவாறெல்லாம் ஐம்பொறி இன்பம் நுகர்வதால், உடலுக்கு ஊறு தேடிக்கொள்வர்: உலகில் விலங்கினங்களினின்றும் மக்களை வேறுபடுத்தும் சிறந்த அறிவைத் தானும் பெருக்க முயன்று, கல்லாராய், மக்கள் வாழ்க்கைப் பயனை யடையாராய், அவ்விலங்கினங்களையே யொப்பர்: மற்றும் பொருளீட்டுதற்கண் மட்டும் அவாமிக்குடையராய், அதை ஈட்டற்கே நாளைக் கழிப்பர்; தீய வழியிலும் அதை ஈட்டமுற்படுவர். நல்லுடலும் நல்லறிவும் இல்லாமல் பொருளை மட்டும் ஈட்டின், அதனுல் நல்வழியில் நின்றும் செயற்கருங் காரியங்களைச் செய்தும் சிறந்த பயனையடைதல் இயலுமோ? அப் பொருள் தீச்செயலுக்குங் காரணமாய், அவர்களுக்குத் தீமையையும் மிகுவிக்கும்.

மற்றறிவுடையாரோவெனின், நாவின்பங் கருதாது உடல்நலங்கருதி உணவுண்டும், பொறிகளில் மனம் சென்ற வழி விடாமல் தம்மறிவால் தடுத்து நன்னெறியிற் செலுத்தி நேரிய முறையில் இன்புற்றும், தம்முடலோம்பற் கண் கருத்தாய் முயல்வர். "உடலை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே" என்பது திருமூலர் திருவாக்கன்றோ?

மேலும் மக்கட்கு அறிவே சிறந்ததென்பதையுணர்ந்து, முயன்று கற்று, அறிவை மேன்மேலும் பெருக்கி அறிவின் மேம்பட்டோராவர்: உலகியலுக்கு இன்றியமையாததான பொருளையும் நெறியறிந்து ஈட்டுவர். இங்ஙனம் உடல்வலி அறிவுவலி பொருள் வலியைப் பெற்றோரேயன்றோ, நன்னெறியில் நின்றும், செயற்கருஞ் செயல்களைச் செய்தும், புகழ் மேம்பட்டவராய், மறுமைக்கும் நன்மை தேடிக்கொண்டவராவர்.

இங்ஙனம் உடலோம்பலிலும் அறிவை வளர்த்தலிலும் பொருளை ஈட்டுவதிலும் முயலும்போது, அவற்றைக்கருதியவளவு அடைய இயலாவிட்டாலும், மேலும், மேலும் முயல்வதே அறிவுடையோன் கடமையாகும். இங்ஙனமாகாமல், நிலையான பயன் தரத்தக்க வகையில் முயலும் இம் முயற்சிக்கு அஞ்சி, எளிய காரியங்களையே மேற்கொண்டு, உண்டுறங்கி இன்புற்றுக் காலங்கழித்துத், தமக்கின்பந் தேடிக்கொள்வாராய், நினைந்து துன்பமே மிகுவித்துக் கொள்வோர் பேதையரன்றோ? நிலைத்த பயன் தரத்தக்க மேற்கூறிய நன்முயற்சிகளில் ஈடுபட்டோர், ஒருகால் காரியம் நினைத்தவளவு கைகூடாராயினும், அவரை அறிவுடையோர் இகழார்.

"பொறிஇன்மை யார்க்கும் பழியன்று அறிவறிந்து
ஆள்வினை இன்மை பழி."

என்பது பொய்யாமொழியன்றோ ?

ஆகவே, நிலைத்தபயனுடைய காரியங்கள் முயற்சியால் முற்றுப்பெறுமற்போயினும், மேலும் மேலும் முயலுதலே அறிவுடையோர் செயலாம். விதியை நினைந்து நிலைத்த பயனைக் கைவிடுதல் அறிவற்ற மடவோர் செயலாம். முயன்றால், கைகூடா போன்றிருந்தன கைகூடுதலும் கூடும். இதுபற்றியே அடிகள்,

"உறுதி பயப்ப கடைபோகா வேனும்
இறுவரை காறும் முயல்ப—இறும்உயிர்க்கும்
ஆயுள் மருந்தொழுக்கல் தீதன்றால் அல்லனபோல்
ஆவனவும் உண்டு சில."

என்று கூறினர்.

இறக்குந் தறுவாயிலிருக்கும் உயிர் பிழைக்க வேண்டி, மருந்து கொடுத்தலே செய்யத்தக்கது என்று ஈண்டுக் கூறியது கடைப்பிடித்தற்குரியது. ஒரு சிலர் தாம் நோய் கொண்ட காலத்துங்கூட அந் நோயைத் தீர்த்தற்கு முயன்று வழிகாணுமல், எல்லாம் விதிவழி நடக்குமென் றமைகின்றனர். பொருளைச் செலவிடற்கும், வருந்தி வழி வகைகளை நாடற்கும் மனமிலராய் இங்ஙனம் கூறுவோர் சிலர். என்னே இவர்களின் அறியாமை !

இனி, முயன்றால் ஊழையும் விலக்கலாமென்றும் அடிகள் கூறுவர்.

"ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவின்றித்
தாழா(து) உஞற்று பவர்."

என்பது வள்ளுவர் வாய்மொழியன்றோ ?

இதற்கு அடிகள் ஒரு சான்றுங் கூறுகின்றனர். மார்க்கண்டன் பதினாறு வயதே பெற்று வைத்திருந் தும், தான் தளரா முயற்சியோடு இறைவனை அன்பாற் பிணித்தமையால், என்றும் பதினாறாய்ப் பெற்றனன் என்றனர்.

> "உலையா முயற்சி களைகணா ஊழின்
> வலிசிந்தும் வன்மையும் உண்டே—உலகறியப்
> பான்முளை தின்று மறலி உயிர்குடித்த
> கான்முளையே போலும் கரி."

என்றது காண்க.

ஊழின்வழி யாவும் நடக்குமென்று கூறிய அடிகள், ஊழையும் முயன்றால் வெல்லலாம் என்று கூறி, அதற் கோர் எடுத்துக் காட்டும் கூறினர். இவை முரண்பட் டனபோற் றோன்றினும் இவையே உலகியற்கையாம். இவற்றுள் ஒன்றே கொள்ளற் குரியதென்று கூறின், அது பொருத்தமாவதின்மை யறியப்படும். "ஊழின் வழி யாவும் நடக்கும்" என்பதே உறுதி என்று கொள் வோம். அங்ஙனமாயின், உலகில் யாரும் முயற்சி மேற் கொள்ளல் வேண்டுவதன்று. "ஊழை முயன்றால் வெல் லலாம்" என்பதே உறுதியென்று கொள்ளின், நாம் எடுத்த கருமம் கைகூடாவிடினும் முயன்றுகொண்டே செல்லல் வேண்டும். இங்ஙனம் பலகால் முயன்றும் காரியம் கை கூடாது போதலும் உண்டு. மனங் குன்றாது மேலும் மேலும் தம்மால் இயன்ற முறையெல்லாம் முயன்றாலும், காரியங் கைகூடாவிடத்து மனம் முறிந்தே போகும். ஆதலின், ஊழ் உண்மையாதலை உணர்ந்து, அவ் வுண்மை யுணர்ச்சியால் மனம் தெளியப் பெற்று, மனம் அமைந்தவனாய், மீண்டும் மனவலி பெற்று முயற்சியில் தலைப்படுதலே இயற்கையாம்.

ஆதலின், ஊழ் முயற்சி என்ற இரண்டு சக்கரங்களைப் பெற்றே உலக வாழ்க்கை நடைபெறுகிறதென்றுணர்க. ஆதலின் இரண்டும் ஒத்த வலியுடையன வென்று கொள்க. ஒத்தவலியுடையவாயினும், நாம் ஒன்றைப் பற்றும் பொழுது அதுவே வலியுடையதாகும். இங்ஙனம் ஊழ் முயற்சி என்ற இரண்டுள் ஒன்றை இகழாது, இரண்டையும் தனித்தனி வலிமையுடையன என்று பற்றிச் சென்றாலே வாழ்க்கையில் முன்னேறிச் செல்லலாம். இதுவே அடிகள் கருத்தாதல் தெளிக.

*அரசகாரியம் பார்த்தல்*

கல்வி அறிவால் மேம்பட்டோர் அரசனிடத்து அடிமைப் படாமல் அரசனுக்கும் தலைமையெய்த வேண்டுமென்பதும், மற்றைய மக்கள் அரசனைச் சார்ந்து மேன்மையடைய வேண்டுமென்பதும் அடிகள் கருத்து.

*"வேத்தவை காவார் மிகன்மக்கள் வேறுசிலர்*
*காத்தது கொண்டாங்(கு) உவப்பெய்தார்—மாத்தகைய*
*அந்தப் புறத்தது பூஞை புறங்கடைய*
*கந்துகொல் பூட்கைக் களிறு."*

என்றும்,

*"மன்னர் புறங்கடை காத்து வறிதேயாம்*
*எந்நலம் காண்டுமென் றெண்ணற்க—பன்னெடுநாள்*
*காத்தவை யெல்லாம் கடைமுறைபோய்க் கைகொடுத்து*
*வேத்தவையின் மிக்குச் செயும்."*

என்றும் இருவகையோர்க்கும் உரைத்தனர் அடிகள்.

## கச. நூற்பயன்

அடிகள் தம் நூற் பயனைக் கடைசியாக ஒரு செய்யுளில் முடித்துக் கூறி, மக்கள் கடமையையும் வாழ்க்கைப் பயனையும் தெளிய வடித்துணர்த்துகின்றார்.

கல்வியே மக்களை விலங்குணர்ச்சியினின்றும் நீக்கி, மக்களுணர்ச்சியை வளர்த்து, மக்களை உண்மை மக்களாகவே ஆக்குந் தன்மை யுடைத்தாதலால், முதலில் கற்றல் வேண்டுமென்று கூறினர்.

> "விலங்கொடு மக்க ளனையர் இலங்குநூல்
> கற்றாரோ டேனை யவர்."

இனிப் பல நூல்களையும், தம் அறிவொடு தொடர்பு படாது கிளிபோன்று கற்று, 'நாம் பல நூல்களையுங் கற்று விட்டோம்' என்று அமையாது, கற்றவற்றைத் தம்மறிவால் அறிந்துணர வேண்டும். அல்லாக்கால் கற்றும் பயனின்றாம். இங்ஙனம் கற்றாலே அறிவு வளர்ச்சியுற்று மேன்மையடைவர். ஆகவே, கற்றவற்றை உணர்ந்து அறிவு மேம்பட்டு அறிவுடையராய்த் திகழவேண்டும் என்பதிரண்டாவது.

> "அறிவுடையார் எல்லாம் உடையார் அறிவிலார்
> என்னுடைய ரேனும் இலர்."

இனி, இங்ஙனம் கற்றறிந்தவர் தம்மறிவுடைமையால் செருக்கித் திரியின் அறிவிற்குறைந்தாரென்பதையே காட்டும். அறிவின் பரப்பை யுணர்ந்தவர், தம்மறிவு, முழுதையும் நோக்க மிகச் சிறிதாயிருத்தலின், செருக்குவரோ? ஆதலின், கற்றறிந்தவர் அடக்கமுடையராதல் வேண்டும். இவ்வடக்கம் என்னும்

குணமிருந்தாலே, அது அவரை நன்மையிற் செலுத்தும். ஆகவே இதை மூன்றாவதாகக் கூறினர்.

> "கதம்காத்துக் கற்றடங்கல் ஆற்றுவான் செவ்வி
> அறம்பார்க்கும் ஆற்றின் நுழைந்து."

என்றபடி அடக்க முடையானிடம் பல அறங்களும் தாமே சென்றடையுமன்றோ ?

இனிக், கற்றறிந்தடங்கியோர், கல்வியின் பயனுய்த் தீமையை யொழித்தலையும், நன்மையைக் கொள்ளலையும் கடைப்பிடித்தல் வேண்டுமென்று கூறுகிறார். நன்மை கொளற்குமுன் தீமை யொழித்தல் நிகழ வேண்டுதலின், அதை முற்கூறுகிறார். ஆகவே அறவழி நிற்றலைக் கூறினார். அறவழியே ஒருவனுக்கு இன்பத்தைக் கொடுப்பதும், மறநெறி தீமையைப் பயப்பதும் உறுதியன்றே ? ஆகவே இவற்றை நான்கு, ஐந்தாவதாகக் கூறினர்.

> "தன்னைத்தான் காதல னாயின் எனைத்தொன்றும்
> துன்னற்க தீவினைப் பால்,"

> "அறத்தா றிதுவென வேண்டா சிவிகை
> பொறுத்தானோ டூர்ந்தா னிடை."

என்பன காண்க.

இனி, மறநெறி கடிந்து அறநெறி நின்றாராயினும் துன்பம் நீங்கி இன்பமடைதற்குப், பெற்றதுகொண்டு மனம் நிறைந்து அமைய வேண்டுமென்று கூறுகிறார். மற்று, அவாவைப் பெருக்கிக் கொண்டே சென்றால், அதற்கு முடிவு காண்கிலராய், அழிதற் றன்மையவாகிய இவ்வுலகப் பொருளிடத்தே அழுந்தித் துன்பத்தையே யடைவர். ஆகவே இதை ஆறாவதாகக் கூறினார்.

> "இன்பம் இடையறா(து) ஈண்டும் அவாவென்னும்
> துன்பத்துள் துன்பம் கெடின்."

என்ற உரையையும் நோக்குக.

இனி, அறநெறி நின்று உலகப் பொருளிடத்து அவாவை விரிக்காது நின்றவர், அழியா முடிவிலின் பத்தைத் தரவல்ல இறைவனிடத்தே பற்றுவைக்க வேண்டுமென்று கூறுகின்றார். நிறைந்த இன்பத்தை யடைய விரும்புபவர், உண்மை அறிவின்ப வடிவினனான இறைவனிடத்தே பற்று வைத்தாலன்றோ அதை யடையலாம். அங்ஙனமாகாது, உலகப்பொருளிடத்தே மிகுதியும் அழுந்தப் பெறுதல் துன்பத்துக்கே காரண மாம். ஆகவே இதை ஏழாவதாகக் கூறினார்.

" தனக்குவமை இல்லாதான் தாள்சேர்ந்தார்க்(கு) அல்லால்
மனக்கவலை மாற்றல் அரிது."

அன்றோ ?

இங்ஙனம் இறைவனிடத்தே அழுந்தப்பெற்றோர், நாளடைவில் பிற தொழில் ஒழியப் பெறுவர் என்று கூறுகின்றார். மனமும் அறிவும் இன்பவடிவினனான இறைவனிடத்தே அழுந்தப் பெற்றனவாதலின், வேறு செயலுண்டாதற்கும் வழியுண்டோ ? ஆகவே இந் நிலையை எட்டாவதாகக் கூறினர்.

" இருள்சேர் இருவினையும் சேரா இறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு."

என்று கூறப்படுவதுங் காண்க.

இங்ஙனம் இறைவனிடத்துப் பற்று வைத்து மற்றைச் செயலொழிய நின்றவிடத்து, அன்பே உருவினனாய அவ் இறைவன், தன்மாட்டு அன்பு செய்வார்க்கு அருளுவனாதலின், அவனருளால் மெய் யுணர்ச்சியும் தலைப்படுவர். ஆகவே இந் நிலையை ஒன்பதாவதாகக் கூறினார்.

"கற்(று)ஈண்(டு) மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்
மற்(று)ஈண்டு வாரா நெறி."

என்று மக்கள், கற்றல் முதலாம் பலவகை நிலையில் நின்று, முடிவில் மெய்ப்பொருள் உணர்ந்தவராய், வீட்டு நெறியை எய்துவர் என்று வள்ளுவரும் குறித்தமை காண்க.

"கற்றுங் கறிந்தடங்கித் தீதொரீஇ நன்றாற்றிப்
பெற்றது கொண்டு மனந்திருத்திப்—பற்றுவதே
பற்றுவதே பற்றிப் பணியறநின்(று) ஒன்றுணர்ந்து
நிற்பாரே நீள்நெறிச்சென் றார்."

என்ற செய்யுளால், கற்றல், அறிதல், அடங்கல், தீமை யொழித்தல், நன்றாற்றல், அவாவடக்கல், இறைவ னிடத்துப் பற்றுவைத்தல், செயலொழிதல், மெய் யுணர்தல் என்ற இவையே, மக்கள் கைகொண்டு உய்தி பெறுதற்குக் குமரகுருபரர் காட்டிய வழியாம் என்றுணர்க.

---

## கரு. அடிகள் சொல்லும் செயலும்

> "சொல்லுதல் யார்க்கும் எளிய அரியவாம்
> சொல்லிய வண்ணம் செயல்."

என்பது மெய்ம்மொழியாகும்.

அடிகள் தம் நூலுள் சொன்ன அறிவுரைகளுக்குத் தாமே எடுத்துக்காட்டாய் அமைவது பெரிதும் கருதத் தக்கது.

அடிகள் உலகத்துப் பொருள்களை உள்ளவா றுணர்ந்து முற்றத்துறந்த முனிவராதற் கேற்பத், தம் நூலின் முதற் செய்யுளாகிய கடவுள் வாழ்த்துச் செய்யுளிலேயே, துறவறத்தோர்தம் சிறந்த கொள்கை யாகிய பொருள் நிலையாமையை உணர்த்தி, மக்கள் மனத்தில் அறம் வளரவேண்டி, அம் மனத்தைப் பண்படுத்துகின்றார்.

> "நீரில் குமிழி இளமை நிறைசெல்வம்
> நீரில் சுருட்டும் நெடுந்திரைகள்—நீரில்
> எழுத்தாகும் யாக்கை நமரங்காள் என்னே
> வழுத்தாத தெம்பிரான் மன்று."

இங்கு, இளமை, செல்வம், உடல் என்பனவற்றின் நிலையாமை உணர்த்தப்பட்டன.

ஈண்டு, "என்னே வழுத்தாதது எம்பிரான் மன்று" என்று தில்லைக்கூத்தனை யுணர்த்தியது கருதத்தக்கது. காண முத்தி தரும் இறைவன் தில்லைக் கூத்தனன்றோ? அதனால் குறித்தனர் என்று கொள்ளல் ஏற்புடைத்து. பிறக்க முத்திதரும் தலமும் இறக்க முத்திதரும் தலமும் உளவாயினும், பிறத்தலும் இறத்தலும் நம் செய லாவன அன்மையின் காணமுத்திதரும் தலத்துள்ள

இறைவனைக் குறித்தார். அடிகள் திருவாரூர் சென்று தியாகேசனைத் துதித்ததும், தில்லைக் கூத்தனைக் கண்டு மகிழ்ந்ததும், காசியில் விசுவேசனை வணங்கி வழிபட்டு அங்கேயே உடலை நீத்ததும் நோக்கத்தக்கன. அடிகள்,

"சொல்வளம் மல்லல் வெறுக்கையாம்."

என்று கூறியதற்கேற்பத், தாம் சிறந்த சொற்செல்வத்தைப் பெற்றிருந்தனர் என்பது, அவர் இயற்றிய செய்யுட்களின் சொல்லமைப்பாலும் பொருட் சிறப்பாலும் நன்கு உணரப்படும். இந் நீதி நூலின் செய்யுட்களின் சொல்வளமும் பொருட்சிறப்பும் முன்கூறிய இடங்களிலும், பின்வருவனவற்றிலும் விளங்கிக் கிடத்தலைக் காண்க. மேலும், சொல்வன்மை வாய்ந்த அடிகள் காசியில் உறைந்தபோது நல்லோரவையுள் பல விரிவுரைகள் வழங்கித், தாம் கல்வியில் தலைமை யெய்தி நின்ற தன்மை விளங்கவிருந்தனர். கற்றோர், அவையுள் அறிவுரை வழங்குந் தன்மையினராதல் வேண்டும் என்பதை,

"அவையஞ்சி மெய் விதிர்ப்பார் கல்வியும்.........
பூத்தலிற் பூவாமை நன்று."

என்றவிடத்து உணர்த்தினரன்றோ?

அடிகள், தாம் கல்வியிற் சிறந்து, சொல்வன்மை பெற்று, நல்லோரவையுள் அறிவுரை வழங்கி மேம்பட்டதோடு, உலகில் என்றும் நின்று நிலவத்தக்கனவாய் இந் நீதிநூலோடு, இறைவனைப் புகழ்ந்து வணங்குவாராய்ப் பல நூல்களையும் செய்து உலகோர்க்கு உதவி மேம்பட்டனர். கற்றோர் இங்ஙனம் நூல்செய்தல் கடன் என்பதை,

" கல்வியே கற்புடைப் பெண்டிர் அப்பெண்டிர்க்குச்
செல்வப் புதல்வனே ஈர்ங்கவியா."

என்றவிடத்துக் குறித்தனரன்றோ ?

அடிகள், தாம் கற்றுச் சிறந்ததோடமையாது, பொருள் கொண்டு, காசியில் சிறந்த அறங்களைச் செய்து சிறந்திருந்தனர். கல்விக்கும், கற்றோனுக்கும் பொருள் சிறப்பைத் தரும் என்பதை,

" எத்துணைய வேனும் இலம்பாட்டார் கல்வி
தினைத்துணையும் சீர்ப்பா டிலவாம்."

என்று கூறியதால் உணர்ந்தோமன்றோ ?

அடிகள், அரசராலும் நன்கு மதிக்கப்பெற்று நண்பராகக் கொள்ளப்பட்ட பெருமையினர். மதுரையில் திருமலைநாயகருக்கு நண்பராயொழுகி, அவர் முன்னிலையிலேயே, தாம் இயற்றிய மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழை யரங்கேற்றியமையுங், காசியில் மகமதிய மன்னனால் நன்கு மதிக்கப்பெற்று, அவனிடம் இடம் பெற்றுக்கொண்டு மடம் சமைத்ததும், அங்கு இருந்துகொண்டு மதுரை அரசர் மூலம் பொருள் பெற்றுச் சிறந்த அறங்களைச் செய்துகொண்டு இருந்ததும், இவர் அரசராலும் போற்றப்படும் பெருந்தகையினராயிருந்தனர் என்பதைப் புலப்படுத்தும். இங்ஙனம் அரசரே இவர் பெருமை யுணர்ந்து நண்பு பாராட்டினரன்றி, இவரே அரசர் தொடர்பை விரும்பினாரல்லர்.

"வேத்தவை காவார் மிகன் மக்கள்."

என்று அடிகள் அருளியது காண்க. அடிகள் தாம் செய்த சகலகலாவல்லி மாலையிலும்,

"மண்கண்ட வெண்குடைக் கீழாக மேற்பட்ட மன்னரும்என்
பண்கண்டளவிற் பணியச் செய்வாய்."

என்று 'அரசரும் பணியும் பெருமையை' நாமகள்பால் வேண்டினர். அடிகள்,

> "............................அறவோர்க்கு
> அடிகளே தெய்வம்."

என்று கூறியாங்குத், தம்மை யாட்கொண்ட, திருக் கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனத்து நான்காவது ஞான ஆசிரியராக விளங்கித், தமக்கு ஞானநெறி காட்டிய நல்லவரை இறைவனாகவே கொண்டு ஆட்பட் டொழுகினர். அவரை இறைவனாகவே கொண்டு, பண்டார மும்மணிக்கோவை யென்றதொரு நூல் இயற்றி அவர் திருவடியிற்சாத்தி மகிழ்ந்து, அவர் அருள் பெற்றொழுகித் துறவறநெறியில் மேம்பட்டு வாழ்க்கைப் பயனெய்தினர்.



## கசுஎ. அடிகள் எடுத்தாண்ட பிறநூற் கருத்துக்கள்

அடிகள் குறட்பாக்களிலிருந்து சிறந்த உவமை முதலியவற்றைத் தம் நூலுள் எடுத்தமைத்திருக்கின் றனர்.

> "வாளொடென் வன்கண்ண ரல்லார்க்கு நூலொடென்
> நுண்ணவை அஞ்சு பவர்க்கு."

என்பது குறள். 'ஆண்மையுடையோனுக்கே வாள் பயன்படும்' என்பது ஈண்டுக்கூறிய உவமை. இவ் வுவமை,

> "கண்ணிற் சொலிச்செவியின் நோக்கும் இறைமாட்சி
> புண்ணியத்தின் பாலதே ஆயினும்—தண்ணளியால்
> மன்பதை ஓம்பாதார்க் கென்னும் வயப்படைமற்(று)
> என்பயக்கும் ஆணல் லவர்க்கு."

என்ற இச் செய்யுளில் அமைந்திருத்தல் காண்க. ஆண்மையற்றோன் கொண்ட வாள் அவனது திறமை யின்மையை எல்லோர்க்குங் காட்டி, அவனை இழிவு படுத்தல்போல், குடியோம்பா அரசனுக்கும் அவ்வரச செல்வம் அவனது திறமையின்மையைக் காட்டி, அவனை இழிவுபடுத்தும். மேலும், அவ் வாள் அவனுக்கே கேட்டைத் தருதலும் உண்டு. அஃதேபோல் குடி யோம்பா அரசனது அரச செல்வமும் அவனுக்கே கேட்டையுந் தரும்.

> "வேலொடு நின்றான் இடுவென் றதுபோலும்
> கோலொடு நின்றான் இரவு."

என்ற குறட்பாவில் ஒறுத்தற்றொழில் கொண்டு குடி களைப் பொருள் வேண்டும் அரசனுக்கு உவமையாக,

ஆறலைக்குமிடத்து வேல்கொண்டு நின்ற வேடனைக் கூறினர். இக் கருத்தையே,

> " இன்று கொளற்பால நாளைக் கொளப்பொருள்
> நின்று குறையிரப்ப நேர்படான்—சென்றொருவன்
> ஆவன கூறின் எயிறலைப்பான் ஆறலைக்கும்
> வேடலன் வேந்து மலன்."

என்ற செய்யுளில் அமைத்தார் அடிகள்.

அவ் வரசன் வேடனை யொப்பானெனக் கூறாது, 'அவன் வேடனுமல்லன் வேந்தனுமல்லன்' என்று அவனது இழிதகைமையை நன்கு புலப்படுத்திக் கூறினர். அச்சுறுத்தலோடு வலிந்து பொருள் பறிக்கும் குணமிருந்தும், அவன் நாட்டி லிருத்தலின் வேடலன் என்றும், அரசனுந் தன்மைக்கேற்ப அடைந்தோரை ஆதரிக்கும் குணமின்மையின் வேந்தலன் என்றும் கூறி, அவனது இழிதகைமையை நன்கு வலியுறுத்தினர்.

> "கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி
> எல்லா உயிருந் தொழும்."

என்ற குறட்பாவின் போக்கும்,

> " எவ்வினையரேனும் இணைவிழைச்(சு) ஒன்று இல்லெனின்
> தெவ்வுந் திசைநோக்கிக் கைதொழூஉம்."

என்ற அடிகள் வாக்கும் ஒத்தனவேயன்றோ? அடிகள் திருக்குறள் கருத்துக்களையேயன்றிப் பிறநூற் கருத்துக்களையும் தம் நூலுள் பொன்னேபோற் போற்றி ஆண்டிருக்கின்றனர். எடுத்துக்காட்டாகத்,

> " தம்முடை ஆற்றலும் மானமும் தோற்றுத்தம்
> இன்னுயிர் ஓம்பினும் ஓம்புக—பின்னர்ச்
> சிறுவரை யாயினும் மன்ற தமக்காங்(கு)
> இறுவரை இல்லை யெனின்."

என்பது,

" மான அருங்கல நீக்கி இரவென்னும்
ஈன இளிவினால் வாழ்வேன்மன்—ஈனத்தால்
ஊட்டியக் கண்ணும் உறுதிசேர்ந் திவ்வுடம்பு
நீட்டித்து நிற்கு மெனின்."

என்னும் நாலடிச் செய்யுளின் கருத்தையும் அமைப்பையுமே கொண்டெழுந்ததன்றோ?

" வருந்தி உடம்பின் பயன்கொண்டார் கூற்றம்
வருங்கால் பரிவ திலர்."

என்ற நாலடிச் செய்யுளின் கருத்தை,

"................மெய்ப்பயன் கொண்டார்
சுளியார் சுமைபோடு தற்கு."

என்று கூறித், தம் நூலுள் அமைத்தமை காண்க.

இனிப், பழமொழி என்னும் நூலினின்றும் சில வருமாறு:

" நல்லா றொழுக்கின் தலைநின்றார் நல்கூர்ந்தும்
அல்லன செய்தற் கொருப்படார்—பல்பொறிய
செங்கட் புலியே(று) அறப்பசித்தும் தின்னுவாம்
பைங்கட் புனத்தபைங் கூழ்."

என்ற செய்யுள்,

" ஒற்கந்தாம் உற்ற விடத்தும் உயர்ந்தவர்
நிற்பவே நின்ற நிலையின்மேல்—வற்பத்தால்
தன்மேல் நலியும் பசிபெரி தாயினும்
புன்மேயா தாகும் புலி."

என்ற பழமொழி நூலின் பழமொழியும், கருத்தும் அப்படியே அமைந்ததன்றோ?

" மணிபொன்னும் சாந்தமும் மாலையும் இன்ன
அணியெல்லாம் ஆடையின் பின்."

என்ற பழமொழி யடிகளையே யுட்கொண்டு,

"கற்புடுத்து அன்பு முடித்துநாண் மெய்ப்பூசி
நற்குண நற்செய்கை பூண்டாட்கு."

என்று, உடுத்து என்ற ஆடைக்கேற்ற வினையையும், முடித்து என்ற மாலைக்கேற்ற வினையையும், மெய்ப் பூசி என்ற சாந்திற்கேற்ற வினையையும் கூறி, அன்பாகிய பூமாலையும், நாணாகிய சாந்தமும், நற்குண நற்செய்கை யாகிய மணி பொன்னும், கற்பாகிய ஆடையின் பின்னதே என்று உய்த்துணர வைத்தது பெரிதும் உணரத்தக்கது.

## கஎ. உவமை

அடிகள் உவமையை ஆளுந்தன்மையை நோக்கு வாம். அடிகள் சில பொருள்களுக்கு உவமை கூறுங் கால், ஒரே முதற் பொருளிலிருந்து உவமைப் பொருள் களை எடுத்துக் கூறுகின்றனர். தம் நூலின் முதற் செய்யுளிலேயே உருவக அணியில் இத்தன்மை யமைந் திருத்தலைக் காண்க. உவமை ஒன்றே பலவகை அணி யாகத் தோற்றமளித்தலின், சிறந்த உவமைத் தன்மையே குறிக்கொண்டு அணிகளைக் காண்டலும் ஏற்புடைத் தன்றே?

> " நீரில்குமிழி இளமை நிறைசெல்வம்
> நீரில் சுருட்டும் நெடுந்திரைகள்—நீரில்
> எழுத்தாகும் யாக்கை நமரங்காள் என்னே
> வழுத்தாத(து) எம்பிரான் மன்று."

இச் செய்யுளில் இளமைக்கும், செல்வத்திற்கும், உட லுக்கும் உவமையாக நீரினின்றெழுந்த குமிழியையும், அந் நீரிலேயே எழும் அலையையும், அந் நீரிலேயே எழுதப் படும் எழுத்தையும் கூறி இருப்பதைக் காண்க.

இனி மற்றொன்று வருமாறு:

> " பொதுமகளே போல்வ தலையாயார் செல்வம்
> குலமகளே ஏனையோர் செல்வம்—கலனழிந்த
> கைம்மையார் பெண்மை நலம்போல் கடையாயார்
> செல்வம் பயன்படுவ தில்."

இச் செய்யுளில் தமர் பிறர் என்று பாராது எல்லோ ருக்கும் பொருளை வழங்கும் தலையாயோர் செல்வத்துக் குப் பொது மகளும், தமர்க்கே வழங்கும் இடையாயார் செல்வத்துக்குக் குலமகளும், தமர் பிறர் எவர்க்கும்

வழங்காத கடையாயார் செல்வத்துக்குக் கைம்மை மகளுமாக, மூன்றிடத்தும் ஒரே வகையாகப் பெண் ணினத்திளின்றே உவமை கூறினர்.

இனி மற்றென்று வருமாறு :

“ இடைதெரிந்(து) அச்சுறுத்து வஞ்சித்(து) எளியார்
உடைமைகொண்(டு) ஏமாப்பார் செல்வம்—மடநல்லார்
பொம்மன் முலைபோல் பருத்திடினும் மற்றவர்
நுண்ணிடைபோல் தேய்ந்து விடும்.”

ஈண்டு ‘எளியோரைப் பயமுறுத்தி வஞ்சித்து அவர் பொருளைத் தமதாகக் கொள்கின்றோருடைய செல்வம், பெண்கள் முலைபோல் மிகுந்து தோன்றினாலும், அப் பெண்களின் இடையேபோல் விரைவில் மெலிந்து விடும்’ என்று பெண் என்ற ஒரு பொருளிலேயே இரு உவமைப் பொருளையும் எடுத்துக் கூறினர்.

அடிகள் தம் நூலுள் பல இடங்களில் உவமையாக, உலகியல் ஒழுக்கத்தையே எடுத்துக் கூறுகின்றனர். அவை, உவமையாக அமைதலோடு, சிறந்த ஒழுக லாற்றையும் வலியுறுத்துவனவாயமைந்து, மக்கட்குச் சிறந்த கருத்துக்களை யுணர்த்துகின்றன. அவற்றுட் சில வற்றைக் காண்போம்.

“—நெடுங்காமம்

1. முற்பயக்கும் சின்னீர இன்பத்தின் முற்றிழாய்
பிற்பயக்கும் பீழை பெரிது.”

2. “..................................கடும்பகல்
‘ஏதிலான் பாற்கண்ட இல்லினும் பொல்லாதே
தீதென்று நீப்பரி தால்.’ ”

3. “..................................மனைத்தக்காள்
மாண்பிலள் ஆயின் மணமகன் நல்லறம்
பூண்ட புலப்படா போல்.”

4. " கற்றுத் துறைபோய காதலற்குக் கற்பினள்
பெற்றுக் கொடுத்த தலைமகன்போல்."

உலகில் இல்லறம் மேற்கொள்வாரே பலராகலின், அவ் வில்லறத்துறை நிற்போர்க்கான சிறந்த அறிவுரைகளே ஈண்டு உவமையாக அமைத்திருத்தல் காண்க. காமவின்பத்தினும் கல்வி இன்பம் சாலமிகுந்ததென்றும், அவையில் பேசப்புகுந்து மறதியால் சொல்லிழந்து நிற்போன் கல்வி, ஏதிலான்பாற் கண்ட இல்லினும் பொல்லாதென்றும் கூறப்படுகின்றன. இவ்விடங்களில் உவமேய உவமானங்களுள் அமைந்த வேறுபாட்டை எடுத்துக் குறிப்பித்தார். மற்றைய இரண்டு உவமைகளுள் ஒத்த தன்மை கூறப்படுகின்றன.

ஆன்றோர் பேரின்பத்திற்கு உவமை கூறுமிடத்து, உலகத்தில் எவ்வின்பத்திலும் சிறந்ததான, கண்டு கேட்டு உண்டுயிர்த் துற்றறியும் காமவின்பத்தையே எடுத்துக் கூறுவார்: அதுவே மக்கள் பலர்க்கும் விளங்குமாதலின். மாணிக்கவாசகர் கோவை செய்ததும் பேரின்பத்துக்கு உவமையாக மக்கள் உணருமாறு சிற்றின்பத்தை யுணர்த்தியதாகவன்றோ அமைகின்றது. இச் சிற்றின்பந்தானும் பேரின்பத்தை நோக்க மிக மிகச் சிறிதெனப்பட்டாலும், உலகில் இல்லற மென்னும் நல்லறம் இனிது நடைபெறுதற்கோர் உறுகாரணமாய் நிற்றலை நோக்க இழித்திடப்படாது. அதனாலன்றோ தெய்வப்புலவரான வள்ளுவரும், தம் நூலுள் காமத்துப் பாலை நுதலியதும். அறம் பொருள் இன்பம் வீடென்ற நான்குறுதிப்பொருளுள் இன்பமும் ஒன்றன்றோ? இது கருதியன்றே அடிகளும் இன்பந் துய்த்தலின் இயல்பைக்,

" கருமம் சிதையாமே கல்வி கெடாமே
தருமமும் தாழ்வு படாமே—பெரிதும்தம்

இன்னலமும் குன்றுமே எரிளங் கொம்பனார்
நன்னலம் துய்த்தல் நலம்."

என்று கூறினர். மற்றுக் கழிகாமமே இழித்திடப்படு மென்க. இது கருதி அடிகள்,

" ..............................நெடுங்காமம்
முற்பயக்கும் சின்னீர இன்பத்தின் முற்றிழாய்
பிற்பயக்கும் பீழை பெரிது."

என்று கூறினர். கழிகாமத்தை நெடுங்காம மென்று குறித்தார்.

ஆதலின், இச் சிறந்த காம இன்பத்தைப் பலவிடங் களிலும் உவமையாகக் கூறிச் செல்கின்றனர்.

"கல்வியை அறிவுடையோரே உணர்ந்து இன்புற்று மேலும் கல்வியில் மேலோராவர். அறிவிலான் சிறந்த கல்வி கைவரப் பெறான்" என்றுணர்த்துகின்ற இடத் தில் உவமையாக,

" ஆணவாம் பெண்மை யுடைத்தெனினும் பெண்ணலம்
பேடு கொளப்படுவ தில்."

என்று கூறினர்.

செல்வர் தம் வலியால் எளியோர் செல்வத்தைத் தமதாக்கித் தஞ்செல்வத்தைப் பெருக்கினால் அச் செல்வம்,

"—மட நல்லார்
பொம்மென் முலைபோற் பருத்திடினும் மற்றவர்
நுண்ணிடைபோல் தேய்ந்து விடும்."

என்று கூறினர், இன்பம்பெற அடையத் தொடங்கிய செல்வத்திற்குச் சிறந்த உவமையாயிற்று.

தமரென்றும் பிறரென்றும் பாராது எல்லோர்க்கும் வரையாது கொடுக்கும் வள்ளல்களின் செல்வத்திற்குப்

பொது மகளையும், தமர்க்கே பொருளைக் கொடுத்து வாழும் ஏனோர் செல்வத்திற்குக் குலமகளையும், எவர்க்குங் கொடுக்காது வாழும் உலோபிகளின் செல்வத்துக்குக் கைம்பெண்ணையும் உவமை கூறினர்.

"பொதுமகளே போல்வ தலையாயர் செல்வம்
குலமகளே ஏனையோர் செல்வம்—கலனழிந்த
கைம்மையார் பெண்மை நலம்போல் கடையாயார்
செல்வம் பயன்படுவ தில்."

செல்வத்தால் பிறரை இன்புறுத்தி வாழ்தற்கு இதனினும் சிறந்த உவமை யுண்டோ?

**பொருளின் சிறப்பும் இழிவும்**

இனி, உவமை கூறுமிடத்துச் சிறந்த பொருளுக்குக் கூறப்படும் உவமை சிறப்புடைப் பொருளாயே யிருத்தலும், இழிந்த பொருளுக்குக் கூறப்படும் உவமை இழிந்ததாயே யிருத்தலும், சிறந்து தோன்றி உவமை இலக்கணமாயமையும். இங்ஙனம் அமைத்திருத்தலையுங் காண்போம்:

"வேத்தவை காவார் மிகன்மக்கள் வேறுசிலர்
காத்தது கொண்டாங் குவப்பெய்தார்—மாத்தகைய
அந்தப் புரத்தது பூஞை புறங்கடைய
கந்துகொல் பூட்கைக் களிறு."

இச் செய்யுளில் அரசவை காவாத மேன்மக்களுக்கு அரண்மனை வெளியே கட்டப்பட்டிருக்கும் யானையும், அரசவை காக்கும் மற்றையோர்க்கு அந்தப்புரத்து உறையும் பூனையுமாக, உயர்ந்தோர்க்கு உயர்ந்ததும் மற்றையோர்க்கு இழிந்ததுமான உவமை அமைத்திருத்தல் காண்க. மற்றோரிடத்தும்,

"—கவிழ்மதத்த
கைம்மா வயத்ததே பாகுமற் றெத்திறத்தும்
அம்மாண் பினவே அமைச்சு."

என்று கூறி, அமைச்சனால் இடித்துரைக்கப் படுவோன் எல்லோர்க்கும் இறைவனான அரசனாதலின், அவனுக்குத் தக சிறந்த யானையையே உவமையாக அமைத்தனர்.

மற்றோரிடத்து, அரசன் தன் செல்வம் பலர்க்கும் பயன்பட வாழவேண்டு மென்று கூறவந்தவர்,

> "வாங்கும் கவளத்து ஒருசிறிது வாய்தப்பின்
> தூங்கு களிறோ தயருறு—ஆங்கதுகொண்(டு)
> ஊரும் எறும்(பு)இங்(கு)ஒருகோடி உய்யுமால்
> ஆரும் கிளையோ டயின்று."

என்று அரசனுக்கு யானையையே உவமையாக அமைத்தனர்.

இனி, மேலும் இழிந்த பொருட்கு உவமை கூறுவதைக் காண்போம்.

> "மறைவழிப் பட்ட பழிமொழி தெய்வம்
> பறையறைந்தாங்(கு)ஓடிப் பரக்கும்—கழிமுடைப்
> புன்புலால் நாற்றம் புறம்பொதிந்து மூடினும்
> சென்றுதைக்கும் சேயார் முகத்து."

இச் செய்யுளில் துறவோர் மறைவாகக் கூடா ஒழுக்கத்தைக் கைக்கொண்டனராயின், அவரது அவ்விழி செயல் மறைவாகச் செய்யப் பட்டதாயினும், அஃது உலகெங்கும் அறியப்பட்டுவிடும் என்பதற்கு உவமையாகப், புலால் மறைவாக மூடிவைக்கப் பட்டிருப்பினும், அது தன் நாற்றத்தால் பலராலும் அறியப்பட்டு விடும் என்று, இழிந்த பொருளையே கூறி உணர்த்தியது உணரத் தக்கது.

---

## ௧அ. சொல்லாட்சி

இனி அடிகள் ஏற்ற சொல்லை ஏற்றவிடத்து ஆண்டு, பொருளைத் தெளிவாகவும் அழுத்தமாவும் உணர்த்தும் சொல்லாற்றல் படைத்தவர்.

"நீரில் குமிழி இளமை நிறைசெல்வம்
நீரில் சுருட்டும் நெடுந்திரைகள்—நீரில்
எழுத்தாகும் யாக்கை நமரங்காள் என்னே
வழுத்தாத(து)எம்பிரான் மன்று."

இச் செய்யுளில் 'நமரங்காள்' என்ற சொல்லாட்சி கருதற்குரியது. இச் செய்யுளில் அடிகள் மக்கள் கடைப்பிடிக்கத் தக்க தலையாய கடமையை அறிவுறுத்து கின்றார். அம் மக்கள், தாம்சொல்லும் அறிவுரையில் பற்றுடையராய் அதை ஏற்க வேண்டியும், அவர் மாட்டுத் தாம் அன்புடையராய் அவர் ஆக்கத்திற்கான வழிகூறுதலை அவர் அறியவேண்டியும், அன்பு தோன்றத் தம்மோடு அவர்களையும் உளப்படுத்தி 'நமரங்காள்' (நம்மவர்களே) என்று விளித்துத், தாம் சொல்லக் கருதிய அறிவுரையைக் கூறத் தொடங்கியது உணரத் தக்கது.

இனி மற்றொன்று :

"முற்றும் உணர்ந்தவ ரில்லை முழுவதூஉம்
கற்றனம் என்று களியற்க."

ஈண்டுக் களியற்க என்ற சொல் கருதத்தக்கது. 'எல்லாம் கற்று விட்டோ' மென்று செருக்குக் கொண்டு திரிதல் சிலர்க் கியல்பாதலின், அங்ஙனம் செருக்கற்க என்று கூற வந்தவர், 'களியற்க' என்ற சொல்லை இட்டுரைத்தனர். எல்லாம் கற்றுவிட்டோமென்ற எண்ணம் அவர் மனத்

தில் நிறைந்து, அவரைத் தம் உண்மைநிலை மறக்கச் செய்து, பிற கற்றோர் தம் பெருமையையும் மதியாமற் செய்து, தம்மைத் தாமே உயர்த்திக் கூறிக்கொள்ளவுஞ் செய்து, தம்மை அறிவுடையோர் பலரும் இகழ்ந்து ஒதுக்குமாறு தாழ்வு படவும் செய்கிறது. இச் செய்கை, கள்ளுண்டோன், தன்னிலையு முணராது, பிறர் நிலையு முணராது, தான் மிகவும் வலியுள்ளோனாக நினைத்துப் பிதற்றி, அறிவுடையோர் பலரும் இகழ்ந்து ஒதுக்குமாறு தாழ்வுபடும் செய்கையை ஒத்திருக்கின்றதன்றோ?

'களியற்க' என்பது, 'மகிழற்க' என்று பொருள் படுமாயினும், 'களி' என்னும் சொல், 'கள்ளுண்டு களித்தலை'யே தொடக்கத்தில் குறித்துப், பின்னரே 'மனநிறைந்த மகிழ்ச்சியை' யுணர்த்திற்று. ஆதலின், 'செருக்கற்க' என்று கூறாமல், மேற்கூறிய பொருளை எல்லாம் உள்ளடக்கிக் 'களியற்க' என்று கூறினர்.

'களி' என்ற சொல்லால் இக் கருத்தையே கொண்டு மற்றோரிடத்தும் ஆண்டிருக்கின்றனர். அது வருமாறு:

> "பணியப் படுவார் புறங்கடைய ராகத்
> தணிவில் களிப்பினால் தாழ்வார்க்கு—அணியாது
> இளையாள் முயக்கெனினும் .........."

ஈண்டு அரசசெல்வத்தில் மயங்கி இருக்கின்ற அரசரைத், 'தணிவில் களிப்பினால் தாழ்வார்' என்று குறித்திருக்கின்றார். ஈண்டும் அரசசெல்வம் அவரைக் கள்ளுண்டு களித்தோர்போல் ஐம்பொறியும் தொழிலொழியச் செய்ததென் றுணர்த்தினர்.

இனி மற்றொன்று:

"கண்ணிற் சொலிச் செவியின் நோக்கும் இறைமாட்சி."

ஈண்டுக் கண்ணிற்கு வாயின் வினையாகிய சொல்லலை யும், செவிக்குக் கண்ணின் வினையாகிய நோக்கலையும் இயைத்து, முரண்படத் தோன்றச் செய்து சிறந்த பொருள்களை உணர்த்தினர். 'கண்ணிற் சொலி' என்ற தால், தன்கட்குறிப்பால் பணியாளர்களை ஏவல் கொள்வ தைக் குறித்தார். 'செவியின் நோக்கி' என்றதால், ஒற்றர்களை வைத்தாண்டு நாட்டுச் செய்தியறியும் தன்மையை உணர்த்தினர். மேலும் இங்ஙனம் கூறிய தால், வாயினால் வெளியிட்டுக் கூறுவதுபோன்று மிகவுந் தெளிவாகக் கண்ணாற் குறிப்பிப்போன் என்பதும், தானே நேரிற் கண்டுணர்ந்தாற்போன்று பெரிதும் நம்பிக்கை யான ஒற்றர்களை வைப்பதோடு, ஒரு பொருளையே பல முறை பல ஒற்றர்களால் ஆராய்ந்து தெளிவன் என் பதும் பெறப்பட்டன.

> " அவையஞ்சி மெய்விதிர்ப்பார் கல்வியும் கல்லார்
> அவையஞ்சா ஆகுலச் சொல்லும்—நவையஞ்சி
> ஈத்துண்ணார் செல்வமும் நல்கூர்ந்தார் இன்னலமும்
> **பூத்தலிற் பூவாமை** நன்று."

இச் செய்யுளில் 'பூத்தல்' 'பூவாமை' என்ற சொற்களை அமைத்தது கருதத்தக்கது. அவைக்கு அஞ்சுவோராய்ப் பேசப்புகுந்து பேசமாட்டாது நிற்போர் கல்வியும், அவைக்கு அஞ்சாமல் பேசும் கல்லாதார் வெற்றுரையும், ஈயாதார் செல்வமும், வறியோரின் இனிய குணங்களும் 'பூத்தலிற் பூவாமை நன்'றென்று கூறினர். பூத்தலாவது வெளிப்பட்டுத் தோன்றல். வெளிப்பட்டுத் தோன்றிய வழி இழிவாகிய (தீய) நாற் றமே எங்கும் பரத்தலால், பூவாமல் அரும்பாகவே அடங்கி இருக்க என்று குறித்தார். ஆகவே பூத்தல் பூவாமை என்ற சொல்லால் (நறுநாற்றமன்றித்) தீ

நாற்றம் வெளிப்படுந் தன்மையும், அரும்பு போன்று அடங்கி யிருத்தல்வேண்டும் தன்மையும் பெறப்படு கின்றனவன்றோ? வேறெந்தச் சொல்லமைப்பினும் இப் பொருள்கள் தெளிவாகப் புலப்படாமை யறிக.

"மாகஞ் சிறுகக் குவித்து நிதிக்குவை
ஈகையின் எக்கழுத்த மிக்குடைய—மாகொல்
பகைமுகத்த வெள்வேலான் பார்வையிற் றீட்டும்
நகைமுகத்த நன்கு மதிப்பு."

இச் செய்யுளில் அரசனால் நன்கு மதிக்கப்படுந் தன்மை யைப், 'பார்வையிற் றீட்டும் நகைமுகத்த நன்கு மதிப்பு' என்று கூறினர். 'பார்வையிற் றீட்டுதல்' என்று அவ் வவர்க்குத் தகக்கண்ணோக்கம் செய்தலை யுணர்த்தியமை காண்க. கண்ணோக்கத்தின் தகுதிக்கேற்பவே மதிப்பின் குறைவும் நிறைவும் என்பது, 'தீட்டுதல்' என்ற சொல்லால் உணரப்படும்.

"பிறரால் பெருஞ்சுட்டு வேண்டுவான் யாண்டும்
மறவாமே நோற்பதொன் றுண்டு—பிறர்பிறர்
சீரெல்லாம் தூற்றிச் சிறுமை புறங்காத்து
யார்யார்க்குந் தாழ்ச்சி சொலல்."

இச் செய்யுளில் கூறிய இவ் வுபாயத்தை மறவாது மனத்தகத்தே கொண்டு எக் காலத்தும் அங்ஙனம் நடத்தலிற் றவறலாகாதென்று குறிப்பார் 'நோற்பது' என்ற சொல்லை இட்டுரைத்தார். மேலும் பிறர் புகழைத் 'தூற்ற' வேண்டுமென்று குறித்துத் (தூற்றப்படும் பொருள் பலவிடங்களிலும் பரவுதல் போலப்), பிறர் புகழைப் 'பலரிடத்தும் பரப்பவேண்டு' மென்றார். தீயோர் பிறர் பழிதூற்றலை விரும்பிச் செய்தல்போல, இனும் பிறர் புகழ் கூறுதலை விரும்பிச் செய்யவேண்டு மென்றும் குறித்தார்.

இனி, அடிகள் சொற்களை நயம்பட அமைத்தலையுங் காண்க.

> " உலையா முயற்சி களைகணா ஊழின்
> வலிசிந்தும் வன்மையும் உண்டே—உலகறியப்
> பான்முளை தின்று மறலி உயிர்குடித்த
> கான்முளையே போலும் கரி."

ஈண்டுத் 'தின்று, குடித்த' என்ற சொல்லமைதியை நோக்குக.

இனி அடிகள், சொல்லக் கருதிய மக்களின் செயல், நம் கண்முன் தோன்றுமாறு, தக்க சொற்களை இட்டுரைத்தலைக் கீழ்க்காணும் அடிகளிற் காண்க:

1. புறம்நட்டு அகம்வேர்ப்பார் நச்சுப் பகைமை
2. கைத்துடையான் காற்கீழ் ஒதுங்கும் கடன்ஞாலம்
3. விழலர், விளிவுஉன்னி வெய்து உயிர்ப்பர் மெய்ப்பயன் [கொண்டார்
   சுளியார் சுமைபோடு தற்கு
4. மெய்விதிர்ப்புக் காண்பான் கொடிறுடைத்துக் [கொல்வான்போல்
   கைவிதிர்த்(து) அஞ்சப் படும்
5. அவையஞ்சி மெய்விதிர்ப்பார் கல்வி
6. நெடும்பகல் கற்ற அவையத்(து) உதவாது
   உடைந்துளார் உட்குவருங் கல்வி
7. ஊழ்வலி உன்னிப் பழிநாணி உள்உடைவார்
   தீய செயினும் சில
8. புன்புலால் நாற்றம் புறம்பொதிந்து மூடினும்
   சென்றுதைக்கும் சேயார் முகத்து.

## ௧௬. சொல்லுந் திறம்

அடிகள் மனங்கொள்ளுமாறு வலியுறுத்திக் கூறலில் வல்லவர் என்பதற்கு எடுத்துக்காட்டாகச் சில செய்யுளைக் கீழே காண்போம்:

1. "ஒற்றிற் றெரியாச் சிறைப்புறத்து ஓர்துமெனப்
பொற்றோள் துணையாத் தெரிதந்தும்—குற்றம்
அறிவரிதென் றஞ்சுவதே செங்கோன்மை சென்று
முறையிடினும் கேளாமை யன்று."

ஈண்டு உடன்பாட்டு முகத்தாற் கூறியதையே எதிர்மறை முகத்தானுங் கூறி வலியுறுத்தியவாறு காண்க.

2. ஈகை யரிதெனினும் இன்சொலினும் நல்கூர்தல்
ஓ ஓ கொடிது கொடிதம்மா—நாகொன்று
தீவினைக் கம்மியனல் வாய்ப்பூட் டிடப்படின்மற்(று)
ஆஆ இவரென்செய் வார்."

தீவினைக் கொல்லனால் வாய்ப்பூட் டிடப்பட்டிருத்தலால், அவர் மேல் குற்றமில்லை யென்று சொல்வார் போல், அவரது கொடுந்தீக் குணத்தை யுணர்த்தியவாறு காண்க.

தம்முடை ஆற்றலும் மானமுந் தோற்றுத்தம்
இன்னுயிர் ஓம்பினும் ஓம்புக—பின்னர்ச்
சிறுவரை யாயினும் மன்ற தமக்காங்(கு)
இறுவரை இல்லை எனின்."

மானம் கெட்டவிடத்து, உயிர்வாழ்தல் தக்கதன்று என்று கூறவந்தவர், உயிர்வாழலாம் என்று கூறுவார் போன்று கூறி, இறப்பு இல்லையாயின் என்று இறுதியில் கூறி முடித்தது அவரது சொல்வன்மையை யுணர்த்தும்.

---

## உ௦. புகழ்வது போலப் பழித்தல்

அடிகள் புகழ்வது போலப் பழித்துக்கூறும் வஞ்சப் புகழ்ச்சியமையச் செய்யுள் இயற்றி மனங்கொளுமாறு பொருள்களைக் கூறுவர். அவை வருமாறு :—

"கற்றுப் பிறர்க்குரைத்துத் தாம்நில்லார் வாய்ப்படூஉம்
வெற்றுரைக் குண்டோர் வலியுடைமை—சொற்றநீர்
நில்லாத தென்னென்று நாணுறைப்ப நேர்ந்தொருவன்
சொல்லாமே சூழ்ந்து சொலல்."

ஒருவர் கற்றவழி நில்லாராயினும், தம் சொல்லளவினாலேயே, தம்மைப் பெரியோராகத், தம்மால் கற்பிக்கப்படுவோர் மதிக்குமாறு, தந்திரமாக நடந்துகோடலின், இதுவே பெரியதொரு திறமையாம் என்று கூறியமை காண்க.

"பிறர்க்குப் பயன்படத் தாங்கற்ற விற்பார்
தமக்குப் பயன்வே றுடையார்—திறப்படூஉம்
தீவினை யஞ்சா விறல்கொண்டு தென்புலத்தார்
கோவினை வேலை கொளல்."

'யமதண்டனை யடைவார்' என்பதைத் 'தம்மைத் தண்டிக்கச் செய்து யமனை வேலைவாங்குவர்' என்று கூறியமை காண்க.

## உக. செய்யுள் அமைப்பு

அடிகள் கொண்டுகூட்டுதல் முதலியன இன்றி, ஆற்றொழுக்காகப் பொருள் கொள்ளுமாறு, செப்பலோசை சிறக்க வெண்பா அமைக்குந் திறத்தினர். எடுத்துக் காட்டாகச் சிலவற்றைக் காண்போம்:—

1. ஒற்றிற் றெரியாச் சிறைப்புறத்து ஓர்துமெனப்
   பொற்றோள் துணையாத் தெரிதந்தும்—குற்றம்
   அறிவரிதென் றஞ்சுவதே செங்கோன்மை; சென்று
   முறையிடினும் கேளாமை யன்று."

2. இகழின் இகழ்ந்(து)ஆங்(கு) இறைமகன் ஒன்று
   புகழினும் ஒக்கப் புகழ்ப—இகன்மன்னன்
   சீர்வழிப் பட்டதே மன்பதைமற்; றென்செய்யும்
   நீர்வழிப் பட்ட புணை.

3. முறையும் குடிமையும் பான்மையும் நோக்கார்
   நிறையும் நெடுநாளும் பேணார்—பிறிதுமொரு
   பெற்றிமை பேதைமைக் குண்டே பெரும்பாவம்
   கற்பின் மகளிர் பிறப்பு."

இவ்வெண்பாக்களில், சிறப்பாகக் கடை இரண்டடிகள் பேச்சு முறையிலேயே அமைந்திருத்தல் காண்க.



